# கவிஞன் குரல்

பேராசிரியர்:
டாக்டர் ந. சுப்புரெட்டியார்




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

# கவியன் குரல்

ஆசிரியர்
பேராசிரியர், டாக்டர் ந. சுப்பு ரெட்டியார்




அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலைநகர்

1989

# பொருளடக்கம்

பேராசிரியர், கலைமாமணி, தமிழாகரர்,
டாக்டர் ஆறு. அழகப்பன்,
தமிழியல் துறைத் தலைவர்,
முதன்மையர் இந்திய மொழிப்புலம்,
அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

## அணிந்துரை

அண்ணாமலைப் பல்கலைக் கழகச் சிறப்புப் பொழிவுகள் திட்டத்தின்கீழ், பேராசிரியர் டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் அவர்கள் தமிழியல் துறையில் நிகழ்த்திய மூன்று பொழிவுகள் 'கலியன் குரல்' என்ற தலைப்பின்கீழ் இந்நூலாக வெளிவருகின்றது.

பேராசிரியர் ந. சுப்பு ரெட்டியார் அறிவியல் ஆசிரியராகத் தம்பணியினைத் தொடங்கி, தலைமை ஆசிரியராகப் பொறுப் பேற்றுப் பின்னர் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் பணியாற்றியவர். ஆழ்வார் அருந்தமிழால் ஈர்க்கப் பெற்று வித்துவான், முனைவர் பட்டங்கள் பெற்றுத் திருவேங்கடவன் பல்கலைக் கழகத் தமிழியல் துறைத் தலைவராகப் பல்லாண்டுகள் பணியாற்றி ஓய்வு பெற்ற அறிஞர். ஆங்கிலம் மற்றும் தமிழ் நூல்களைக் கசடறக் கற்ற புலமையாளர்; தமது சிந்தனைகளை நூலாக்கும் திறம் பெற்றவர். ஓயாத உழைப்பாலும் எழுத்தாற்றலாலும் இலக்கியம் சமயம், திருத்தலப்பயணம், திறனாய்வு, வரலாறு, அறிவியல், ஆராய்ச்சி, பயிற்று முறை என்று பல்வேறு துறைகளில் தமிழிலும் ஆங்கிலத்திலுமாக எண்பத்தைந்திற்கு மேற்பட்ட நூல்களைத் தமிழன்னைக்கு அளித்துச் சிறந்து விளங்குபவர்; இன்று வளர்ந்து வரும் அறிவியல் தமிழுக்கு இவர் ஒரு முன்னோடி.

டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் கடந்த இருபத்தெட்டு ஆண்டுகளாக ஆழ்வார் அருளிச் செயல்களிலும் வைணவ தத்துவங்களிலும் கொண்ட ஈடுபாட்டின் காரணத்தால் 'கலியன் குரல்' என்ற பொதுத் தலைப்பில் 'கலியனின் வாழ்வும் வழியும், அருளிச் செயல்கள் – இலக்கிய இன்பம், அருளிச் செயல்கள்–தத்துவக் கருத்து என்ற மூன்று ஆராய்ச்சிப் பொழிவு

களை நிகழ்த்தினார்கள். கலியன் என்பது திருமங்கையாழ்வாரின் திருபெயர்களில் ஒன்று. இப்பொழிவுகளின் வழி அமைந்த இந் நூலில், ஆசிரியர் கலியனின் வாழ்வு பற்றிய உண்மைகளை ஆழ்வார் பாசுரங்களிலிருந்து அகச்சான்றுகள் தந்து நிறுவியுள்ளார்; கலியனின் அருளிச் செயல்களை எடுத்துரைத்துப் பக்திச் சுவையினையும் கவிநயனுபவத்தையும் விரித்துரைத்துள்ளார். திருமங்கையாழ்வார் 'நாலுகவிப் பெருமாள்' என்று சிறப்புப் பெற்றவராதலால் அவர்தம் பெரும்புலமையினை எளிதாக விளக்கியுள்ளார். அவர் தம் பதிகங்கள் சிலவற்றில் நாட்டுபுற இலக்கியக் கூறுகள் அமைந்துள்ளதனைச் சுவைபட மொழிந்துள்ளார். இறுதிப் பொழிவில் ஆழ்வார் பாசுரத்தின் வழி அறியப் பெறும் வைணவ தத்துவக் கருத்துக்களை விரித்துள்ளார். திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் செய்த திருத்தலங்கள், 108 வைணவ திவ்விய தேசங்கள், பொருட் குறிப்பு ஆகியன, பின் இணைப்பாகத் தரப் பெற்றுள்ளன. சுருங்கக் கூறின் இந்நூல் நல்லதொரு ஆராய்ச்சி நூலாகும்.

இப்பொழிவுகள் நிகழக் காரணமாக இருந்த இந்திய மொழிப் புலக்குழு உறுப்பினர்களும் ஆட்சிக்குழு உறுப்பினர்களும், மாண்பமை துணைவேந்தர் பேராசிரியர் இராம. சேதுநாராயணன் அவர்களும் நன்றிக்குரியவர்கள் ஆவர். தந்தை வழி, தமிழ் மொழியை வளர்த்து வருகின்ற மாண்பமை இணைவேந்தர் டாக்டர் மு. அ. மு இராமசாமி அவர்களுக்கும் நூலாசிரியரும் துறைத்தலைவரும் தனித்த முறையில் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளார்கள்.

இப்பொழிவுகளை அச்சுக்குக் கொண்டு வரத்துணை நின்ற தமிழியல்துறை நூல் வெளியீட்டுப் பொறுப்பாளர் இணைப் பேராசிரியர் டாக்டர். வெ. பழநியப்பன் மற்றும் நூலினை விரைந்து அச்சிட்டு வெளிக் கொணர்ந்த பல்கலைக்கழக நூல் வெளியீட்டுத் துறைப் பொறுப்பாளர் வெ. இலக்குமணன் ஆகியோருக்கும் எம் நன்றி. நூலினைச் சிறப்புற அச்சிட்ட சிதம்பரம் கஜேந்திரா அச்சகத்தார் பாராட்டுகுரியவர் ஆவர்.

டாக்டர் ஆறு. அழகப்பன்
தமிழியல் துறைத் தலைவர்

## 1. கலியனின் வாழ்வும் வழியும்

நேயர்களே,

வணக்கம். பல்கலைக்கழகம், சொற்பொழிவுகள் நிகழ்த்துமாறும், எனக்கு வாய்ப்பான நாட்களைத் தெரிவிக்குமாறும் கேட்டது. செயல் துடிப்பும் அதனை ஆற்றும் திறனும் மிக்க புதிய தமிழ்ப்பேராசிரியர்துறைத்தலைவர் டாக்டர் ஆறு. அழகப்பனின் அன்புதான் இதற்குக் காரணம் என்பதை ஊகித்து அறிந்து கொண்டேன். வள்ளல் அண்ணாமலைச் செட்டியார் அவர்களால் சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன்பு தோற்றுவிக்கப் பெற்ற 'அண்ணாமலைப் பல்கலைக்கழகம்' தமிழ்வளர்ச்சிக்காகத் தோற்றுவிக்கப் பெற்ற பல்கலைக்கழகம் என்ற எண்ணத்தை மக்களிடம் நிலைநாட்டியது. இயற்றமிழையும், இசைத்தமிழையும் அன்றுமுதல் இன்று வரை இருகண்களெனப் போற்றி வளர்த்து வருவதை இந்திய மண்ணில் பிறந்த மக்கள் அனைவருமே நன்கு அறிவர். புதிதாக நியமனம் பெற்ற டாக்டர் ஆறு. அழகப்பன் நாடறிந்த நாடக ஆசிரியர், நாடக இயக்குநர் என்பதை நாம் அறிவோம். இவர்காலத்தில் நாடகத் தமிழும் பல்கலைக்கழக வளாகத்தில் வேர்விட்டு வளரும் என்பதை நாம் உறுதியுடன் எதிர்பார்ப்போமாக.

பதினைந்து ஆண்டுகளாக உறங்கிக் கிடந்த 'பல்கலைக் கழகச் சிறப்புச் சொற்பொழிவுகள்' என்ற திட்டத்தைத் திருப்பள்ளி எழுச்சியால் எழச்செய்து செயற்படுத்திய புதிய தமிழ்ப் பேராசிரியருக்குத் தமிழ் கூறு நல்லுலகம் மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது. கரும்பு தின்னக் கூலிகொடுக்கும் இப்பல்கலைக் கழகத்தாருக்கும்,[1] தமிழ்த்துறையினருக்கும் என் உளங்கனிந்த

1. குறள் - 399 (பரிமே. உரை) சிவப்பிரகாசர். வெங்கையுலா- கண்ணி - 60.

நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன். திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தில் ஓய்வு பெற்று ஏழாண்டுகள் கழிந்த பிறகு மூன்று திங்கள் விருந்துப் பேராசிரியராகப் (Visiting Professor) பணியாற்றிக் கொண்டிருந்த பொழுது இந்த அழைப்பு வந்தது. "பக்தனே, சிதம்பரம் சென்று கோவிந்தராசனைச் சேவித்து அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வைணவ இலக்கியம் - தத்துவம் பற்றி மூன்று பொழிவுகள் நிகழ்த்தி வா' என்று ஏழுமலையப்பனே என்னைப் பணித்ததாகக் கருதி இங்கு வந்துள்ளேன். **'கலியன் குரல்'** என்ற தலைப்பில் என் பேச்சுகளை அமைத்துக்கொண்டு (1) கலியன் வாழ்வும் வழியும் (2) அருளிச்செயல்களில் இலக்கிய இன்பம், (3) அருளிச் செயல்களில் தத்துவக் கருத்துகள் - என்ற மூன்று தலைப்பில் உரைநிகழ்த்தத் திட்டமிட்டுள்ளேன். அவற்றுள் முதல்பொழிவு இன்று நடைபெறுகின்றது.

**தலைப்பைத் தேர்ந்தெடுத்த காரணங்கள்:** இந்தத் தலைப்பைத் தேர்ந்தெடுத்தமைக்குக் காரணங்கள் உள்ளன. **முதலாவது** இந்தப் பல்கலைக் கழகம் (அண்ணாமலைப் பல்கலைக் கழகம்) திருமங்கையார் பிறந்த திருக்குறையலூரும் வாழ்ந்து, ஆட்சி புரிந்து, ஆழ்வாரான நிலப்பகுதிக்கு அருகிலுள்ளமை. **இரண்டாவது:** இவர் ஆண்ட நிலப் பகுதியிலேயே திருநாங்கூர்த்திருப்பதிகள் பதினொன்றும், திருமங்கையாழ்வார் மிகவும் ஈடுபாடுகொண்ட திருவாலி - திருநகரி என்ற திருப்-பதியும் உள்ளமை. **மூன்றாவது:** வயலாலி மணவாளன் ஆழ்வாரை ஆட்கொண்டமை. **நான்காவது:** குமுதவல்லி நாச்சியார் வளர்ந்த இடமான திருவெள்ளக்குளம் என்ற திவ்வியதேசமும் (திருநாங்கூர்த்திருப்பதிகளுள் ஒன்று) அருகில் உள்ளமை. இப்பகுதித் திருத்தலங்களை மங்களாசாசனம் செய்த பதினான்கு திருமொழிகள் உள்ளன. **ஐந்தாவது:** சைவமும் வைணவமும்

எவ்விதக் காழ்ப்புமின்றி இருப்பதற்கு அறிகுறியாகத் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆடலரசனும் கோவிந்தராசனும் அருகிலேயே —ஒரே சந்நிதியில் திருக்கோவில் கொண்டுத் திகழ்வதும் ஒரு காரணமாக கொண்டேன் என்பதை உங்கள் முன் தெரிவித்துக் கொள்கின்றேன்.

**கலியன்:** முதலாவதாக இந்தக் கலியன் யார் என்பதைத் தெரிவிக்க வேண்டும்; தெரிவிப்பேன். சோழ மண்டலத்தில் '**திருவாலி நாடு**' என்ற ஒருபகுதியுண்டு. இதுவே '**மங்கைநாடு**' என்று கருதவும் இடமுண்டு. இப்போது சிறப்புடன் திகழும் 'திருநகரிப்' பகுதியைச் சார்ந்தது (இப்போது தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ளது). சோழ வேந்தனின் சேனைத்தலை வராகத் திகழ்ந்தவர் நீலன் என்பார். இவர் 'களளர்குலத்'' தைச் சார்ந்தவர்.[2] இவருக்குத் திருமகனாகப் பிறந்தவர் இவர். பிறந்த ஆண்டு நள என்பது; மாதம் கார்த்திகை; நாள் முழுமதியம் கூடிய கிருத்திகை நட்சத்திரம். '**கலந்ததிருக் கார்த்திகையில் கார்த்திகை வந்தோன் வாழியே**' என்பது, இவரது வாழித் திரு நாமம். இவருக்குப் பெற்றோர் இட்ட பெயர் **கலியன்** என்பது. இவரே பின்னர் திருமங்கையாழ்வாராகின்றார்.

தந்தையாருக்குப் பிறகு கலியன் ஆலிநாட்டின் தலைவ ராகவும் சோழ மன்னனின் தானைத் தலைவராவும் விளங்கு கின்றார். இவருக்கு **நீர்மேல் நடப்பான், நிழலிலொதுங்குவான், தாள் ஊதுவான், தோலாவழக்கன்** என்ற அமைச்சர்கள்

---

2. Tamil Studies என்பதன் ஆசிரியர் எம். சீநிவாச அய்யங்கார் Thief's Caste' என மொழி பெயர்த்துக் கொடுத்தார்!

இருந்தனர். இவர் ஏறி இவரும் குதிரை ஆடல்மா என்பது. இவர் இகவுலக வாழ்க்கையில் மிகவும் அதிகமாக ஈடுபட்டுக் கையில் வாளேந்திய கோலத்துடன் திரிந்து கொண்டிருந்தார். இப்படியிருந்த நாளில் ஆலி நாட்டைச் சேர்ந்த திருவெள்ளக்குளம் என்ற ஊரில் மருத்துவத் தொழிலை மேற்கொண்ட ஸ்ரீ வைணவர் ஒருவர் இருந்தார். இவருக்கு மகப்பேறு இல்லாதிருந்தது. வெள்ளக் குளம் என்ற ஊரிலுள்ள தாமரைப் பொய்கையில் சில தேவ கன்னிகையர் நாடோறும் நீராடும் வழக்கத்தை மேற்கொண்டிருந்தனர். ஒரு நாள் திருமா மகளும் தேவகன்னிகை வேடம்தரித்துக் கொண்டு அவர்களுடன் குமுதமலர் கொய்து கொண்டிருந்தாள். ஏனையவர் நீங்கிப்போக இவள் மட்டிலும் மானிட உருவை மேற் கொண்டுத் தனித்து நின்றாள். அப்போது மருத்துவர் அந்த இடத்திற்கு அநுட்டானத்தின் பொருட்டு வர நேர்ந்தது. அவர் தனித்து நிற்கும் இப்பெண் பிள்ளையைக் கண்டு ''பிள்ளாய், நீ யார்? தனித்து நிற்கக் காரணம் என்ன?'' என்று வினவ, அவளும் ''கூடவந்த மகளிர் என்னை விட்டு நீங்கினர்; இனி என்னை உம்மோடு வைத்துக்கொள்ளுவீர்'' என்று தான் வந்த வரலாற்றை விரித்துரைத்தாள். மகப்பேறு இல்லா அந்தப் பாகவ தோத்தமர் மிகவும் உகப்புடன் இவளை யழைத்துக் கொண்டு போய்த் தன் துணைவிக்குக் காட்டித் தந்தார். அந்த அம்மை யாரும் இவளை மிக்க மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டார். இவள் குமுதமலர் கொண்டு நின்றதுவே காரணமாக குமுத வல்லியார் என்ற திருநாமமிட்டு அவர்கள் வளர்த்து வந்தனர்.

இச்செய்தி கலியன் செவிக்கு எட்டியது. 'நின்றவா நில்லா செஞ்சினை' யுடையராய் மருத்துவ பாகவ தோத்த மரைச் சந்தித்து அவருடன் உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது அப்பெண்பிள்ளை ஏதோ காரியமாக இல்லத்திலிருந்து புறத்தே வரக் கண்டார்; அப்பெண்ணின் எழில் திரு மேனியும் அன்ன நடையும் மருண்ட மான்நோக்கும் கலியனைக் கவர்ந்தன. அப்பெண் தம்மை அடைந்த வரலாற்றைக் கூறினார். அவள் திருமணம் பற்றியும் கவலை தெரிவித்தார். உடனே கலியன் தாம் அவளை மணப்பதாகக் கூறினார். வளர்ப்புத்தாய் தந்தையர் அவளை இவருக்குத் தர யோசித்துக் கொண்டிருக் கையில், அவள் ''திருவிலச்சினையும் பன்னிரு திருமண்காப்பும் உடையவர்க்கொழிய மற்றொருவருக் கென்னைப் பேசலொட் டேன்' என்று தன் குறிக்கோளைத் தெரிவித்தாள். கலியனும் திருநறையூர்[4] சென்று அங்கு எழுந்தருளியுள்ள நம்பி திருமுன்பு திருவிலச்சினை பெற்று பன்னிரண்டு திருமண்காப்புகளையும், தரித்துக்கொண்டு வந்தார். குமுதவல்லியார் கலியனைப் பார்த்து, ''ஓராண்டு நாடோறும் 1008 ஸ்ரீ வைணவர்கட்கு அமுது செய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தமும் பிரசாதமும் உண்டு நிறைவேற்றினாலொழிய நான் தங்களைக் கணவனாக ஏற்றுக்கொள் வதற்கில்லை'' என்று ஒரு நிபந்தனை விதித்தாள். இவரும் அவள்மீது கொண்ட ஆராக்காதலாலே அங்ஙனம் செய்வதாக வாக்குறுதி செய்து தந்தார்; நிபந்தனையை நிறைவேற்றவும் செய்தார். அதன்பிறகு குமுதவல்லியாரை ''நாடும் ஊரும் அறியக் கண்ணாலம் கோடித்துக் கலியனைக் கைபிடிக்கச்'' செய்தனர் குமுதவல்லியின் வளர்ப்புப் பெற்றோர் கள்.

---

3. பெரி. திரு. 1, 1.:4

4. கும்பகோணத்திற் கருகிலுள்ள 'நாச்சியார் கோயில்' எனவழங்கும் ஊர்,

**ததியாராதனை:** கலியன் தன் கையிலகப்பட்ட செல்வத்தையெல்லாம் பாகவதர்கட்கு அமுது படைத்திடுவதிலேயே செலவழித்தார். அரசனுக்குச் சேரவேண்டிய பகுதிப் பணமும் இதிலேயே கழிந்தது. நாளடைவில் இவரது செயல் வெளிப்பட அரசன் இவரை ஒரு தேவாலயத்தில் காவலில் இட்டான் என்றும், பின்னர் கலியன் மூன்றுநாள் அமுதுசெய்யாமல் உபவாசம் இருந்தார் என்றும், பிறகு காஞ்சிப் பேரருளாளர் (வரதராசர்) திருவருளால் இவர் பெரும்பொருளைக்[5] கச்சியிற் பெற்று அரசனுக்குரிய கப்பப் பணத்தைக் கொடுத்து தம் கடனைத்தீர்த்துக் கொண்டார் என்றும், மிகுதிப் பணத்தைத் ததியாரா–தனத்தில் செலவழித்தார் என்றும் குருபரம்பரை முதலிய வரலாறுகள் கூறும்.

இந்த நிகழ்ச்சியின் பின்னரும் ததியாராதனை செய்யமுடி–யாமல் பொருள் முட்டுப்பாடு ஏற்பட்டது. தாம் நீர்மேல் நடப்பான் முதலிய நால்வரையும் துணை கொண்டு ஆறலைத்தாகிலும் பொருளீட்டி இப்பொருளைக் கொண்டு ததியாராதனையை இடைவிடாது நடத்த வேண்டும் என்று உறுதிகொண்டு அந்த அடாத செயலிலும் இறங்கினார். ஒருநாள் திருமணம் கொல்லை என்ற ஊர்ப்புறத்தில் ஓர் அரசமரத்தில் பதுங்கியிருந்தார். அப்பொழுது அந்தணர் ஒருவர் மணவாளக் கோலத்துடன் புது மணம் புணர்ந்த தம் மனைவியுடன் எல்லாவிதப் பொன் அணிகளைப் புனைந்து கொண்டு அதிகச் செல்வத்துடனும் பெருந்திரளுடனும் சென்று கொண்டிருந்தார். இதனைக் கண்ட கலியன் வாளும் கையுமாய்ப் பரிவாரங்களுடன் இவரை வளைத்துக் கொண்டார். தம்பதிகளின் அணிகளையெல்லாம் கழற்றச் செய்து அவற்றை ஒரு மூட்டையாகக் கட்டினார். திருமணமான

5. வேகவதி தீரத்தில் பொருள் புதைந்து கிடக்கும் இடத்தை அண்டையானமாகக் காட்டியருளினதாக வரலாறு கூறுகின்றது.

வராதலால் கால் விரலில் பொன்னாலான அறு காழி மோதிரம் (மெட்டி என்றும் சொல்வர்) காணப்பட்டது. அதையும் கழற்றித் தருமாறு கேட்டார்; கழற்ற முடியவில்லை. உடனே மாப்பிள்ளையின் காலைப் பிடித்துக் கொண்டுத்[6] தம் பல்லால் கடித்து வாங்கினார். கட்டிவைத்த மூட்டையைத் தூக்க முயலும் போது தூக்க முடியவில்லை; பேர்க்கவும் முடியவில்லை. உடனே மறையவரை நோக்கி "நீர் ஏதோ மந்திரம் செய்தீர்" என்று சொல்லி நெருக்க, "அந்த மந்திரத்தை உமக்கும் சொல்லுகின்றேன்" என்று கழுத்தை அணைத்தார். கலியனும் சம்மதித்து, "நீர் சொல்லாவிடில் இந்த வாளுக்கு இரையாவீர்" என்று தம் கையிலுள்ள வாளைக் காட்டி அதட்டினார். உடனே மறையவரும் மூன்று பதமாய்,[7] எட்டு எழுத்துகளாய்[8] இலங்கும் சகல வேதசாரமான திருமந்திரத்தைக் கலியனின் வலத்திருச் செவியில் செவிக்கின்பமாய் முன்பு நர-நாராயணராய்த் தமக்குத் தாமே சொல்லிக் கொண்ட குறைதீர உபதேசித்தார். அன்றியும், தாமும் பெரியதிருவடிமேல் காளமேகம் போன்ற திருமேனியுடன் (திவ்விய மங்கள விக்கிரகத்துடன்) சேவை சாதித்தார். இவ்வாறு வழிப்பறி செய்யப்பட்டவர் ஆண்டாளை மணம் செய்து வந்த திருவரங்க பெருமாளே என்று ஆழ்வார்களைபற்றிக் கூறும் **திவ்வியசூரி சரிதம்** குறிப்பிடும்.

இங்ஙனம் யாதொரு காரணமும் பற்றாது கிடைத்த திருமந்திரத்தையும், அதற்கு உள்ளீடான சீமந் நாராயணனுடைய சொரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களையும்,

6. பிரபத்தி (சரணாகதி) ஆகிவிட்டது.
7. மூன்றுபதம் = ஓம் + நமோ + நாராயணாய
8. எட்டு எழுத்தாய் = ஓம் (1) + நமோ (1+1) + நாராயணாய (1+1+1+1+1) = 8

அருள்மாரி என்னும்படியான பெரிய பிராட்டியாரின் அருளினாலே கண்டு அநுபவிக்கின்றார்; தானும் திருமங்கையாழ்வார் என்ற பெயருடன் ஆழ்வாராகின்றார். இந்த அநுபவத்தின் விளைவாக,

வாடினேன்; வாடி, வருந்தினேன் மனத்தால்;
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன்; கூடி, இளையவர் தம்மொடு
அவர்தரும் கலவியே கருதி
ஓடினேன்; ஓடி, உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் திரிந்து
நாடினேன்; நாடி, நான்கண்டு கொண்டேன்
நாரா யணாஎன்னும் நாமம்.[9]

[பொருந்துயர் -- அளவற்ற துக்கங்கள்; இடும்பை -- துன்பம்; இளையவர் - பெண்கள்; உணர்வு எனும் பெரும்பதம் - ஞானம்]

என்ற முதல் திருமொழியின் முதற்பாசுரம் தொடங்கி பத்துப் பாசுரங்களால் முதல் திருமொழியை முடிக்கின்றார். இதன் தொடர்ச்சியைப் பின்னர் விளக்குவேன்.

**திருமந்திரத்தின் வரலாறு:** இந்த இடத்தில் 'திருமந்திரம்' என்னும் மூலமந்திரம் பிறந்த வரலாற்றைத் தெரிவிப்பது இந்தப் பொழிவிற்குப் பொருத்தமாகும் எனக் கருதுகின்றேன்.

9 பெரி. திரு 1.1;1

சமுசாரிகள் பகவானுக்கு அடிமைப் பட்டிருத்தலையே இயல்பாகப் பெற்றவர்கள் என்று சாத்திரங்கள் கூறும். இது 'சேஷப்பட்டிருத்தல்'[10] என்று சொல்லப்படும். இந்த இயல்பை, இவர்தம் இந்த நிலையை, எப்படியோ இவர்கள் மறந்து விடுகின்றனர். ஒருகாரணமும் இன்றியே ஆட்கொள்பவனாகிய பகவானுடைய தன்மையையும் மறந்து விடுகின்றனர். பகவானுடைய இந்தத்தன்மையினால் அவனைச் சாத்திரங்கள் **'நிருபாதிக சேஷி'** என்று குறிப்பிடும். நிருபாதிக - ஒருகாரணமுமின்றி; சேஷி-தலைவன்; சேஷன்-அடிமை. இங்ஙனம் மறந்ததனால் எம்பெருமானுக்குத் தாங்கள் ஆற்ற வேண்டிய கடமையாகிய கைங்கரியத்தை[11] (அடிமைத் தொழிலை) இழந்தனர். இந்தக் கைங்கரியத்தைச் சாத்திரம் 'புருஷார்த்தம்' என்று குறிப்பிடும். புருஷன்– ஆன்மா; அர்த்தம் – பொருள்; ஆன்மா அடைய வேண்டிய பொருள்; அதாவது கைங்கரியம். 'ஈசுவரனுடைய தொண்டிற்கெனவே தோன்றிய நாம் எம்பெருமானுக்குச் செய்ய வேண்டிய கைங்கரியத்தை இழந்து விட்டோமே!' என்ற மனவருத்தம் சிறிது மின்றியே சமுசாரப் பெருங்கடலில் விழுந்து பல்வேறு துன்பங்களால் உழன்று கொண்டிருந்தனர். இக்கூறிய துன்பங்கள் 'ஆதியாத்மிகம்', 'ஆதிபௌதிகம்' 'ஆதிதைவிகம்' என்று மூன்று வகையாகப் பிரித்துப் பேசப்பெறும். ஆதியாத்மிகம் என்பது, தன் உடலையும் மனத்தையும் பற்றிவரும் துன்பங்கள்

10. சேஷம்-அடிமை.

11. கிங்கரன் - வேலையாள் (Servant); அவன் செய்யும் தொழில் கைங்கரியம்.

இது 'சரீர ஆதியாத்மிகம்', 'மன ஆதியாத்மிகம்' எனப்படும். முன்னது உடலைப் பற்றிக்கொண்டு வரும் தலைவலி, நெஞ்சுவலி, காய்ச்சல், பெருநோய், காசநோய், முதலிய பிணிகளாகும் பின்னது, காமம்குரோதம், பொறாமை முதலிய வேண்டப்பெறாத பண்புகளாகும். 'ஆதி பௌதிகம்' என்பது, பிசாசம், கொடிய விலங்குகள், மனிதர், இராக்கதர் முதலியவர்களால் நேரிடும் துன்பங்களாகும். 'ஆதி தைவிகம்' என்பது, காற்று, மழை, வெயில், இடி, மின்னல் முதலியவற்றால் தெய்வ சங்கற்பமாய் உண்டாகும் பேரிடர்கள் ஆகும். இவ்வகைத் துன்பங்கட்குக் காரணம் என்ன? 'அர்த்த பஞ்சக ஞானம்'[12] இன்மையே என்று சாத்திரங்கள் சாற்றும்.

இங்ஙனம் சேதநர்கள்[13]—அதாவது நாம்—நம்முடைய வினைகளால் பிறப்பு—இறப்பு என்னும் சுழிகளில் சிக்கித் தடுமாறித் தம் காலத்தைப் பயனற்ற வழிகளில் கழித்தலைக் காணும் அருட் பெருங்கடலான ஈசுவரனால் தாங்க முடியவில்லை. 'கருணாநிதி' என்ற பெயர் தனக்குப் பொருந்த வேண்டுமே

12. அர்த்த பஞ்சகம் :- 1) ஆன்மாவின் இயல்பு, 2) ஈசுவரனது இயல்பு, 3) ஆன்மா அடையும் பயன், 4) அப்பயனை அடைதற்கு உபாயம் (வழி), 5) அப்பயனை அடைதற்குப் பகையாய் உள்ளவைகள். இவை முறையே 1) ஆன்ம சொரூபம், 2) ஈசுவர சொரூபம், 3) பல சொரூபம், 4) உபாய சொரூபம், 5) விரோதி சொரூபம் எனப்படும். இவற்றைப் பற்றிய விளக்கம் அடைதலே ''அர்த்த பஞ்சக ஞானம்', எனப்படும்.

13: சேதநர்கள் - அறிவுடைய ஆன்மாக்கள்

14. இதனை 'ஈச - ஈசதவ்ய சம்பந்தம் என்றும், சாத்திரங்கள் குறிப்பிடும்,

என்ற கவலை கொள்ளுகின்றான். எல்லா உயிர்களோடும் இரட்சக—இரட்சிய சம்பந்தம்.[14] உடைய எம்பெருமான் எப்படி வாளா இருக்க முடியும்? சேதநர்கள் தங்களை அறிந்து கொள்ளவும், பகவானாகிய தன்னை அறிந்து கொள்ளவும் வேண்டிய அறிவினை நல்க வழி வகுக்க எண்ணுகின்றான். இந்த அறிவைப் பெற்றால் சேதநர்கள் தானாகிய (பகவானாகிய) ஏமப் புணையைக் கொண்டு தங்கள் பிறவியாகிய பெருங் கடலைக் கடந்து வீடுபேறு என்னும் மறு கரையை அடைய முடியும் என்று திருவுள்ளங் கொள்ளுகின்றான். தானே சீடனாகவும் ஆசாரியனாகவும் வடிவங்கள் கொண்டு பதரிகாச்சிரமத்தில் [15] அனாதியானதும், அர்த்த பஞ்சகத்தைச் சுருக்கமாகத் தெரிவிப்பதுமான திருமந்திரத்தை—அதாவது 'ஓம் நமோ நாராயணாய' என்றும் எட்டெழுத்து மந்திரத்தை—வெளியிட்டருளினான். இதனை முமுட்சுப்படி,

> "சம்சாரிகள் தங்களையும் ஈசுவரனையும் மறந்து, ஈசுவர கைங்கரியத்தையும் இழந்து இழந்தோம் என்ற இழவுமின்றிக்கேசம்சாரமாகிய பெருங்கடலிலே, விழுந்து நோவுபட சர்வேசுவரன் தன் கிருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரஞ் சேரும்படி, தானே சிஷ்யனுமாய் ஆசாரியனுமாய் நின்று, திரு மந்திரத்தை வெளியிட்டருளினான்",[16]

என்று பேசும்.

---

15. இமயமலையிலுள்ள ஒரு திருப்பதி.

16. முமுட்சு 5

குருவினுடைய திருப் பெயர் நாராயணன். சீடனுடைய திரு நாமம் நரன். இவர்தம் பிறப்பைப்பற்றியும் அறிந்து கொள்வது இன்றியமையாதது. ஆகவே, இதனையும் கூறுவேன். சத்திய யுகத்தில் பதரிகாச்சிரமத்தில் தர்மதேவனுக்கும் தட்சப்பிரஜா பதியின் மகளாகிய மூர்த்தி தேவிக்கும் நரன், நாராயணன் என்ற பெயர்களுடன் திருமாலின் அவதாரங்களாகப் பிறந்தனர் இவர்கள். இவர்தம் குழந்தைப் பருவம் நைமிசாரணி யத்தில்[17] கழிந்தது; தவ வாழ்க்கை கந்தமாதன பருவத்தில் தொடங்கியது. பின்னர் தேவர்கள், முனிவர்கள், மக்கள் இவர்கட்குக் குரு-சிஷ்ய முறையை நன்கு விளக்கும் பொருட்டு பதரிகாச்சிரமத்திற்கு வருகின்றனர். இங்குத்தான் நாராயணன் நரனுக்குத் திருமந்திரத்தை உபதேசிக்கின்றான். இவர்கள் துவாபரயுகத்தில் கண்ணனாகவும் அர்ச்சுனனாகவும் பிறக்கின்றனர். பகவத்கீதை என்ற பக்திக் கிரந்தம் பிறப்பதற்குக் காரணமாகவும் அமைகின்றனர்.

இந்த பதரிகாசிரமத்தைப்பற்றியும் ஈண்டுச் சிறிது கூறுவது பொருத்தமாகின்றது. பதரி இமய மலையிலிருக்கும் ஒரு திருத் தலம்[18] பதரி என்பது வடமொழியில் இலந்தை மரத்தின் பெயராகும். அம்மரங்கள் அடர்ந்து கிடக்கும் இடம் வதரி. வதரிநாதன் எழுந்தருளியிருக்கும் திருமலை முழுவதும் வதரி யாகும். அவன் எழுந்தருளியிருக்கும் தலம் வதரிகாச்சிரமம் ஆகும். 'திருவதரி', 'திருவதரி ஆச்சிரமம்' ஆகிய இந்த இரண்டும்

17. நைமிசாரணியம் - இந்தத் திருப்பதி கிழக்கிந்திய இருப்புப் பாதை யில் பலமு சீதாபூர் கிளை பாதையில் உள்ளது. நிலையத்திலிருந்து ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவிலுள்ள இத்திருத்தலத்துக்கு மாட்டு வண்டியில்தான் செல்லவேண்டும். 'வடநாட்டுத்திருப்பதிகள்' என்ற என் நூலில் 4-வது கட்டுரைகாண்க.

18. 'வட நாட்டுத் திருப்பதிகள்' என்ற என் நூலில் 6-வது கட்டுரை யைக் காண்க.

பற்றித் திருமங்கையாழ்வாரால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற இரண்டு திருமொழிகள் பெரியதிருமொழியில்[19] உள்ளன. இலந்தைப் பழம் பெரிய பிராட்டியாரின் திருவுகப்புக் குரியது. திருக்கோயில் முழுவதையும் இருள் சூழ்ந்த நிலையில் ஒரு பெரிய இலந்தை மரம் உள்ள தென்றும், கலியுகத்தில் அது மக்கட்குப் புலனாகாது என்றும் கூறப்பெறுகின்றது இந்த மரத்தின் அடியில்தான் வதரி – நாராயணன் தவசிவடிவில் இருந்து நரனுக்குத் திரு மந்திரத்தை உபதேசித்ததாக வரலாறு. இதுவே இன்றைய வதரி-நாராயணனின் திருக்கோயிலாகத் திகழ்கின்றது. இந்த வதரியைத் திருமங்கையாழ்வார் 'பாரோர் புகழும் வதரி'[20] என்று போற்றுகின்றார் தமது 'சிறிய திருமடலில்'.

எம்பெருமான் ஆசாரியனாய் நின்றது போதாதோ? சிஷ்ய னாய் நின்றது எதன் பொருட்டு? என்ற ஐயம் எழுதல் இயற்கை! இதனையும் தெளிவிப்பேன். சாத்திர முறைப்படி உபதேசிக்கும் ஆசாரியனைச் சென்றடையும் சீடனிடம் சில இலக்கணங்கள்– சில நற்பண்புகள் - அமைந்திருத்தல் இன்றியமையாததாகும். இந்த இலக்கணங்களை உலகத்தாருக்கு அறிவிக்கும் பொருட்டு- செயல்கள் மூலம் உணர்த்தும் பொருட்டு (Learning by Doing)- எம்பெருமான் சீடனாகவும் நின்றான் என்பதை நாம் உணர்தல் வேண்டும். இம்முறை பலர் பின்பற்றுவதற்கும் வழி யாகவும் அமையும்.

19. பெரி. திரு 1.3;1.4

20. சிறிய திருமடல் - கண்ணி-47

"சிஷ்யனாய் நின்றது சிஷ்யன் இருக்கும் இருப்பு நாட்டாரறியாமையாலே, அத்தை அறிவிக்கைக்காக"[21]

என்று இதனைச் சுருக்கமாக விளக்கம் தரும் முமுட்சுப்படி. இது மேனாட்டுக் கல்வி முறையில் குறிப்பிடப்பெறும் பல புதுமுறைகளை ஒருபுடை ஒத்திருக்கும் என்று கூறலாம்.

நன்னூலில் கூறப்பெறும், மாணாக்கர் – ஆசிரியர் இலக்கணங்கள் பெரும்பாலும் சமயம் சாராக்கல்விக்கும் பொருந்துவனவாகும். சமயக் கல்வியில் ஈடுபடும் சீடனிடம் சாத்திர நம்பிக்கை, அறங்களை மேற்கொள்ளும் இயல்பு, திருமாலிடம் பக்தி, ஆசாரியனிடம் அளவற்ற விசுவாசம், ஆசாரியர் மனம் உகக்கும் வண்ணம் செயலாற்றும் சாதுரியம், ஆசாரியருக்குப் பணிவிடை செய்வதில் விருப்பு, தன் உடல் பொருள் ஆவி அறிவு குணங்கள் முதலியவற்றை ஆசாரியனுக்கே உரிமையாக்கும் தன்மை, புலனடக்கம் முதலிய பண்புகள் அமைந்திருத்தல் இன்றியமையாதது.

**வடநாட்டுத் திருத்தலப்பயணம்:** வதரியை அநுபவிக்க வேண்டுமென்று பேரவாவால் திருமங்கையாழ்வார் வட நாட்டுத் திருத்தலப் பயணத்தை மேற்கொள்ளுகின்றார். இதற்குக்காரணம் என்ன? கூறுவேன்; திருமங்கையாழ்வாரின் வாழ்க்கை வரலாற்றில் இஃது ஓர் முக்கிய திருப்பம். 'வாள்வலியால் மாயோனிடம் மந்திரம்' (திருமந்திரம்) கொண்ட நிகழ்ச்சியை மேலே குறிப்பிட்டேன் அல்லவா? இதனை,

21. முமுட்சு - 6

வாழி, பரகாலன்! வாழி, கலிகன்றி
வாழி குறையலூர் வாழ்வேந்தன்; — வாழியரோ
மாயோனை வாள்வலியால் மந்திரம்கொள் மங்கையர் கோன்
தூயோன் சுடர்மான வேல்.[22]

என்ற தனியனாலும் அறியலாம். மந்திரம் பெற்ற மகிழ்ச்சியால் ஆழ்வாருக்கு அர்த்தபஞ்சக ஞானம் ஏற்படுகின்றது. பக்தி வெள்ளம் கரை புரண்டோடுகின்றது. பாசுரங்கள் பெருக்கெடுக்கின்றன. 'நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்' என்ற தொடரை இறுதியாகக் கொண்டு பத்துப் பாசுரங்களையுடைய முதல்திருமொழியை அருளுகின்றார். இதனை மேலே குறிப்பிட்டேன். திருமந்திரம் பெற்ற நிகழ்ச்சி திருமந்திரம் பிறந்த இடமாகிய பதரிகாச்சிரமத்தைச் சேவிக்கவேண்டும் என்ற அவாவைத் தூண்டுகின்றது. வடநாட்டுத் திருத்தலப் பயணத்தை மேற் கொள்ளுகின்றார். திருமந்திரப் பொருளின் எல்லை நிலமான திருத்தலங்களில் புக்கு அநுபவிக்க இழிகின்றார். எம்பெருமான் 'சர்வசுவாமி' என்பதும், 'சர்வசுலபன்' என்பதும் திருமந்திரத்தின் தேர்ந்த பொருளாகும். அடியவர்கள் இந்த உடம்புடன் அடிமை செய்து மகிழும்படிக்குப் பாங்காக எம்பெருமான் பல இடங்களிலும் கோயில் கொண்டு தன்னுடைய சுவாமித்துவத்தையும் சௌலப்பியத்தையும் விளங்கக் காட்டிக்கொண்டு நிற்கின்றான். ஆகவே, திவ்விய தேசங்கள் திருமந்திரப் பொருளுக்கு எல்லை நிலமாக அமைகின்றன. இத்தகைய திவ்வியதேசங்களை மற்றுமுள்ள ஆழ்வார்கள் அநுபவித்தார்களெனினும் திவ்வியதேச அநுபவமே திருத்தலப் பயணமாகக் கொண்டவர் இவ்வாழ்வார் ஒருவரேயாவார். வதரியை நோக்கிச் சென்ற ஆழ்வார் முதலில் **திருப்பிரிதி** என்ற திவ்விய தேசத்தை அடைகின்றார். அதனை

22. பெரிய திருமொழி தனியன்.

மங்களாசாசனம் செய்துகொண்டு வடநாட்டுத் திருப்பதிகளாகிய இமயமலையிலுள்ள வதரிகாச்சிரமம் சாளக்கிராமம் ஆகியவற்றை அநுபவித்துவிட்டு, நைமிசாரணியம், வடமதுரை, அயோத்தி, பிருந்தாவனம் ஆயர்பாடி, வண்துவராபதி, சிங்கவேழ்குன்றம், ஆகியவற்றை மங்களாசாசனம் செய்கின்றார், இறுதியாகத் 'ஈரத்தமிழ்' நடையாடுவதற்கு எல்லை நிலமான திருவேங்கடத்தைச் சேவிக்கின்றார். திருப்பாற் கடலையும், பரமபதத்தையும் மானசீகமாகக் கண்டு அநுபவித்து மங்களாசாசனம் செய்து வடநாட்டுத் திருத்தலப் பயணத்தைத் தலைக்கட்டுகின்றார்.

திருவேங்கடத்திலிருந்து தொண்டை நாட்டுத் திருப்பதிகளை அநுபவிக்கத் திருவுள்ளங் கொண்டு முதன்முதலாக வீரராகவப் பெருமாள் கோயில் கொண்டுள்ள திருஎவ்வுளூர் (திருவள்ளூர்) வருகின்றார். தொடர்ந்து திருக்கடிகை (சோழசிங்கபுரம்) திருநின்றவூர், திருவல்லிக்கேணி, திருநீர்மலை, திருக்கடல் மல்லை, திருவிடவெந்தை ஆகிய தலங்கட்கு வந்து ஆங்காங்குள்ள எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்கின்றார். அடுத்துக் காஞ்சி நகருக்கு வருகின்றார். அங்குள்ள திருக்கச்சி (வரதராசப் பெருமாள் கோயில்), திரு. வெஃகா (சொன்ன வண்ணம் செய்த பெருமாள் கோயில்) திருவட்டபுயகரம், திருஊரகம், திருக்காரகம், திருக்கார்வானம், திருநீரகம் [இவை நான்கும் உலகளந்த பெருமான் கோயிலிலுள்ளவை], திருக்கள்வனூர்,(காமாட்சியம்மன் கோயிலுக்குள் இருப்பது); நிலாத்திங்கள் துண்டம் (ஏகாம்பரநாதர் கோயிலிலுள்ளது), திருப்பரமேச்சுர விண்ணகரம் (வைகுண்ட நாதப் பெருமாள் கோயில்), பவள வண்ணம், திருத்தண்கா (விளக்கொளிப்பெருமாள் கோயில்) திருப்பாடகம், (பாண்டவதூதர் சந்நிதி) ஆகிய திருக்கோயில்களில் சேவை சாதிக்கும் எம்பெருமான்களை மங்களாசாசனம் செய்கின்றார். காஞ்சிக்கு வெளியில் சுமார் பத்துக் கிலோ மீட்டர் தொலைவிலுள்ள திருப்புட்குழி எம்பெருமான் விஜயராகவப் பெரு

மாளையும் மங்களா சாசனம் செய்து தொண்டை நாட்டுத் திருத்தலப் பயணத்தை நிறைவு செய்கின்றார்.

நடுநாட்டுத் திருத்தலங்களைத் திருமங்கையாழ்வார் திருவுள்ளங்கொண்டதைக் குறிப்பிடுவதற்குமுன் **திருநின்றவூர்** என்ற திருத்தலத்தைப்பற்றிச் சில சுவையான குறிப்புகளைத் தர எண்ணுகின்றேன். திருநின்றவூர் என்பதற்கு 'இலக்குமி பொருந்திய தலம்' என்று பொருள்படுவதைக் குறிப்பிடுகின்றேன். ஊரும் நீர்வளமும் நில வளமும் பொருந்திய ஊர் என்பதை நேரில் கண்டேன். திருமங்கையாழ்வார் இந்தத் திருத்தலத்திற்கு வந்து இத்தலத்து எம் பெருமானை மங்களா சாசனம் செய்ய வில்லை என்று ஒருசாரார் கருதுவர். ஆழ்வார் இத்திருப்பதிக்கு வந்ததாகக் கருதுவோரும் உண்டு. இந்த இருசாரார் கருத்து களையும் உங்கள் முன் வைக்கின்றேன்.

**வரவில்லை என்பார் கருத்து:** இத்திருத்தலத்திற்கு எந்த ஆழ்வாரும் வந்து இத்திருத்தலத்து எம்பெருமானை மங்களா சாசனம் செய்யவில்லை. எண்பத்தாறு திவ்வியதேசங்களைச் சேவித்த கலியனும் கூட இங்கு வாராதது ஏனோ என்று சிந்திக் கின்றோம். ஆயினும், இந்த ஆழ்வார் இத்தலத்து எம்பெரு மானை இரண்டு பாசுரங்களில் மங்களாசாசனம் செய்துள்ளார். இந்த ஊர் எம் பெருமான் 'பத்தராவிப் பெருமாள்,[23] என்ற திருப்பெயரால் திகழ்கின்றார். பக்தர்களின் உயிருக்கு உயிராய் இருப்பவர் என்பது இதன் பொருளாகும். அர்ச்சாவதார சேவா ரசிகரான திருமங்கையாழ்வாருடைய பாசுரத்தைப் பெறவேண்டும் என்ற எண்ணத்துடன் இத்தலத்து எம்பெரு மான் இந்த ஆழ்வார் திருக்கடல் மல்லை எம்பெருமானை மங்க ளாசாசனம் செய்யும் பொழுதும், திருக்கண்ணமங்கை [24] எம் பெருமானுக்குச் சொல்மாலைகள் சாத்தும் பொழுதும் அந்தர்யா மியாக ஆழ்வார் திருவுள்ளத்தில் சேவை சாதிக்கின்றார்.

23. பக்தவத்சலம் என்பது வடமொழித் திருநாமம். பலர் இப்பெய ரைச் சூட்டிக் கொண்டிருப்பதைக் காண்கின்றோம்.
24. சோழநாட்டுத் திருப்பதிகள் - முதற்பகுதி என்ற என்ற நூலின் 20-வது கட்டுரை காண்க.

ஆழ்வாரும் கிடைத்தற்கரிய முத்து கிடைத்ததே என்ற பெருமகிழ்ச்சியுடன், எக்களிப்புடன், "நின்றவூர் நித்திலத்தை"[25] என்றும், "நின்றவூர் நின்ற நித்திலத்தொத்தினை"[26] என்றும் மங்களா சாசனம் செய்தருளுகின்றார். இரண்டாவது திருக்குறிப்பில் அந்த எம்பெருமான் சேவை சாதிக்கும் திருக்கோலத்தையே காட்டி விடுகின்றார். 'நின்ற நித்திலத்தொத்து' என்ற தொடரில் எம்பெருமானின் 'நின்ற திருக்கோலம்' காட்டப்பெறுவதைக் கண்டு பேரானந்தம் அடைகின்றோம். ஆழ்வாரின் திருவுள்ளத்தில் அந்தர்யாமியாகக் காட்சி அளித்த போதும் இத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் திருக்கோலத்திலேயே காட்சி அளித்த அற்புதத்தையும் சிந்திக்கின்றோம். ஆழ்வார் இந்தத் திவ்விய தேசத்திற்கு வந்து மங்களா சாசனம் செய்தது போன்ற பெருமையையும் பெற்று விடுகின்றார். "என்னால்தன்னை இன்தமிழ் பாடிய ஈசன்"[27] "தன்சொல்லால் தான்தன்னைக் கீர்த்தித்த மாயன்"[28], "என்னால் தன்னை வன்கவிபாடும் வைகுந்தநாதன்"[29] என்று நம்மாழ்வார் குறிப்பிடும் "தன்னை என்னாக்கும்"[30] எம்பெருமானின் தடங்கருணைத் திறத்தினை வியந்து போற்றுகின்றோம்.

---

25 பெரி. திரு. 2.5:2

26 ஷை 7.10:5

27 திருவாய் 7.9:1

28 ஷை 7.9:2

29 ஷை 7.9:6

30 ஷை 7.9:7

**வந்தார் எனக்கருதுவோர்:** ஆழ்வார் இந்தத் திருப்பதிக்கு வந்தார் எனக் கருதுவோரின் கருத்தையும் ஈண்டு எடுத்துக் காட்டுவேன். "ஆழ்வார் எவ்வுள் கிடந்தானைச் சேவித்த பின்பு திருவல்லிக்கேணிக்கு எழுந்தருள்வதற்கு முன்பே திரு நின்றவூரைச் சேர்ந்தார்; அத்திருப்பதியில் எழுந்தருளியுள்ள பத்தராவிப் பெருமாள் அப்பொழுது ஆழ்வாருக்கு முகம் கொடா மல் பிராட்டியாரோடு கொஞ்சிக் கொண்டு (ஸரஸசல்லாபம் செய்து கொண்டு) பராமுகமாக இருந்திடவே, ஆழ்வார் அத் திருப்பதியை விட்டு அப்பால் சென்று திருவல்லிக்கேணியையும் திருநீர்மலையையும் சேவித்து, அதன்பின்னர்த் திருக்கடல் மல்லையை அடைந்து அத்தலத்துப் பெருமானைச் சேவித்து நிற்கும் பொழுது, திருநின்றவூர் எம்பெருமான் திருமகளால் தூண்டப்பெற்று இவ்வாழ்வார் திருவாக்கினால் மங்களாசா சனம் பெற்றுச் சிறப்புறக் கருதிக் கடல் மல்லையில் வந்து சேவை சாதிக்க இப்போது 'நின்றவூர் நித்திலத்தைக்.... கண்டது நான் கடல் மல்லைத் தலசயனத்தே' என்று திருநின்றவூர்ப் பத்த ராவிப் பெருமாளையும் இங்கே சேவிக்கப்பெற்றதாக அருளிச் செய்கின்றாரென்று பெரியோர்களின் நிர்வாகம்"[31] என்று குறிப் பிடுவர் பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரிய சுவாமிகள். நம் ஆராய்ச்சியை எல்லாம் மூட்டைகட்டி வைத்துவிட்டு எப்படி எப்படியெல்லாம் பக்தர்கள் அர்ச்சாவதாரமூர்த்திகளை அநு பவித்தார்கள் என்று வியப்பு அடைகின்றோம். அதே சமயத் தில் 'நம்மால் அந்த அளவுக்குஅநுபவிக்க முடியவில்லையே' என்ற கழிவிரக்கமும் கொள்ளுகின்றோம்.

---

31 பெரி. திரு. 2.5 ;2 [திவ்வியார்த்த தீபிகை காண்க]

அடுத்து, திருக்கண்ணமங்கைப் பாசுரம் ஒன்றிலும் 'நின்ற வூர் நித்திலத் தொத்தினை' [32] என்று மங்களாசாசனம் பெறு கின்றார். இந்தத்திருத்தலத்து எம்பெருமானின் திருநாமமும் **'பக்தவத்சலர்'** என்பதை அறிந்து வியப்பு அடைகின்றோம்; இங்கும் திருநின்றவூர் **'என்னைப்பெற்ற தாயாரால்'** நினைவூட் டப் பெற்றவராய் ஆழ்வார் எதிரில் சேவை சாதிக்க, அவரும் ''நின்றவூர் நித்திலத்தொத்தினை.... கணமங்கையுட் கண்டு கொண்டேனே'' என்று அப்பிரானையும் சேர்த்து மங்களா சாசனம் செய்தனர் என்பதையும் அறிகின்றோம்.

நின்றவூர் நித்திலத்தைப் பேசியவுடன் இவ்விடத்தில் நடைபெற்ற இரண்டு சுவையான நிகழ்ச்சிகள் நம் நினைவிற்கு வருகின்றன. அவற்றையும் உங்கள் முன் வைப்பது பொருத்த மாகும்.

**நிகழ்ச்சி** 1: இன்று நீலப்பலகையின் ஆதரவில் பாது காக்கப்பெறும் காஞ்சி கைலாசநாதர் கோயிலைக் கட்டியவன் **இராசசிம்மன்** என்ற பல்லவ மன்னன்; சுமார் 1250 ஆண்டுகட்கு முன்னர் காஞ்சியைத் தலை நகராகக் கொண்டு அரசோச்சியவன். அவன் திருப்பணி தொடங்கிய அன்றே திருநின்றவூரில் வாழ்ந்த **பூசலார் நாயனார்** என்பவர் ஒரு கோயில் அமைக்க எண்ணினார். வெறுங்கை முழம் போடுமா? கையில் 'வெள்ளையப்பன்' இல்லாது எப்படிக் கோயில் எழுப்புவது? மானசீகக் கோயில் ஒன்று எழுப்பு கின்றார் தம் மனத்தகத்தில். ''இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க'' [33] என்று மணிவாசகர் குறிப்பிடும் ஆண்டவனுக்கு அவன் இருக்கும் இடத்திலேயே கோயிலை எழுப்பிய பெருமை பூசலார் ஒருவருக்கே உண்டு. ''உள்ளுவார் உள்ளத்தாய்'' [34] என்று திருமங்கையாழ்வார் குறிப்பிடும் அந்தர்யா மித்துவத்திற்குக் கோயில் எழுப்பியதாக வைணவ சமயத்தில்

32. பெரி. திரு 7. 10 ;5

33 சிவபுராணம் - அடி - 2

34 திருநெடுந் - 8

வரலாறு ஒன்றும் இல்லை. காடவர்கோன் காஞ்சியில் அமைத்த கற்றளி வேலையும், பூசலார் 'நெடிதுநாள் நினைந்து செய்த' 'சிந்தைஆலயத் திருப்பணியும் ஒரே நாளில் நிறைவு பெறு கின்றன! இலிங்கப் பிரதிட்டை செய்து குட முழுக்குவிழா நடை பெற நாளையும் குறிப்பிடுகின்றான் பல்லவ மன்னன். அன்று இரவில் சிவபெருமான் அரசனது கனவில் தோன்றி,

நின்றவூர்ப் பூசல் அன்பன்
நெடிதுநாள் நினைந்து செய்த
நன்றுநீ டால யத்து
நாளைநாம் புகுவோம்; நீயிங்கு
ஒன்றிய செயலை நாளை
ஒழிந்துபின் கொள்வாய். [35]

என்று கூறி மறைந்தார். திடுக்கிட்டெழுந்த அரசன் பூசலார் வாழும் திருநின்றவூரை அடைந்தான். அந்த ஊரில் திருக் கோயில் கட்டப்பெறும் சின்னம் ஒன்றும் தென்படவில்லை. ஊராரை உசாவிப் பூசலார் இருக்கும் இடம் அறிந்து அவரைக் கண்டான்; அவர் அமைத்த திருக்கோயிலைக் காட்டுமாறு பணித்தான். தான் கண்ட கனவையும் அவருக்கு எடுத்தி யம்பினான். அரசன் கூறியதைக் கேட்ட பூசலார் இறைவனு டைய பெருங்கருணைத் திறத்தினைக் கேட்டுப் பேரானந்தம் அடைந்தார். தம்மையும் இறைவன் ஒரு பொருளாக மதித் தான் என்று எண்ணி அவர் மனம் பூரிப்பால் பெருகிற்று அரசனும் பூசலாரின் பக்தியையும் இறைவனது பேரருளையும் கண்டு வியப்புற்றான். பூசலார் மனக்கோயிலின் நினைவாகப் பிற்காலத்தார் ஒரு சிறிய கோயிலை எழுப்பியுள்ளனர். இந்தப் பூசலாரைச் சேக்கிழார் பெருமான்,

35. பெரியபு. பூசலார் - 10

நீண்டசெஞ் சடையி னார்க்கு
நினைப்பினால் கோயி லாக்கிப்

பூண்டஅன்பு இடைய றாத
பூசலார் பொற்றாள் போற்றி[36]

என்று மகிழ்ந்து போற்றுகின்றார்.

பிற்காலத்தார் அமைத்த திருக்கோயில் வாயிலில் கோபுரம் இல்லை. தகரக் கொட்டகை ஒன்றுதான் காணப்படுகின்றது. இந்தச் சிறு குடிலில் இருப்பவரே இருதய ஈசுவரர்; பூசலார் தம் இதயத்தில் பிரதிட்டை செய்த இலிங்கத்தின் பிரதிநிதி. அவரது துணைவியே மரகதாம்பிகை. இந்த அம்பிகையின் சிலையில் பின்னமுற்றிருப்பதால் பூசை நடைபெறுவதில்லை. புதிய சிலை தயாரிலிருந்தும் ஏனோ பிரதிட்டை ஆகாமல் உள்ளது. கருவறையினுள் இருதயாலய ஈசுவரரின் அருகில் 'பூசல் அன்பனும்' சிலைவடிவில் காணப்பெறுகின்றார். மனத்தில் வைத்து வழிபாடு நடத்தியவருக்குக் கருவறையிலும் வைத்துப் பூசனை புரிய வேண்டும் என்று நினைத்தனர் போலும் இக்கோயிலை நிறுவிய அன்பர்கள். இந்தக் கோயிலில் பூசலார் செப்புச் சிலைவடிவிலும் காணப் பெறுகின்றார். இந்தச் சிலைவடிவில் பூசலார் மார்பில் நெஞ்சுக்கு வெளியே இலிங்கத் திருவுருவம் அமைத்துள்ளனர் அன்பர்கள். பண்டையோரின் அரிய கற்பனைக்கு உரிய உருவம் கொடுக்க வேண்டும் என்று நினைத்தனர் போலும் இவர்கள்.

**நிகழ்ச்சி–2:** திருநின்ற ஊரில் வாழ்ந்த காளத்திவாணர் என்ற வள்ளலார் ஒருவராலும் இவ்வூருக்கு இலக்கியப் புகழ் ஏற்பட்டுள்ளது. 'நின்றை நித்திலம்' பக்தர்கட்குத் தண்ணளி சுரப்பதைப் போலவே 'நின்றைக் காளத்திவாணர்' வறுமையால் வாடும் புலவர்களை ஆதரித்துவந்தார். நீண்டநாளாக வறுமை

---

36. பெரியபு. பூசலார் - 17

யுடன் போராடிய கவிஞர் ஒருவர் நின்றவூரை நோக்கி வருங்கால் இருட்டிவிடுகின்றது. நின்றவூருக்கு அருகிலுள்ள ஒரு சிற்றூரில் ஒரு சத்திரத்தில் தங்குகின்றார் கவிஞர். அன்றிரவு உறக்கம் சரியாக வரவில்லை. அங்குள்ளவர்களிடம் பேச்சு கொடுக்கின்றார்; இடையில் தன் கவலையையும் சொல்லுகின்றார். அவர்கள் காளத்திவாணரின் கொடைத் தன்மையைப் பலபடப் புகழ்ந்து பேசுகின்றனர். அவ்வள்ளல் கவிதைகளைச் சுவைக்கும் திறத்தையும் பாராட்டிப் புகழ்கின்றனர். மறு நாள் அவ் வள்ளலைக் கண்டுவிட்டால் தம் வறுமைக்கு ஒரு 'செண்ட் ஆப்' தந்து விடலாமே என்று கருதுகின்றார் புலவர். நீண்ட நாளாகத் தன்னோடு பிறந்து வளர்ந்த வறுமையைப் பிரிய மனமும் இல்லை. தம்மிடம் இந்த ஒரு நாளாவது இருந்துவிட்டுப் போகட்டுமே என்று பரிவுடன் நினைக்கின்றார். இந்தப் பரிவு ஒரு பாட்டு வடிவம் பெறுகின்றது.

> நீளத்திரிந்து உழல்கின்றாய்
> நீங்கா நிழல்போல
> நாளைக்கு இருப்பாயோ?
> நல்குரவே! — காளத்தி
> நின்றைக்கே சென்றக்கால்
> நீஎங்கே? நான்எங்கே?
> இன்றைக்கே சற்றே
> இரு.[37]

என்பது அப்பாடல் இப்பாடலை நினைந்து சுவைக்கின்றோம்.

அடுத்து நடுநாட்டுத்திருத் தலங்களாகிய திருக்கோவலூர். (திவ்வியப்பிரபந்தம் தோன்றிய இடம்) திருவயிந்திரபுரம் ஆகிய இரண்டு திருப்பதிகளையும் சேவித்து மங்களாசாசனம் செய்கின்றார். பின்னர், சோழநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாசனம் செய்யத் திருவுள்ளம் பற்றின ஆழ்வார் தில்லைத் திருச்சித்திர கூடம் என்னும் திருப்பதியில் இழிகின்றார். சித்திரகூடம் என்பது விசித்திரமான சிகரங்களையுடையது எனப் பொருள்படும் காரணப்

37. தனிப்பாடல் திரட்டு - 1: பாடல் 866 [கழக வெளியீடு].

பெயர். இஃது இராமபிரான் காடுறை வாழ்க்கையை மேற் கொண்டகாலத்து அவனது திருவுள்ளத்திற்கு மிகவும் பாங்கா யிருந்த தொருமலை. சீதாப்பிராட்டியை மணந்த பிறகு இராமன் 'தேனிலவு' (Honey - moon) போன்ற அநுபவத்தைப் பெறு வதற்குக் கருவியாக அமைந்தது. சங்க இலக்கியப் பயிற்சி மிக்கவுடைய கம்பநாடன் குறிஞ்சி நிலத்துக் கருப்பொருளை மிக அற்புதமாகச் சித்திரித்துக் குறிஞ்சி நிலத்து உரிப்பொருளுக்கு வழி யமைத்துக் காட்டுவதைக் கம்பராமாயணம் (அயோத்தியா காண்டம்) சித்திர கூடப்படலத்தில் கண்டு மகிழலாம். இராம பிரானுடைய திருவுளத்திற்கு இந்த மலை பாங்காயிருந்தது போலவே, இத்தலமும் எப்பெருமானது திருவுள்ளத்திற்குப் பாங்காயிருப்பதுபற்றி அப்பெயர் இதற்கும் இடம்பெற்ற தென்று பெரியோர் பணிப்பர். இங்கு (கோவிந்தராசர் சந்நிதியில்) உற்சவ மூர்த்தி இராமபிரான் காடுறைவாழ்க்கையின்போது சித்திர கூட மலையில் வீற்றிருந்த வண்ணமாகஎழுந்தருளியிருந்தது போலவே எழுந்தருளியுள்ளார். மூலமூர்த்தி பாலாழியில் அறிதுயில் கொள்ளும் பரமன்போலவே சயனத்திருக்கோலமாகிச் சிவ பிரானது நடனத்தைக் கண்டுகளித்திருக்கின்றார். இவ்விடத்தில் சிவபெரும் நடனம் செய்வதற்குரிய காரணத்தை கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையவர்கள் கூறுவதை நினைவு கூர்வதும் பொருத்தமாகும்.

தில்லைப் பதியுடையான்
சிற்றம்பலந் தன்னில்
அல்லும் பகலும்நின்று
ஆடுகின்றான்—எல்லைக்கண்
அண்ணா மலைமன்
அமைத்த கலைக்கழகம்
கண்ணாரக் கண்டு
களித்து.[38]

38. கவிமணி தேவி: மலரும் மாலையும் - 125. அண்ணாமலை மன்னர்3,

என்ற பாடலை நினைந்து மகிழ்கின்றோம். இதிலுள்ள தற்குறிப் பேற்றம் நம்மை மகிழச் செய்கின்றது. வள்ளல் அண்ணாமலை யாரின் புகழுக்கு இலக்கியச் சிறப்பு அளித்த கவி மணியைப் போற்றுகின்றோம்.

இங்கு "தில்லைத் திருச்சித்திர கூடம் சென்று சேர்மின்களே"[39] என்றும், "காழிச் சீராமவிண்ணகரே சேர்மின்களே"[40] "திரு நறையூர் மணிமாடம் சேர்மின்கள்"[41] என்றும் கூறுவர்." இப்படிப் பல திருபதிகளையும் எடுத்துரைத்துச் "சென்று சேருங்கள்-சென்று சேருங்கள்" என்றால் "எந்தத்திருப்பதியிற் சென்று சேர்வது?" என்று வைணவ அடியார் ஒருவரை ஒரு சாமானியமானவர் கேட்டாராம். அதற்கு அந்த அடியார் 'ஆழ்வார் திருவாயில் நுழைந்து புறப்பட்ட திருப்பதிகளெல்லாம் நாம் நுழைந்து புறப்பட வேண்டியது பிராப்தம்' என்று மறுமொழி பகன்றா ராம். இந்த இதிகாசம் யாவரும் அறிந்ததே. 'பதியே பரவித் தொழும் தொண்டர்'[42] என்றும்,

கண்டியூர் அரங்கம் மெய்யம்
கச்சிபேர் மல்லை என்று
மண்டினார் உய்யல் அல்லால்
மற்றையார்க்கு உய்யல் ஆமே![43]

என்று இந்த ஆழ்வாரே திருக்குறுந் தாண்டகத்திலும்,

39. பெரி. திரு. 3.2.
40. ஷை. 3.4
41. ஷை. 6.6
42. ஷை.
43. திருக்குறுந். 19

'தான் உகந்த' ஊரெல்லாம்

தன்தாள் பாடி

... ... ... ... .. ... ... ... ...

பூங்கோவ லூர்தொழுதும்

போது நெஞ்சே[44]

என்று திருநெடுந்தாண்டகத்திலும் கூறியுள்ளதைக் கண்டு மகிழலாம்

தில்லைத் திருச்சித்திர கூடத்தை மங்களாசாசனம் செய்த பின்னர் காழிச் சீராமவிண்ணகரம், திருவாலி ஆகியவற்றைச் சேவிக்கின்றார். அடுத்து திருநாங்கூர்த் திருப்பதிகளைச் சேவிக்கத் திருவுள்ளம் பற்றுகின்றார். மணி மாடக் கோயில் தொடங்கி வைகுந்த விண்ணகரம், அரிமேய விண்ணகரம், திருத்தேவனார் தொகை, வண்புருடோத்தமம், செம்பொன் செய் கோயில், திருத்தெற்றியம்பலம், திருமணிக் கூடம், காவளம் பாடி, திருவெள்ளக் குளம், பார்த்தன்பள்ளி ஆகிய பதினொரு திருநாங்கூர்த் திருப்பதிகளைச் சேவித்து மங்களாசாசனம் செய்கின்றார். அடுத்து, சோழநாட்டுத் திருப்பதிகளாகிய இந்தளூர் தலைச்சங்க நாண்மதியம், வெள்ளியங்குடி, புள்ளம்பூதங்குடி, திருக்கூடலூர், திருவெள்ளறை, கோயில் எனப்படும். திருவரங்கம் கரம்பனூர் (உத்தமர் கோயில்), திருப்பேர்நகர் (அப்பக்குடத்தான் சந்நிதி), கோழி (உறையூர்), நந்திபுரவிண்ணகரம், திருவிண்ணகர் (ஒப்பிலியப்பன் சந்நிதி), திருக்குடந்தை, தஞ்சை மாமணிக் கோயில், திருக்கண்டியூர், திருநறையூர், திருச்சேறை, திருவழுந்தூர், சிறுபுலியூர் சலசயனம், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருநாகை ஆகிய திருப்பதிகளைச் சேவித்துச் சோழ நாட்டுத் திருத்தலப்பயணத்தை நிறைவு செய்கின்றார்.

44. திருநெடுந். 6

அடுத்துபாண்டிநாட்டுத் திருப்பதிகளைச் சேவிக்கத் திருவுள்ளம் பற்றுகின்றார். திருமெய்யம் தொடங்கி திருப்புல்லாணி, திருமாலிருஞ்சோலை, திருக்கோட்டியூர், மதுரைக் கூடல் (தென்மதுரை), திருமோகூர், திருத்தண்கால் (சிவகாசிக் கருகிலுள்ளது), திருக்குறுங்குடி ஆகிய திவ்விய தேசங்களையெல்லாம் சேவித்து அவற்றை மங்களா சாசனம் செய்கின்றார். அடுத்து, மலை நாட்டுத் திருப்பதிகளுள் திருநாவாய், திருமூழிக்களம் ஆகியவற்றைச் சேவித்துத் தம் திருத்தலப் பயணத்தைத் தலைக்கட்டுகின்றார். இங்ஙன்மாக, இந்த ஆழ்வார் 108 திவ்வியதேசங்களுள் 22 போக, மிகுந்தவைகளை (86) மங்களா சாசனம் செய்தருளுகின்றார். இந்த ஆழ்வார் தமக்கு யாதொரு காரணமும் பற்றாமல் கிடைத்த திருமந்திரத்தையும் அதற்கு உள்ளீடான சீமந் நாராயணனுடைய சொரூபரூப, குண, விபூதி சேஷ்டிதங்களையும், அருள்மாரி என்னும்படி பெரிய பிராட்டியாரருளாலே இவற்றையெல்லாம் கண்டு அநுபவித்து அதனால் உண்டான பெருங்களிப்பால் 1) பெரிய திருமொழி, 2) திருக்குறுந்தாண்டகம், 3) திருநெடுந்தாண்டகம், 4) திருவெழுக்கூற்றிருக்கை, 5) சிறிய திருமடல், 6) பெரிய திருமடல் என்கின்ற ஆறு பிரபந்தங்களையும் அருளிச்செய்தனர். நம்மாழ்வார் அருளிசெய்துள்ள நான்கு திருமறைகளின் சாரமாகத் திகழும் திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி, திருவாய் மொழி என்ற நான்கு பிரபந்தங்களுக்கு ஆறு அங்கமாக இந்தப் பிரபந்தங்கள் அமைந்துள்ளனவாகக் கொள்ளப்படும். இங்கு எண்கள் ஒற்றுமையேயன்றி பொருள் ஒற்றுமை இல்லை என்பதை நாம் உளங்கொள்ள வேண்டும். இனி, இந்தப் பிரபந்தங்களைப்பற்றிச் சிறிது அறிந்து கொள்வது பொருத்தமாகின்றது.

1. பெரிய திருமொழி: இதில் அடங்கிய பத்துகள் பதினொன்று, பத்துத்திருமொழிகள் (ஒரு திரு மொழி என்பது பத்துப் பாசுரங்களைக் கொண்டது) கொண்டதை ஒரு பத்து

என்று வழங்கப்படுகின்றது. பத்தாம்பத்து ஏழாம் திருமொழியில் மட்டிலும் பதினான்கு பாசுரங்கள் உள்ளன. பதினோராம் பத்தில் பதினான்கு பாசுரங்கள் உள்ளன. பதினோராம் பத்தில் மட்டிலும் எட்டுத் திருமொழிகள். ஆகவே, பெரிய திருமொழியில் உள்ள பாசுரங்களின் தொகை 1084 ஆகும். அர்ச்சாவதார அநுபவத்தைப் பகரும் திருமொழிகளைத் தவிர ராமா வதாரத்தை இராட்சச பாவனையாலும், கிருட்டிணாவதாரத்தை யசோதை பாவனையாலும், மற்றைய அவதாரங்களின் மேன்மை யோடு கிருட்டிணாவதாரத்தின் எளிமையைச் சேர்த்து அநுப வித்தலும் போன்ற அநுபவங்களைக் கூறும் திருமொழிகளும் உள்ளன. தவிர, தாய்ப் பாசுரமாகவும், தலைவிப் பாசுரமா கவும் அநுபவித்த திருமொழிகளும் உள்ளன. விபவாவதார மகி மையும், விபவாவதாரங்களில் எம்பெருமானுடைய சௌலப்பிய மும் பரத்துவமும் எதிரெதிராகக் கூறும் இரண்டு தோழியர் அநுபவமும் திருமொழிகளாக அமைந்துள்ளன. நாட்டுப் புறப் பாடல்களின் சாயையில் ஒரு சில திருமொழிகள் அமைந்துள்ளன. இறுதித் திருமொழி உடல் உறவை அறுத்துத் தந்தருளுமாறு வேண்டும் என்ற பிரார்த்தனையாக முடிகின்றது.

2. **திருக்குறுந்தாண்டகம்:** தாண்டகம் என்பது தமிழில் ஒருவகைப் பிரபந்தம். இஃது அறுசீர் கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது, எண்சீர் கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது இஷ்ட தேவதையைப் புகழ்ந்து பாடும் பிரபந்தமாகும். அறுசீர் கொண்டது குறுந்தாண்டகம்; இதில் மெய்யெழுத்தும் உட்படப் பதினைந்து எழுத்துக்குக் குறையா மலும், இருபத்தாறெழுத்துக்கு மேற்படாமலும் இருத்தல் வேண் டும். நெடுந்தாண்டகத்தில் அடிதோறும் இருபத்தாறெழுத்துக்கு மேற்பட்டே இருத்தல் வேண்டும். இவற்றின் இலக்கணத்தைப் பன்னிரு பாட்டியல் போன்ற பாட்டியல் நூல்களில் காணலாம்.

பசி மிகுதியாகும்வரையில் சோறிடத் தாமதம் செய்யும் தாயைப் போலவே, எம்பெருமானும் தன்னை அநுபவிப்பதற்கு உறுப்பான பெருவிடாய் பிறப்பிப்பதற்காக முகங் காட்டா

தொழிய, அவனை விட்டுக் கணமும் தரித்தற் கொண்ணாமல் பெருவிடாய்ப்பட்டவர்கள் நீரிலே விழுந்து நீரைக் குடிப்பது, நீரை வாரி மேலே இறைத்துக் கொள்வது முதலான செயல்களைச் செய்யுமாப் போலே, எம்பெருமானை வாயாலே பேசியும், தலையாலே வணங்கியும், நெஞ்சாலே நினைத்தும் தரிசிக்கப் பார்க்கின்றார்—திருக்குறுந் தாண்டகத்தில். இதில் உள்ள பாசுரங்கள் 20

**3. திருநெடுந்தாண்டகம்:** இது முப்பது பாசுரங்களைக் கொண்டது. இவற்றின் பொருள் நெறி நோக்கி முதல் பத்து, இரண்டாம் பத்து, மூன்றாம் பத்து என்று மூன்று பகுதிகளாகக் கொண்டும் சிலர் கூறுவர். முதல் பத்து ஆழ்வாரின் தாமான தன்மையிலும், இரண்டாம் பத்து பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக் கொண்டு தாய்ப் பேச்சிலும்; மூன்றாம் பத்து மகள் பேச்சிலுமாக அமைந்துள்ளன. பெரியவாச்சான் பிள்ளை இதைச் சரமப்பிரபந்தமாகக் கொள்வர்.

**4. திருஎழுக்கூற்றிருக்கை:** சித்திரக் கவி வகைகளுள் இரதபந்தம் அமைப்பில் அமைந்துள்ளது. இது, இரதபந்தமாவது, தேரின் உருவந்தோன்றக் கட்டங்கள் போட்டு அவற்றில் எண் முறையே பாசுரப் பகுதிகளை அடக்க வேண்டும். தேருக்கு மேற்பகுதி என்றும், கீழ்ப்பகுதி என்றும் இரண்டு பகுதிகளாக இருக்கும் என்பதை நாம் அறிவோம். ஒவ்வொரு பகுதியிலும் ஏழு கூறுகள் உண்டாகும்படிக் கீறவேண்டும். அப்படிக் கீறும்போது முதற் கூறு மூன்று அறையும், இரண்டாம் கூறு ஐந்து அறையும், மூன்றாம் கூறு ஏழு அறையும், நான்காம் கூறு ஒன்பது அறையும், ஐந்தாம் கூறு பதினோரறையும், ஆறாம் கூறு பதின்மூன்றறையும், ஏழாம் கூறு அங்ஙனமேயாக, இப்படி ஒன்றிற் கொன்று இரண்டறை மேற்பட்ட முறையே கீறவேண்டும். மேற்பாகத்தில் தலையிலிருந்தும் கீழ்பாகத்தில் அடியிலிருந்தும் இந்த முறை கொள்ளத் தக்கது. வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களில் இதன் இலக்கணம் கூறப்பெற்றுள்ளது.

ஆழ்வார்களுள் திருமங்கை மன்னன் ஒருவர்தாம் இவ் வகையான சித்திரகவி அருளியுள்ளார். இதைத் தவிர, திருக் குருகைப் பெருமாள் கவிராயர் செய்துள்ள மாறன் அலங்காரம் என்னும் சிறந்த நூலில் சொல்லணியியலில் நம்மாழ்வார் விஷய மிக ஒரு எழு கூற்றிருக்கை பாடியுள்ளார். ஞானசம்பந்தப் பெருமான் அருளியுள்ள தேவாரப் பதிகங்களுள்ளும் (முதல் திருமுறையில்) ஒரு எழு கூற்றிருக்கை உண்டு. எழு கூற்றிருக்கை யாகிய இப்பிரபந்தம் ஆசிரியப்பா வகையில் நிலை மண்டில ஆசிரியப்பாவாக அமைந்துள்ளது. இஃது திருக்குடந்தை ஆரா அமுதனை ஆர்த்தியோடு சரணாகதி செய்வதாக அமைந்த பிரபந்தம்.

5. சிறிய திருமடல்: இது மடலேறுதல் என்னும் துறையில மைந்தது. இஃது ஆழ்வார் தாமான தன்மையிலிருந்து பேசு கின்ற பிரபந்தம் அன்று கிருட்டிணாவதாரத்தில் குடக் கூத்தில் அகப்பட்டு அன்னவனை அநுபவிக்கப்பெறாது வருந்தி மடலெடுக்கத் துணிந்த ஒரு பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு அவளுடைய பாசுரத்தாலே தமது நிலையை வெளியிடும் பிரபந்தம் இது. இஃது "அவதாரங்களில் உண்டான நீர்மையை அழிக்கின்றேன்" என்று கூறுவதாக அமைந்தது. இப்பிரபந்தம் கலிவெண்பாவால் அமைந்தது.

6. பெரியதிருமடல்: இதுவும் மடலூர்தல் என்ற துறையில் அமைந்த நீண்ட பிரபந்தம். இதில் நீர்மைக்கு எல்லை நிலமான கோயில்களில் நின்ற நீர்மையையும் அழிக்கின்றேன் என்கின்றார் இதுவும் கலிவெண்பாவால் ஆனது.

மடல்பற்றிய கருத்து: இப்பொழிவில் மடல் பற்றிய ஆழ்வாரின் கருத்தைக் கூறி விடலாம் எனக் கருதுகின்றேன். 'மடலேறுதல்' அகப்பொருள் துறைகளுள் ஒன்று என்பதை நாம் அறிவோம். காமம் காழ்க்கொள்ளுங்காலத்தில் ஆடவன் மார்பில் எலும்பு மாலையும் தலையில் எருக்க மாலையும் கொண்டு பனங்கருக் கால் செய்யப்பெற்ற குதிரைமேல்ஏறித் தெருவில்வருவது 'மடலேறுதல்' ஆகும். ஆடவன் மகளிரைக் குறித்து மடலேற லாமேயன்றி பெண் ஆடவனைக் குறித்து மடலூரலாகாது என்பது தமிழ் நெறியில் விதிக்கப் பெற்ற ஒரு வரம்பாகும்.

எத்திணை மருங்கினும் மகடூஉ மடல்மேல்
பொற்புடை நெறிமை இன்மையான[45]

என்பது தொல்காப்பியம். திருவள்ளுவரும்,

கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்.[46]

என்று இந்நெறியை வலியுறுத்துவதைக் காணலாம்.

திருமங்கையாழ்வார் பிராட்டி தசையை அடைந்து பரகால நாயகி ஆனபின்னர் மடலூரப் புகுதல் பொருந்துமோ என்ற வினா எழுகின்றது. இந்த ஆழ்வார் அருளியுள்ள 'சிறிய திருமடல்' 'பெரியதிருமடல்' என்ற பிரபந்தங்களிலும் ஆழ்வார் நாயகி மடலேறத் துணிவதாகக் கூறப்பெறுகின்றது. இதனைத் தமிழ் மரபினை மீறிய ஒரு புரட்சி என்று கருதலாமா என்பது வினா. இரண்டு திருமடல்களிலும் ஆழ்வார் நாயகி 'மடலூர்வன், மடலூர்வன்' என்று சொல்லி அச்சமுறுத்தினாரேயன்றி அச் செயலை முற்ற முடிய நடத்தினதாகக் கூறவில்லை. சிறிய திரு மடலில்,

ஓர்ஆனைக் கொம்பொசித்து ஓர்ஆனைக் கோள்விடுத்த
சீரானை செங்கண் நெடியானை தேன்துழாய்த்
தாரானைத் தாமரைபோல் கண்ணானை எண்ணருஞ்சேர்
பேர்ஆ யிரமும் பிதற்றிப் பெருந்தெருவே
ஊரார் இகழிலும் ஊராது ஒழியேன்நான்
வார்ஆர்பூம் பெண்ணை மடல்.[47]

45. தொல்: பொருள் அகத்திணை - 38 (இளம்)
46. குறள் - 1137
47. சிறிதிருமடல்.

என்று கூறுவதாலும், பெரியதிருமடலிலும்,

உலகறிய ஊர்வன்நான்

முன்னி முளைத்தெழுந்து ஓங்கி ஒளி பரந்த
மன்னியபூம் பெண்ணை மடல்[48]

என்று கூறுவதாலும் இதனையறியலாம். நம்மாழ்வாரும்,பராங்குச நாயகி நிலையில் இம்மடலேறுதலைக் குறிப்பிடும்பொழுது,

தோழி! உலகு தோரலர் தூற்ற, ஆம்
கோணைகள் செய்து குதிரியாய்மட லூர்துமே[49]

[கோணை - பிணுக்கு; குதிரி-அடங்காதபெண்]

என்றும்,

யாம்மடல் ஊர்ந்தும் எம்மாழி
அங்கைப் பிரானுடை
தூமடல் தண்ணந் துழாய்மலர்
கொண்டு சூடுவோம்
யாம்மடம் இன்றித் தெருவு
தோறயல் தையலார்
நாமடங் காப்பழி தூற்றி
நாடும் இறைக்கவே[50]

என்றும் கூறுவது ஈண்டு ஒப்புநோக்கி அறியத்தக்கது. எனவே. ஆழ்வார்கள் தமிழ் நெறியினை அறியாது கூறினர் என்று கொள்வதற்கில்லை. ஆகவே, ஆழ்வார்கள் கூற்றினைப் புரட்சிப் போக்கு என்று சொல்வதும் ஒவ்வாது.

ஆழ்வார் தாமும் தாம் தமிழ்நெறியினை அறிந்திருப்பதாகவும், வடநெறியினைப் பின்பற்றியே இத்துணிவினை மேற்கொண்டதாகவும் கூறுவர்.

'மான்நோக்கின்
அன்ன நடையார் அலரேச ஆடவர்மேல்

48. பெரிய திருமடல்.
49. திருவாய் 5: 3. 9
50 ஷெ 5:3:10

மன்னும் மடலூரார்' என்பதோர் வாசகமுங்கம்
தென்னுரையில் கேட்டறிவ துண்டுஅதனை யாம்தெளியோம்
மன்னும் வடநெறியே வேண்டினோம்.[51]

என்ற பெரிய திருமடல் பகுதியால் இதனை அறியலாம். "மட லேறுதல் என்பது ஆசைமிகுதியால் மேற்கொள்ளும் ஒரு செயல். ஆசையை வரம்பிட்டுக் காக்க யாராலும் இயலாது. அரச ராணைக்கும் அது கட்டுப்படுமோ? வேலியடைத்தால் நிற்குமோ வேட்கை? அளவு கடந்த வேட்கையின் காரணமாக விளையக் கடவதான மடலூருதலை ஆண்கள் தாம் மேற்கொள்ளலாம், பெண்கள் மேற்கொள்ளலாகாது என்று வரம்பு கட்டுவது காதலின் இயல்பை அறியாதவர்களின் செயலாகும் என்பது ஆழ்வாருடைய திருவுள்ளம்'' என்று கொண்டால் ஆழ்வார் புரட்சியான போக்குடையவர் என்று கருதலாம்.

**ஞானசம்பந்தர் சந்திப்பு:** திருமங்கையாழ்வர் சோழநாட்டுத் திருப்பதிகளை மங்களாசாசனம் செய்து வருகையில் சீகாழியில் இவரது சீடர்கள் வழக்கப்படி நாலுகவிப்பெருமாள்[52] வந்தார், அருள்மாரி வந்தார், அரட்டமுக்கி வந்தார், அடையார்சீயம் வந்தார், ஆலிநாடர் வந்தார், மங்கைவேந்தர் வந்தார், பரகாலர் வந்தார் முதலான விருதுகளை ஏந்திக்கொண்டும், இந்த விருதுகளை வாயால் முழங்கிக் கொண்டும் ஆழ்வாருக்கு முன்னே செல்வாராயினர். அப்போது அவ்வூரில் இருந்த திருஞான சம்பந்தப் பெருமானின் அடியார்கள் வந்து எங்கள் நாயனார் இருக்குமிடத்தில் நீங்கள் விருது ஓதிச் செல்லலாகாது என்று தடுத்து நிறுத்தினர். ஆழ்வாரும் 'உங்கள் நாயனாருடன் தர்க்கிப்போம்' என்று அவ்வூர்த் தாடாளப் பெருமானை எழுந்தருள்வித்துக்கொண்டு சம்பந்தப் பெருமான் இருக்கும் இடம் சென்றார். சம்பந்தப் பெருமான் இவரைக்குறித்து ஒருகவி சொன்னார் என்றும், அதில் இவர் ஒரு குற்றம் சொன்னார்

51 பெரியதிருமடல்

52. நாலுகவி - ஆசு, மதுரம், சித்திரம், விஸ்தாரகவிகளைப் பாட வல்லவர்.

என்றும், சம்பந்தப்பெருமான் 'நீர் ஒருகவி சொல்லும்' என்று ஆழ்வாரைக் கேட்டார் என்றும், ஆழ்வாரும் 'ஒருகுறளாய் இருநிலம்' (பெரி. திரு. 3,4) என்னும் திருமொழியை அருளிச் செய்தார் என்றும், அதில் திருக்கடைக்காப்புப் பாசுரத்தில் தம் விருதுகளெல்லாம் தோன்றும்படி,

செங்கமலத்து அயன் அனைய மறையோர் காழிச்
சீராம விண்ணகர்என் செங்கண் மாலை
அங்கமலத் தடவயல்சூழ் ஆலி நாடன்
அருள்மாரி அரட்டுஅமுக்கி அடையார் சீயம்
கொங்குமலர்க் குழலியர்வேள் மங்கை வேந்தன்
கொற்றவேல் பரகாலன் கலியன் சொன்ன
சங்கமுகத் தமிழ்மாலை பத்தும் வல்லார்
தடங்கடல்சூழ் உலகுக்குத் தலைவர் தாமே.[53]

என்றும் பாடினார் என்றும், சம்பந்தரும் இதைக் கேட்டு மறுமொழி சொல்ல இயலாமல் 'உமக்கு இவ்விருதுகளெல்லாம் பொருந்தும்' என்று கூறிச் சென்றார் என்றும், அப்படிப் போகும் போது தமது வேலாயுதத்தை இவருக்குக் காணிக்கையாகக் கொடுத்துச் சென்றார் என்றும் குருபரம்பரையில் ஒரு வரலாறு

53. பெரி. திரு. 3.4:10. ஆலிநாடன் - ஆலிநாட்டுத்தலைவர்; அருள் மாரி-பக்தர்கட்கு அருளைப் பொழியும் மேகம்; அரட்டு அமுக்கி - தீங்கு செய்பவர்களைத் தலை எடுக்க வொட்டாமல் அமுங்கச் செய்பவர்; அடையார் சீயம் - பகைவர்கட்குச் சிங்கம் போன்றவர்; மங்கை வேந்தன் - திருமங்கை நாட்டுக்கு மன்னர்; பரகாலன் - எதிரிகட்குக் கூற்றுவன் போன்றவர்; கொற்றம் வேல் - வெற்றி பொருந்திய வேற்படை

உண்டு. சைவ இலக்கிய வரலாற்றில் இதுபற்றிய குறிப்பு ஒன்றும் இல்லை. ஆகவே இது ஆராயத் தக்கது; யாரோ ஒருவர் திருமங்கையாழ்வாருக்குப் பெருமை சேர்க்க வேண்டும் என்று குறுகிய நோக்குடன் இட்டுக்கட்டிய வரலாறுபோல் தோன்றுகின்றது.

**வாழ்க்கைபற்றிய அகச்சான்றுகள்:** இந்த ஆழ்வாரது பாசுரங்களிலிருந்து இவரது வாழ்க்கையைப்பற்றிய பல செய்திகளை அறியலாம்.

இவர் ஆலி நாட்டுக்கும், திருமங்கை குறையல் என்ற திருப்பதிக்கும் தலைவர்[54]. இவருக்குத் கலிகன்றி முதலாகப் பல திருநாமங்கள் உண்டு.[55] அமரில் போர் செய்யவல்ல யானைப் படை குதிரைப்படைகளைப் படைத்தவர்.[56] பெருங்கொடையாளி[57], திண்ணிய தோள்வலி மிக்கார்[58]. தேர்ப்படை காலாட் படைகளை யுடையவராகத் திகழ்ந்தார்.[59] வேல் வல்லார் என்றும் [60] போர்த்திறம் வாய்ந்த பெருவீரர் என்றும், [63] செந்தமிழ்ப் புலமை வாய்ந்த சீரியோர் என்றும், [62] திருமங்கை என்பது பல மாடமாளிகைகள் நிரம்பிய பெரும்பதி என்றும் [61] இவர்தம் பாசுரங்களினின்றும் அறியப்படும் இவர் திருமால்.

54. பெரிய. திரு. 4.4: 10; 1.3: 10; 7:3: 10; 6.6: 10; 9:8: 10
55. ஷை. 3.4. 10; 3. 2: 10
56. ஷை. 2 4. 10; 2.5: 10; 518: 10; 7.4: 10; 9: 10: 10
57. ஷை. 3.2: 10; 4.2: 10
58. ஷை. 6.8: 10; 7.2: 10
59. ஷை. 7.4: 10; 10.9: 10
60. ஷை. 4.4: 10; 3.4: 10
61. ஷை. 3.9: 10; 3.4: 10
62. ஷை. 5.2: 10; 7,7:10; 9.6: 10; 10.1: 10
63. ஷை. 1.9:10

அடிமையிற் சிறந்து விளங்கிய அடியாரென்றும், மறந்தும் புறந் தொழா மாண்புடையாளர் என்றும் இவரது திருவாக்கினைக் கொண்டே தெளியலாம்.[64] இந்த ஆழ்வார் திருமாற்கே பரத்துவம் கூறுவார். அவரது அவதாரங்களையும் அவற்றில் நிகழ்த்திய அருஞ்செயல்களையும் நயம்படப் பாராட்டுவர்[65] பிரமன், சிவபெருமான், முருகன் இவர்கட்கு மேலான தெய்வம் திருமால் என்பர்.

திருமால் பக்தியில் ஈடுபட்டு அவனுக்குத் தான் தொண்டு பூண்ட தன்மையையும் தன்னை அவன் ஆட்கொண்ட பெருமையையும், அழியும் மாலைத்தாகிய பல்வகை உறவினைக் காட்டிலும் என்றும் அழியாது பவக்கடலினின்றும் ஏற்ற வல்ல அழியா உறவாகிய கோவிந்தனது அருட்டிறத்தையும் பலவிடங்களிலும் உள்ளுருகிப் பாடியுள்ளார். தாம் இன்பத் துறையில் எளியனாகிப் பலவாறு வருந்தி நின்றதும் பலவிடங்களிலும் குறித்துக் காட்டப்பெறும். "வாடினேன் வாடி" என்று தொடங்கும் முதல் திருமொழி முதற்பாசுரத்தில், மகளிர் கலவியே கருதி ஓடியதும், பின்னர் இறைவன் அருளைத் தேறித் தெளிந்ததும் அழகுபடக் கூறியிருப்பதைக் காணலாம். இறைவனை "எம்பிரான் எந்தை, என்னுடைச் சுற்றம், எனக்கரசு என்னுடைய வாணாள்"[66] என்பர். மற்றும்,

சிலம்படி யுருவிற் கருநெடுங் கண்ணார்
திறத்தனாய் அறத்தையே மறந்து
புலம்படித் துண்ணும் போகமே பெருக்கி[67]

என்ற அடிகளும் இவர் மகளிர் வலையிற் சிக்கிக் கலங்கி யதைத் தெரிவிக்கும். காளைப் பருவத்தில் தான்றோன்றியாகக் கயவருடன் திரிந்துழந்ததையும், பின்னர்ப் பெருமான் அருளால்

64. பெரி. 7.1: 10; 9.6: 10; 4.9 4; 10.8: 7; 6.3: 5; 6.9: 7
65. பெரி. 1.1: 4; 1.5 1; 1 10: 4; 6.7: 8; 6.10: 6; திருநெடுந். 20.
66. பெரி. திரு 1.1: 6
67. பெரி 1.6: 2

தாம் உய்ந்ததையும் பல பாசுரங்களில் குறித்துச் செல்வர்.

கள்வனேன் ஆனேன் படிறுசெய் திருப்பேன்
கண்டவா திரிதந்தேன்.[68]

கோடிய மனத்தாற் சினத்தொழில் புரிந்து
திரிந்துநா யினத்தொடும் திளைத்திட்

ஓடியும் உழன்றும் உயிர்களே கொன்றேன்
உணர்விலேன்[69]

நானே நானாவித நரகம்புகும்
பாவம் செய்தேன்[70]

கொன்றேன் பல்லுயிரைக் குறிக்கோ
ளொன்றிலாமை யினால்[71]

தெரியேன் பாலகனாய்ப்பல தீமைகள்
செய்துயிட்டேன்.[72]

என்ற பாசுரப்பகுதிகள் இவர்தம் வாழ்க்கைவரலாற்றில் சில பகுதிகளை விளக்குதல் கூடும்.

இந்த ஆழ்வார் இளமை, செல்வம், யாக்கை என்ற மூன்றின் நிலையாமையையும் நன்குணர்ந்தவர்; பிறர்க்கும் அந்த நிலையை வற்புறுத்திக்காட்டிய பாசுரங்கள் பலவாகும்.

68 பெரி: திரு 1. 1: 5
69 ஷை 1. 6: 6
70 ஷை 1. 9; 2
71 ஷை 1. 9: 3
72 ஷை 1. 9: 7

உறிகள் போல்மெய்ந் நரம்பெழுந்து
ஊன்தளர்ந்து உள்ளம் எள்கி [73]

பண்டு காமர் ஆன வாறும்
பாவையர் வாய்அமுதம்
உண்ட வாறும் [74]

ஊனிடைச் சுவர்வைத் தென்புதூண் நாட்டி
உரோமம் வேய்ந்தொன்பது வாசல்
தானுடைக் குரம்பை பிரியும்போது உன்தன்
சரணமே சரணம் [75]

கனிசேர்ந் திலங்குநல் வாயவர்
காதன்மை விட்டிடக்
குளிசேர்ந் துடலம் கோல்தளர்ந்து
இளையாமுன். [76]

என்ற பாசுரப் பகுதிகளில் இதனைக் காணலாம்

**திருவரங்கத்தில் திருப்பணி:** நாகப்பட்டினத்திலுள்ள பௌத்தப் பள்ளியொன்றில் இருந்த பொற்சிலையொன்றினைக் களவிற் கைப்பற்றி அதனை உருக்கி விற்றதனால் கிடைத்த பொருளைக் கொண்டு திருவரங்கத்தில் அழகியமணவாளனுக்கு விமானம், மண்டபம், கோபுரம், மதில் முதலிய கைங்கரியங்களைச் செய்தார் என்பது குருபரம்பரையில் காணும் செய்தி. பரகாலர் தம் பரிவாரத்துடன் நாகப்பட்டினத்தை அடைகின்றார். மிகவும் சிற்பவேலைகளமைந்த புத்தவிகாரத்திற்குள் நுழையும் வழி காணப்படவில்லை. விகாரம் முழுவதும் ஆய்ந்ததில் விகாரத்தின் உச்சியில் ஓர் எந்திரம் இடைவிடாது சுழன்று கொண்டிருப்பதைக் காண்கின்றார். அதை நிறுத்துவதற்குரிய வழியைச் சிந்திக்கின்றார். பலவாழைத் தண்டுகளைக் கொணர்ந்து சிறுசிறு

73 திரு. 1. 3: 3
74 பெரி. திரு 1. 3: 5
75 திரு. 1. 6: 9
76 திரு. 6. 4: 9

துண்டுகளாக்கி அச்சக்கரத்தின் இடைவிடாது கொடுத்துவர அதன் நூல்கள் நடுவில் சுற்றிக்கொண்டதனால் அச்சக்கரப் பொறி அசையாமல் நின்று விடுகின்றது. பின்னர் அவ்வழியாகச் தம் சீடர்களுள் ஒருவரை விகாரத்தினுள் இறங்கச்செய்து அவரால் பொற்சிலையை எடுக்கச் செய்கின்றார்.

சீடர் அதைக் கவரத் தொடங்குகையில் அந்தச் சிலை மந்திர பலத்தால் அவர் கைக்குச் சிக்காமல் அவ்விகாரம் முழுவதும் ஓடத் தொடங்குகின்றது. புறத்திலிருந்து திருமங்கை மன்னன் தந்த குறிப்பின்படி சீடர் அதனைக் கைப்பற்றி விடு கின்றார் உடனே அஃது ஆற்றல் குன்றி,

ஈயத்தா லாகாதோ? இரும்பினா லாகாதோ?
பூயத்தால் மிக்கதொரு பூதத்தா லாகாதோ?
தேயத்தே பித்தளைநற் செம்புகளா லாகாதோ?
மாயப்பொன் வேணுமோ மதித்துன்னைப்
பண்ணுகைக்கே?

என்று அந்தச் சிலை ஊளையிட்டுக் கொண்டு விழுகின்றது. பின்னர் அந்தச் சீடர் அப்பொற்சிலையை எடுத்துக் கொடுக்கத் திருமங்கையாழ்வார் மிக உகந்து அதை வாங்கி பங்கப்படுத்து கின்றார். நாகப்பட்டினத்திலிருந்து இரவோடு இரவாக எடுத்துக் கொண்டு வருகின்றார்.

பொழுது புலரும் சமயத்தில் திருக்கண்ணங்குடி என்னும் திவ் விய தேசத்தை அடைகின்றார். அங்கு உழுது சேறாயிருக்கும் ஒருவயலில் அச்சிலையைப் புதைத்து வைக்கின்றனர் அவருடன் வந்தவர்கள். அருகிலுள்ள உறங்காப் புளியமரத்தின்கீழ்த் தங்குகின்றனர். அந்த வயலுக்குரியவன் நாற்று முடிகளை எடுத்துக் கொண்டு நடுவதற்காக வருகின்றான். ஆழ்வார் அவனைத் தடுத்து நிறுத்தி "இஃது எங்கள் பாட்டன் தேடிய வயல்" என்று வழக்கிடத் தொடங்குகின்றார். தோலா வழக்கன் தான் பக்கபலமாக இருக்கின்றானே! அவன் திடுக்கிட்டு எதிர் வழக்கிடுகின்றான். அதற்குப் பரகாலர் "நாளைக் காலையில்

பத்திரம் கொண்டு வருகின்றேன். இல்லாவிட்டால் நீ உழுது கொள்ளலாம்'' என்று கூற அவனும் அதற்கு ஒப்புக் கொண்டு மீண்டுச் செல்கின்றான்.

ஆழ்வார் புதைக்கப்பெற்ற சிலையை இரவோடு இரவாக எடுத்துக் கொண்டு திரு அரங்கம் வருகின்றார், அதனை உருக்கி விற்றுப் பணம் ஆக்குகின்றார்.[77] இந்தப் பணத்தைக் கொண்டு தம் திருப்பணியைத் தொடங்குகின்றார். திருப்பணி செய்து வருகையில் தொண்டரடிப் பொடியாழ்வார் திருமாலை சேர்த்து வந்த இடம் நேர்படுகின்றது. அதனை ஒதுக்கி மதிலை அமைக்கின்றார் மங்கை மன்னன்.

**இதுபற்றிய ஆய்வு:** திருப்பணி செய்ததை ஒப்புக்கொண் டாலும் நாகைச் செய்தி ஒப்புக் கொள்வதற்கில்லை.

(1) 11–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கடார வேந்த னான ஸ்ரீமகாவிஜயோத்துங்கவன்மனால் நாகையில் 'சூடாமணி பத்மவிகாரம்' என்ற பௌத்தப் பள்ளி ஒன்று கட்டப் பெற்ற தென்றும், அதற்கு முதல் இராசராசனால். கி. பி. 1008 ஆண்டு ஆனைமங்கலம் என்ற சிற்றூர் தானமாக அளிக்கப்பட்ட தென்றும் கல்வெட்டுகளால் அறியப்படுகின்றன. இச்செய்திகள் ஆழ்வார் 11–ஆம் நூற்றாண்டின் பின்னிருந்தவர் என்று கொள்ள இடம் தருகின்றன. இது பொருந்தாது.

(2) இராசராசன் மகன் முதல் இராசேந்திரன் கி. பி. 1013 முதல் கி. பி. 1045 வரை ஆட்சி செய்தவன். ஆகவே, அவன் ஆட்சியில் விகாரம் நன்னிலையில் இருந்தது என்பது தெளிவு. இக்காலமே நாதமுனிகளின் திருப்பெயரர் ஆளவந்தார் வதிந்த காலம் என்பர். ஆகவே முற்கூறிய கொள்கைப்படி கொண்டால் திருமங்கை மன்னன் ஆளவந்தாருக்குப் பின்னிருந்தவர் என்று கொள்ள நேரும். இது முற்றிலும் பொருந்தாததொன்று.

(3) இந்த ஆழ்வார்காலத்திலும் பௌத்த சமணர்கள் சிற்சில இடங்களில் தலைமை பெற்று விளங்கினர் என்பதற்கும் அந்நூற் றாண்டில் ஆண்ட மன்னர்களும் ஒரே சமயச் சார்பின்றிப் பல சமயங்கட்கும் உதவி புரிந்தனர் என்பதற்கும் இலக்கியச் சான்றுகள்

77. இந்த வரலாறு பட்டரின் ஸ்ரீரங்கராஜஸ்வத்திலும் (சுலோகம்-36) காணப்படுகின்றது.

உள்ளன. இந்த ஆழ்வாரே தமது திருமாலிருஞ் சோலைப் பதிகத்தில்,

புந்தியில் சமணர் புத்தரென் றிவர்கள்
ஒத்தன பேசவும் உவந்திட்டு
எந்தைஎம் மானார் இமையவர் தலைவர்
எண்ணிமுன் இடங்கொண்ட கோயில்,[78]

என்று பாடியுள்ளமையே ஒரு சான்றாகின்றது.

பகல் **பத்து–இராப்பத்துப் பெருவிழா:** திருமங்கையாழ்வார் தமது ஆறு திவ்வியப்பிரபந்தங்களையும் அருளிச் செய்த பிறகு திருவரங்கத்திற்கு எழுந்தருளித் திருநெடுந்தாண்டகத்தை தேவகானத்தில் இசைத்துப் பாடுகின்றார். பெரிய பெருமாள் இதைக் கேட்டு திருவுள்ளம் உகக்கின்றார். "உமக்கு வேண்டிய வரம் பெற்றுக் கொள்ளும்" என்று நியமித்தருள் கின்றார். பரகாலரும் "தேவரீர் மார்கழிமாதத்தில் கண்டருள் கின்ற அத்யயன உற்சவத்தில் நம்மாழ்வார் அருளிச் செய்த திராவிடவேதத்தையும் திருச்செவி சாத்தியருள வேணும்" என்று பிரார்த்திக்க, பெருமாளும் அவ்வண்ணமே அருள்புரி கின்றார். அவர் ஆணைப்படி மங்கை மன்னன் ஆழ்வார் திருநகரியிலிருந்து அர்ச்சை வடிவமான நம்மாழ்வாரை ஆண்டு தோறும் திருவரங்கத்திற்கு எழுந்தருளச் செய்து அவர் முன் னிலையில் உபயவேதாந்த பாராயணத்தையுப் சிறப்பாக நடை பெறச் செய்கின்றார்; பத்து நாள் உற்சவமாகக் கொண்டாட ஏற்பாடு செய்கின்றார். உற்சவம் முடிந்தபின்பு பராங்குசரை மீண்டும் திருக்குருகூருக்கு எழுந்தருளப்பண்ணுவித்து வரு வாராயினார்.

இங்ஙனம் பத்து நாட்கள் விழாவாகத் தொடங்கிய திரு அத்யயன உற்சவம் ஆசாரியர்கள் காலத்தில் மற்றைய ஆழ்வார்களுக்காகப் பத்து நாள் பகல் உற்சவமும் இருபது

78. பெரி. திரு 9.8: 9

நாட்கள் முடிந்த பிறகு இயற்பா உற்சவமும் சேர்க்கப்பெற்று, இருபத்தொருநாள் விழாவாக வளர்ந்தது. பட்டர் காலத்தில் திருநெடுந்தாண்டகத்திலுள்ள சிறப்பை நோக்கிப் பகல் பத்திற்கு முந்தின நாள் திருநெடுந்தாண்டக உற்சவமும் சேர்க்கப் பெற்று இப்போது உள்ளபடி நடைபெற்று வருகின்றது. பிற்காலத்தில் ஆழ்வார் திருநகரியிலிருந்து நம்மாழ்வாரை எழுந்தருளப் பண்ணுவதில் பல சிரமங்கள் ஏற்பட்டபடியாலே திருவரங்கத்திலேயே ஆழ்வார்களுடைய உற்சவ மூர்த்தங்கள் பிரதிட்டை செய்விக்கப்பெற்றுத் திரு அத்யயன உற்சவம் மிகச் சிறப்பாக நடைபெற்று.வருகின்றது திருவரங்கம், காஞ்சி, ஆழ்வார் திருநகரி ஆகிய இடங்களில் இது இன்றும் நடைபெற்று வருகின்றது.[79]

**ஆராவமுதனிடம் ஈடுபாடு**: திருமங்கையாழ்வார் திருக்குடந்தை ஆராவமுதனிடம் அளவற்ற ஈடுபாடுகொண்டவர் என்பது அவரது பாசுரங்களால் தெளிவாகின்றது. மறைந்து போயிருந்த திவ்வியப் பிரபந்தம் வெளிவருவதற்குத் திறவு கோலைத் தந்தவரல்லவா? இந்த ஆழ்வார் இத்தலத்து எப்பெருமானை 'குடந்தை உத்தமன்' [80] என்கின்றார்; 'தண் குடந்தை நகராளன்' [81] என்று பேசுகின்றார்; 'கொந்துலாம் பொழில்சூழ்க் குடந்தை தலைக் கோவினை...மறக்கேனே' [82] என்று உளம் உருகப் பாடுகின்றார்.

தூவிசேர் அன்னம் மன்னும்
சூழ்புனல் குடந்தை யானைப்
பாவியேன் பாவி யாது
பாவியேன் ஆயினேன் [83]

[தூவி-சிறகு; பாவியாது-சிந்தியாமல்]

'பழுதே பலகாலும் போயின' என்று அங்கலாய்க்கின்றார். திருவுக்கும் திருவாகிய அழுந்தையில் மன்னி நின்ற அஞ்சனக் குன்றம்தன்னைச் சேவிக்கும்போதும் இந்த நகர் எப்பெருமான் ஆழ்வார் மனக்கண்முன் காட்சி தருகின்றார்.

[79] ஆன்மிகமும் அறிவியலும் என்ற இந்த ஆசிரியரின் நூலில் 'திவ்வியப்பிரபந்தப் பெருவிழா' என்ற கட்டுரையில் விவரங்கள் காண்க.
80 பெரி. திரு 1.5; 4
81 டி 3,6; 5.5,7;
82 டி 7; 3; 3
83 திருக்குறுந். 14

பேரானைக் குடந்தைப்
பெருமானை இலங்கொளிசேர்
வாரார் வனமுலையாள்
மலர்மங்கை நாயகனை
ஆரா இன்னமுதை
தென்அழுந்தையில் மன்னிநின்ற
காரார் கருமுகிலைக்
கண்டு களித்தேனே, [84]

என்று எக்களிப்புடன் பாடுவதைக் காணலாம்.

எம்பெருமான் ஆசாரியனாக நின்று திருமந்திர உபதேசம் பெற்ற ஆழ்வார்,

தூவிசேர் அன்னம் துணையொடு புணரும்
சூழ்புனல் குடந்தையே தொழுதுஎன்
நாவினால் உய்ய நான்கண்டு கொண்டேன்
நாராய ணாஎன்னும் நாமம், [85]

என்று பாடுகின்றார். ''ஆராஅமுதப் பெருமானைத் திருக்குடந்தையில் சேவித்தேன்; தீயபொருள்களைப் பேசின வாயாலே திருமந்திரத்தை அநுசந்தித்து ஸ்வரூபம் பெற்றேன்'' என்று மகிழ்கின்றார். ''தூவிசேர் அன்னம் துணையொடு புணரும்'' என்றது பெருமாளும் பிராட்டியாரும் பிரியாது வாழும் சேர்த்தியைச் சொன்னபடியாம். ஈண்டு அன்னம் என்றது பெருமானை; துணை என்றது பிராட்டியை. நம்முடைய குற்றங்களைப் பொறுப்பிப்பவளும் பொறுப்பிப்பவனும் பிரியாது வாழும் இடம் குடந்தை என்றபடி.

84 பெரி. திரு. 7.6 : 9

85. ஷை 1: 1; 2

முதல் திருமொழியில் இங்ஙனம் பேசிய ஆழ்வார் இறுதிப் பிரபந்தமாகிய திருநெடுந்தாண்டகத்திலும் "தன் குடந்தைக் கிடந்த மாலை, நெடியானை, அடிநாயேன் நினைந்திட் டேனே"[36] என்று நாயகி நிலையில் திருக்குடந்தைக் கிடந்த மாலைப் பேசித் தலைக்கட்டுவதால் இப்பெருமான்மீது இந்த ஆழ்வார் கொண்டுள்ள மிக்க ஆதரம் உறுதிப்படுகின்றது. பரகாலநாயகி நிலையிலும்,

> பெற்றேன்வாய்ச் சொல்இறையும் பேசக் கேளாள்;
> பேர்பாடி தன்குடந்தை நகரும் பாடி
> பொற்றா மரைக்கயம்நீர் ஆடப் போனாள்;
> பொருஅற்றாள் என்மகள்உம் பொன்னும் அஃதே[37]
> [பேர்–திருப்பேர் நகர்; பொற்றாமரைக் கயம்
> திருக்குளம்; பொரு–ஒப்பு]

என்று தாய்ப்பாசுரமாகப் பேசுவர் ஆழ்வார். இங்கு ஆழ்வார் நாயகி எம்பெருமானையே 'பொற்றாமரைக் கயமாகப்' பேசுகின் றாள் என்பது பொருந்தும். அகப் பொருளில் புணர்ச்சியைச் சுனை ஆடல் என்றும், நீராட்டம் என்றும் பேசுகின்றோம் அல்லவா? எப்பெருமானோடு கலவி செய்ய விரும்புவதையே இங்குப் பொற்றாமரைக் கயத்திற்கு நீராடப் போவதாகச் சொல்லுகின்றாள். இந்த இன்சுவைமிக்க பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியானம்: "மகள்" அணியரங்கம்ஆடுதுமோ, என்று ஊரைச் சொன்னாள் (திருநெடுந்–23). தான் 'பொற்றா மரைக்கயம்,' என்று பெரிய பெருமாளைச் சொல்லுகின்றாள். 'தயரதன் பெற்ற மரகத மணித்தடம்' (திருவாய் 10.1:8) என்றும், 'வாசத்தடம் போல் வருவானே' (ஷ 8. 5: 1) என்றும் தடாகமாகச் சொல்லக் கடவதிறே" என்பதாம். மேலும் 'உம்பொன்' என்கின்றது அல்லாத ஆழ்வர்களை;'மத் துறு கடைவெண்ணெய் களவினிலுரலிடையாப்புண்டு, எத் திறம்! உடலினோடிணைந்திருந் தேங்கிய எளிவே!' (திருவாய் 1. 3: 1) என்று அவதாரத்தை அநுசந்தித்தே அவர்கள்

36 திருநெடுந். 29

37 ஷ 19

மோகித்தது; அர்ச்சாவதாரத்திலிறே இவள் மோகிப்பது" என்ற வியாக்கியானப் பகுதியும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

இந்த ஆழ்வார் ஆராவமுதனிடம் கொண்டிருந்த ஈடுபாடு இவர் அருளிய 'திருஎழுக் கூற்றிருக்கை' என்ற சித்திர கவியாலும் தெளிவாகின்றது. சார்ங்கபாணித் திருக்கோயில் ஊருக்கு நடுவே நடுநாயகம்போல் அமைந்துள்ளது. இத் திருக்கோயில் கும்பகோணத்திலுள்ள எல்லாக் கோயில்களையும் விடப் பெரியது. கோபுரமும் அப்படியே மிகப் பெரிதாக அமைந்துள்ளது. பதினொரு மாடங்களைக் கொண்டது. பெருமாள் சந்நிதியும் முன் மண்டபங்களும் ஓர் இரதம்போல் அமைக்கப் பெற்றுள்ளன. மண்டபத்தின் நான்கு பக்கங்களிலும் சக்கரங்கள், இரதத்தை இழுத்துச் செல்லும் குதிரைகள் இருக்கின்றன. இதனை நோக்கிய திருமங்கையாழ்வாரும் இத்திருக்கோயில் எம்பெருமானைப் பற்றி மங்களாசாசனம் செய்துள்ள 'திருஎழுக்கூற்றிருக்கை' என்ற பிரபந்தம் 'இரதபந்தம்' என்ற சித்திரக் கவியாக அமைத்தனர். இது சரணாகதித் தத்துவத்தை விளக்கும் பாசுரமாகும்.

'குன்றா
மதுமலர்ச் சோலை வண்கொடிப் படப்பை
வருபுனல் பொன்னி மாமணி அலைக்கும்
செந்நெல் ஒண்கழனித் திகழ்வனம் உடுத்த
கற்போர் புரிசைக் கனக மாளிகை
நிமிர்கொடி விசும்பில் இளம்பிறை துவக்கும்
செல்வம் மல்கு தென்திருக் குடந்தை
அந்தணர் மந்திர மொழியுடன் வணங்க
ஆடுஅரவு அமளியில் அறிதுயில் அமர்ந்த
பரம! நின் அடியிணைப் பணிவன்
வரும்இடர் அகல மாற்றோ வினையே 88

88. திருஎழுக்: அடி (37-45)

[குன்றா-குறையாத; மது—தேன்; படப்பை—தோட்டம்; பொன்னி-காவிரி; மணி—இரத்தினம்; கழனி—வயல்; கனகம் பொன்; துவக்கும்-தொடும்; மந்திரம்-வேதம்; அமளி—படுக்கை; வினை சம்சாரத் துன்பங்கள்; மாற்று – போக்கியருள்க]

என்ற அடிகளில் ஆர்த்தராய்ச் சரணம் புகுவதைக் கண்டு மகிழலாம்.

ஆராவமுதன் எழுந்தருளியிருக்கும் திருக்கோயில் அமைப்பிலும் இதன் பின்புறமுள்ள திருக்குளத்தின் அமைப்பிலும் தம்மனம் ஈடுபடும்போது நாம் புராணகாலத்திற்கு இழுத்துச் செல்லப் பெறுகின்றோம். திருமங்கையாழ்வார் மிகவும் ஈடுபாடு கொண்ட ஆராவமுதன் நம்மையும் ஈர்க்கின்றான். பிருகு முனிவர் ஒரு சமயம் வைகுந்தம் வருகின்றார் பரந்தாமனைச் சேவிப்பதற்கு. பரந்தாமன் ஏதோ காரணத்தினால் முனிவரைக் கவனியாது பாராமுகமாக இருக்கின்றான். இதனால் சினங்கொண்ட முனிவர் பரந்தமனின் திருமார்பில் எட்டி உதைக்கின்றார். பரந்தாமனோ சிறிதும் மனம் கவலாது முனிவரின் திருவடிகளைத் தொட்டு அவரைச் சேவிக்கின்றான்.

பரந்தாமனின் இச்செயல் பெரிய பிராட்டியாருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. சினங்கொள்ளுகின்றார். ''அகலகில்லேன் இறையும்''[39] என்று அவன் திருமார்பில் உறைபவள் அல்லவா? நேராக உதைவாங்கியவர் வாளா இருப்பாரா? இதனால் எம்பெருமானிடம் பிணங்கிக் கொண்டு வைகுந்தத்தைவிட்டு இப்பூவுலகிற்கு வருகின்றார்; வந்தவர் கொல்லபுரம் என்ற இடத்தில் தங்கி விடுகின்றார். பெரியபிராட்டியாரைத்தேடிக் கொண்டு பூவுலகிற்கு வருகின்றான் பரமபதநாதன். வந்தவன் பதுமாவதியைத் திருமணம்புரிந்து கொண்டு திருப்பதியில் சீநிவாசனாகத் தங்கிவிட்டு

39. திருவாய் 6. 10: 10

கின்றான். இந்நிகழ்ச்சியை நாரதர்மூலம் செவியுறுகின்றார் இலக்குமிதேவி; இதனால் அவருக்கு எப்பெருமான்மீது மேலும் சினம் மிகுகின்றது; அவனைத் தண்டிக்க வேண்டும் என்று திருப்பதிக்கு விரைகின்றார். இதனால் அச்சங் கொண்ட சீநிவாசன் நாரதரின் யோசனைப்படி குடந்தை வந்து அங்கு ஒரு பிலத்தினுள் [90] நுழைந்து கொள்கின்றார். சீநிவாசனைத் தேடிக்கொண்டு குடந்தை வருகின்றார் இலக்குமிப் பிராட்டி. சீநிவாசன் அவள் இலக்குக்கு அகப்படவில்லை.

நீர்வளமும் நிலவளமும் உள்ள குடந்தையின் இயற்கைச் சூழல் பிராட்டியின் மனத்தைக் கவர்கின்றது; இத்திருத்தலத்தில் எம்பெருமானுடன் இணைந்து வாழ நினைக்கின்றார். திருக் கோயிலருகிலுள்ள திருக்குளத்தின் பொற்றாமரையில் பால கோமளவல்லியாக அவதாரம் செய்கின்றார். இறைவனை நோக்கித் தன்னைத் திரும்பப் பெறுமாறு தவம் கிடக்கின்றார். இந்தக் காலத்தில் பிருகு முனிவரும் ஹேமமுனிவராகப் பிறக்கின்றார். தம்முடைய தவறுதலுக்குப் பரிகாரம் தேடு கின்றார். தந்தை நிலையிலிருந்து கொண்டு பால கோமல வல்லியைப் பராமரிக்கின்றார். அவரைச் சேர்த்துக் கொள்ளவும் இறைவனை வேண்டுகின்றார். எம்பெருமானும் இருவர் வேண்டு கோளுக்கும் இரங்கி திருவரங்கத்திலுள்ள பிரணவ விமானத் தினின்றும் வைதிக விமானத்தைப் பிரித்துக் கொண்டு, ஓர் இரதத்தில் குடந்தைக்கு ஒரு மகாசங்கராந்தியன்று எழுந்தருளு கின்றார். பாலகோமலவல்லியைத் திருமணம் புரிந்து கொண்டு இருவர் மனங்களையும் நிறைவு செய்து விடுகின்றார். தானும் திருகுடந்தையில் ஹேமமுனிவரின் தவத்தை மெச்சும் வகையில் சார்ங்கம் ஏந்திச் சார்ங்கபாணி என்ற திருநாமத்துடன் தங்கி விடுகின்றார். அரங்கநாதனைப்போலவே இவரும் கிடந்த திருக்கோலத்தில் சேவை சாதிக்கின்றார். திருக்கோயிலின் பின் புறத்திலுள்ள பொற்றாமரைத் திருக்குளத்தின் கரையில்ஹேமமுனி

90. இதனை நினைவு படுத்தும் முறையில் இத்திருக்கோயிலில் பாதாள சீநிவாச சந்நிதி அமைந்துள்ளது.

வருக்கு ஒரு சிறிய சந்நிதி உள்ளது. ஹேமமுனிவரின் நினைவாக இத்திருக்குளம் ஹேமபுஷ்கரிணி என்றும், இலக்குமி பொற்றாமரையில் பாலகோமளவல்லியாக அவதரித்தமையால் பொற்றாமரைக்குளம் என்றும் திருநாமம் பெற்று வழங்குகின்றன.

இத்திருத்தலத்தை மங்களாசாசனம் செய்யும் பூதத்தாழ்வார்,

படமூக்கின் ஆயிரவாய்ப் பாம்பணைமேல் சேர்ந்தாய்
குடமூக்கில் கோயிலாக் கொண்டு [91]

[குடமூக்கு-கும்பகோணம்]

என்று பாடுவார்; ஒரு புராணவரலாற்றையும் நினைவுபடுத்துவார். ஒரு காலத்தில் நான்முகன் அமிர்தம், வேதங்கள் படைப்பின் விதைகள் ஆகியவை ஒருகலசத்தில் (கும்பம்) சேர்த்து அக்குடத்தை (கும்பம்-குடம்) மேருமலையின் உச்சியில் வைத்திருந்தார். பிரளயகாலத்தில் இக்குடத்தை வெள்ளம் அடித்துக்கொண்டு போய் விட்டது. அது வெள்ளத்தில் மிதந்து தெற்கு நோக்கி வந்தது. வெள்ளம் வடிந்ததும் 'திருக்குடம் கும்பகோணத்தில் (கும்பம்-குடம், கோணம்- மூக்கு) தங்கியது. தேவர்களின் வேண்டு கோளின்படி சிவபெருமான் ஓர்அம்பெய் து திருக்குடத்தை உடைத்தருளினார். குடத்திலிருந்த அமுதம் இரண்டு பிரிவாகப் பாய்ந்து ஒன்று மகாமகக்குளமாகவும், மற்றொன்று பொற்றாமரைக் குளமாகவும் அமைந்துவிட்டன. உடைந்த குடத்து ஓடுகளையும் அமிர்தத்தையும் சிவலிங்கமாக்கினார். கும்பத்திலிருந்த பெருமான் கும்பேசர்என்ற பெயருடன் கோயில்கொண்டுவிட்டார். ஊரும் கும்பகோணம் என்ற திருப்பெயரையும் பெற்றது. இந்தப் புராணவரலாறு நம்மைத் திருவேங்கடவன், அரங்கநகர் அப்பன், ஆராவமுதன் என்ற மூவரையும் நினைக்கச்செய்கின்றது. கும்பேசர்கோயிலுக்கும் சார்ங்கபாணி கோயிலுக்கும் இணைப்பு ஏற்படுத்திவிடுகின்றது. சைவ வைணவ ஒற்றுமைக்கும் ஒருபாலமும் அமைத்துக்காட்டுகின்றது.

---

91. இரண்திருவந்; 97

கின்றேன்' என்று இவனுக்குக் கண்ணழிவு சொல்ல வொண்ணாததேசம்'' என்பது. இதனை விவரிப்பேன் தலைவியை விட்டுப் பிரிந்துசெல்லும் தலைவன் நல்வாழ்க்கைக்கு உறுப்பாகவுள்ள அரும்பெரும் பொருள்கள் திரட்டிக் கொணர்வதற்காகத் தொலை நாடு செல்ல அவசியமில்லாதபடி திருப்புல்லணையில் மனை வாயிலிலே மணியும் முத்தும் மலிந்து கிடக்கின்றனவாதலின், அங்குச் சென்று கூடினோமாயின் பொருள்வயிற் பிரிவும் நேரமாட்டாது என்பது குறிப்பு. மேலும் ஆழ்வார், 'பொங்கு முந்நீர்க்கரைக்கே மணியுந்து புல்லாணி' (4) என்றும் 'புணரியோதம் பணிலம் மணியுந்து புல்லாணி' (5) என்றும் 'புரவி என்னப் புதம் செய்து [69] வந்துந்து புல்லாணி' (7) என்றும் இங்குள்ள கடலை வருணித்திருப்பதைக் கண்டு மகிழலாம் இந்த ஊர்க்கடற்கரைக்கு '**பொன்னங்கழிகானல்**' எனத் திருநாமம், இட்டு மகிழ்கின்றார். ஆழ்வார் வானமாமலையில் '**சேற்றுத்தாமரை**' என்ற திருநாமத்துடன் (திருவாய். 5 7: 1) தடாகமும் '**தேனமாம் பொழில்**' என்ற திருநாமத்துடன் தோப்பும் (5. 7: 6), திருமோகூரில் '**தாளதாமரை**' என்ற திருநாமத்துடன் தடாகமும் நம்மாழ்வார் திருவாக்கில் வந்துள்ளமை ஈண்டு நினைந்து மகிழ்வதற்குரியவை.

இங்குள்ள கடற்கரைச் சோலைகள் ஆழ்வார் திருவாக்கில் மிக அற்புதமாக இடம் பெற்றுள்ளன.

> இலங்கு முத்தும் பவளக்
> கொழுந்தும் எழில் தாமரை
> புலங்கள் முற்றும் பொழில் சூழ்ந்து
> அழகாய புல்லாணி [70]

---

69. புரவி – குதிரை; புதம்செய்தல் – தாவிப்பாய்தல்.

70. பெரி. திரு. 9. 3: 10

என்பது அவர் காட்டும் சோலை. 'ஒளிமல்குகின்ற முத்து களையும், அழகிய பவளத்துளிர்களையும் மலர்ந்த தாமரைப் பொய்கைகளையும் உடைத்தான சோலைகளால் சூழப்பட்டது திருப்புல்லாணி' என்கின்றார். 'தாதுமல்கு தடம்சூழ் பொழில்' (3) 'போது நாளும் கமழ் பொழில் சூழ்ந்த, புல்லாணி' (3), 'செழுந்தடம் பூஞ்சோலை சூழ் புல்லாணி' (9. 4: 6), 'பூஞ்செருந்தி பொன் சொரியும். புல்லாணி' (8), 'போதலரும் புன்னைசூழ் புல்லாணி' (9) என்ற அப்பெருமானின் வாக்குகளை எண்ணி மகிழ்கின்றோம். மேலும்,

கள்ளவி ழும்மலர்க் காவியும்
தூமடற் கைதையும்
புள்ளும் அள்ளற் பழனங்களும்
சூழ்ந்த புல்லாணி [71]

[கள்-மது; அவிழும்-ஒழுகும்; காவி-செங்கழுநீர்ப் பூ; தூமடல் - வெளுத்த மடல்; கைதை - தாழை; அள்ளல் - சேறு; பழனம் - வயல்]

என்று அந்தத் திவ்விய தேசத்தின் சூழலை நெய்தல் நிலக் கருப்பொருளைக் கொண்டே வருணித்திருக்கும் எழில் நலம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. ஆயினும், இன்று அச்சூழ் நிலையை நாம் காணமுடிகின்ற தில்லை!

**புதிய இலக்கிய உத்திகள்:** சங்க இலக்கியக் காலத்திற்குப் பிறகு பக்தி இயக்கக் காலத்தில் யாப்புமுறையிலும் விரைப்பான நடைப் போக்கிலும் முற்றிலும் மாறியன, கற்றவர்க்கு உரியன வாகப் பாடப் பெற்ற பாடல்களின் போக்கு மாறி கற்றவர்களோடு மற்றவர்களும் கூடிக்களிப்புடன் பாடுவதற்கு ஏற்றவாறு சந்தக் கொழிப்பும் இசை ஏற்றமும் கொண்ட பாசுரங்கள் பெருகின;

71. பெரி. திரு. 9. 3: 6

தமிழ்நடையிலும் நெகிழ்ச்சி அமைந்தது. மக்கள் கூட்டம் கூட்டமாகப் பாடித் திருக்கோயிலைச் சுற்றி வந்து வழிபடும் முறைக்கு ஏற்றவாறு இசைஇனிமையும் நடை எளிமையும் கூடினமையால் தமிழ் இலக்கியத்தில் ஒருவித புத்துணர்ச்சி பிறந்தது. புதியஇலக்கிய உத்திகளும் கையாளப் பெற்றதால் சமுதாயத்தில் பெரும்பாலோர் இலக்கியத்தைத் துய்க்கமுடிந்தது. பாமர மக்கள் மனத்திலும் இலக்கிய வானம் கவிந்து அவர்களிடமும் முருகுணர்ச்சி எழுவதற்குக் காரணமாயிற்று.

'பண்ஆர்தமிழ்' [72] 'செயிரில் சொல் இசைமாலை' [73] இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்' [74] 'கலிகன்றி செஞ்சொலால் எடுத்த தெய்வநன்மாலை' [75] என்ற ஆழ்வார் பெருமக்களின் வாக்குகளாலேயே இப்பாசுரங்கள் இசையுடன் பாடப்பெறுபவை என்பதை வலியுறுத்தும். திருவாய்மொழி முழுமைக்கும் பெரிய திருமொழியில் கிட்டத்தட்ட முக்கால் பங்கு அளவிற்கும் பண் – தாளக்குறிப்புகள் அமைந்திருத்தல் கவனித்தற்குரியது.

பண்ணார் பாடல் இன்கவிகள்
    யானாய்த் தன்னைத் தான்பாடி
தென்னா என்னும் என்அம்மா
    திருமா லிருஞ்சோ லையானே [76]

என்ற நம்மாழ்வாரின் திருவாக்கு முத்தாய்ப்புவைத்தமாதிரி ஆழ்வார்கள் இசையோடு பாடினர் என்பதைத் தெளிவாக்கு

72. திருவாய் 9. 8: 11

73. ஷை 3. 2: 11

74. இரண். திருவந் 85

75. பெரி. திரு. 1. 1: 10

76. திருவாய் 10. 7: 5

கின்றது இனி புதிய சில இலக்கிய உத்தி முறைகளைக் காண் போம்.

**தடம்பொங்கத்தம் பொங்கோ:** இராமபிரானது வெற்றியைத் தோற்ற இளக்கதர்கள் வாயிலே வைத்துப் பேசுவது. இப்படித் தம் வாயாலே பேசுவது தகுமா என்பதை ஆராயாமலேயே ஏதேனும் ஒருபடியாலே (முறையாலே) பெருமாளுடைய வெற்றியைப் பேசு கிறார்கள் என்னும் இவ்வளவே கொண்டு உகந்து அவர்களின் நிலைமையைத் தாம் ஏறிட்டுக் கொண்டு ஆழ்வாரே பேசுகின்றார். ஒவ்வொரு பாசுரமும் தடம்பொங்கத்தம் பொங்கோ என்று முடி கின்றது. இத்தொடர்மொழி இந்த ஆழ்வாரின் அருளிச்செயல் தவிர வேறு எவ்விடத்தும் பிரயோகிக்கப்பட்டிருப்பதாகப் புலப்பட வில்லை. "தோற்றவர்கள் தோல்வியாலே படையடிக்க ஆடுவ தொரு கூத்துண்டு; அந்த சப்தாநுகாரம்" என்றிவ்வளவே பெரியவாச்சான் பிள்ளையும் அருளிச் செய்துள்ளார்.

இரக்கமின்றி எங்கோன் செய்த தீமை
இம்மையே எமக்கு எய்திற்றுக் காணீர்;
பகக்யாம் இன்று உரைத்துஎன்? இராவணன்
பட்டனன்;இனி யாவர்க்கு உரைக்கோம்?
குரக்கு நாயகர் காள்!இளங் கோவே!
கோல வல்வில் இராம பிரானே!
அரக்கர் ஆட அழைப்பா ரில்லை நாங்கள்
அஞ்சி னோம்தடம் பொங்கத்தம் பொங்கோ[77]

வானர வீரர்களையும் இளையபெருமாளையும் இராமபிரா னையும் விளித்து இலங்கையரக்கர்கள் தங்கள் தோல்வியும் இவர்களின் வெற்றியும் தோற்றச் சொல்லிக் கூத்தாடுகின்றனர்.

**அரக்கர் ஆட அழைப்பாரில்லை:** இத்தொடருக்கு நஞ்சீயர் நம் பிள்ளைக்கு "இராக்கதரில் இனி ஆடுபோலக் கூப்பிடக்

77. பெரி. திரு. 10. 2: 1

கடவாரில்லை'' என்று பொருள் பணிக்க, அதனை நம்பிள்ளை கேட்டு, ஆடு என்று வெற்றிக்கும் வாசகமாதலால் இந்த இராக்கதர் சாதியில் வெற்றி சொல்வாரில்லை; அதாவது, 'தோற்றோம் தோற்றோம்' என்று தோல்வியைச் சொல்ல வல்லார் உளரே யொழிய 'வென்றோம்' என்று வெற்றியைச் சொல்லிக் கொள்ள வல்லார் இல்லை என்று பொருள் கூறலாகாதோ'' என்ன, நஞ்சீயரும் இதைக்கேட்டு அருளி ''இதுவே பொருந்தும் பொருள்; இப்படியே சொல்லிக் கொள்ள அமையும்' என்று நியமித்தருளினாராம்.

**குழமணிதூரம்:** 'தடம்பொங்கத்தம் பொங்கோ' என்ற திருமொழியைப் போலவே இத்திருமொழியும் இலங்கை யரக்கர்களின் பாசுரமாகச் செல்லுகின்றது. தோற்றவர்கள் தங்கள் தோல்விக்கு ஈடாக ஆடுவதொரு கூத்துக்குக் 'குழமணிதூரம்' என்று பெயர். அக்கூத்தையாடுகின்ற அரக்கர்களின் நிலைமையிலேயே நின்று ஆழ்வார் இராமபிரானின் வெற்றியைப் பேசி அநுபவிக்கின்றார் ஆழ்வார்.

ஏத்து கின்றோம் நாத்தழும்ப
இராமன் திருநாமம்;
சோத்தம் நம்பி சுக்கிரீவா!
உம்மைத் தொழுகின்றோம்
வார்த்தை பேசீர் எம்மை உங்கள்
வானரம் சொல்லாமே;
கூத்தர்போல ஆடு கின்றோம்
குழமணி தூரமே.[78]

''[சோத்தம் – தாழ்ச்சி தோற்றச் சொல்லும் ஒரு சப்த விசேஷம்; 'ஸ்தோத்திரம்' என்னும் வடசொல் 'சோத்தம்' எனத் திரிந்து கிடக்கின்றது என்பாரும் உளர்]

78. பெரி. திரு. 10. 3: 1

"[இராமன் ஆட்சி புரிந்த காலத்தில் உலகமே இராம மயமாக ஆய்விட்டது] என்றாப்போலே இப்போது இலங்கையும் இராம நாம மயமாக ஆய்விடுகின்றது. நாக்குத் தடிப் பேறும்படி இராம நாமங்களையே சொல்லிக் கூத்தாடுகின்றோம்". என்கின்றார்கள்.

**அம்மம் உண்ண அழைத்தல்:** இதையும் ஓர் இலக்கிய உத்தியாகக் கொண்டார் இந்த ஆழ்வார். பெரியாழ்வார்தாம் இத்தகைய உத்திகளைக் கையாண்டு பிற்காலப் பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டார். ஆயினும் இது பிள்ளைத் தமிழ் இலக்கிய உறுப்பாகச் சேர்த்துக் கொள்ளப்பெறவில்லை. கண்ணபிரான் விளையாட்டில் விருப்பத்தாலே முலையுண் பதையும் மறந்து திரிகின்றான். யசோதைப் பிராட்டி அப் பிரானை விளித்து முலையுண்ணாமையை அவனுக்கு அறிவித்துத் தன்னிடம் முலையுண்ண வருமாறு நிர்பந்தித்த படியை ஆழ்வார் தாமும் அநுபவிக்க விரும்பித் தம்மை அவ்ய சோதைப் பிராட்டியாகப் பாவித்துக்கொண்டு அவனை அம்மம் உண்ணுமாறு வேண்டுவதாக நடைபெறுகின்றது இத்திருமொழி. பெரியாழ்வார் திருமொழியில்,[80]

அரவு அணையாய்! ஆயர் ஏறே!
அம்மம் உண்ணத் துயிலெழாயே

என்று தொடங்கும் திருமொழியோடு ஒக்கும் இத்திருமொழி. உச்சிப்போதில் முலையுண்ண அழைத்தது அத்திருமொழி; அந்தியம் போதில் முலையுண்ண அழைக்கின்றது இத்திருமொழி.

சந்தமலர்க் குழல்தாழ தான் உகந்து
ஓடி தனியே
வந்துஎன் முலைத்தடம்தன்னை வாங்கிநின்
வாயில் மடுத்து,

79. பெ. திரு. 10. 4.

80. பெரியாழ். திரு. 2. 2 இங்கு அம்மம் தர மறுத்தற்கும் ஒரு திருமொழி உண்டு (3.1).

நந்தன் பெறப்பெற்ற நம்பீ! நான்
உகந்துண்ணும் அமுதே!
எந்தை பெருமானே! உண்ணாய்;என்
அம்மம் சேமம் உண்ணாயே.[81]

'அம்மம்' என்பது கண்ணபிரானுடைய குழந்தைப் பருவத்திற்குத் தகுதியாக யசோதை சொல்வதொரு வார்த்தையாகும். 'புவ்வா' என்றும், 'பாப்பம்' என்றும் குழந்தைகட்குச் சொல்லும் சொற்கள்போலே இதுவும் ஒரு சொல்.

**நான் உகந்து உண்ணும் அமுதே:** தேவர்கள் உண்ணும் உப்புச் சாறு போலன்று யசோதைப் பிராட்டி உண்ணும் அமுதம் அமுதினும் ஆற்ற வினிய அமுத மன்றோ இது? இப்படிப்பட்ட அமுதுக்கும் அமுதூட்டப் பாரித்து அழைக்கின்றாள்.

**சப்பாணி கொட்டல்:** இதுவும் ஒரு வித இலக்கிய உத்தியாக அமைந்து விடுகின்றது இந்த ஆழ்வார் பாசுரங்களில். 'குழந்தைகளின் விளையாடல்களில் 'சப்பாணி கொட்டுதல்' என்பது ஒரு விளையாட்டு; அதாவது ஒரு கையோடு மற்றொரு கையைச் சேர்த்துக் கொட்டுதல். இந்த விளையாட்டை அக்காலத்தில் யசோதைப் பிராட்டி பிரார்த்தித்து அநுபவித்ததைப் பிற்காலத்தில் பெரியாழ்வார்,

மாணிக்கக்கிண்கிணி ஆர்ப்ப, மருங்கின்மேல்
ஆணிப்பொன் னாற்செய்த ஆய்பொன் உடைமணி
பேணி பவளவாய் முத்திலங்க, பண்டு
காணி கொண்ட கைகளால் சப்பாணி
கருங்குழல் குட்டனே சப்பாணி[82]

என்று தொடங்கும் பாசுரத்தைக் கொண்ட திருமொழியில் அநுபவித்தார். அது போலவே இந்த ஆழ்வாரும் அதே விளையாட்டை யசோதைப் பிராட்டிநிலையில் இருந்து கொண்டு அநுபவிக்கின்றார். பாசுரமும் யசோதைப் பிராட்டியின் பேச்சாக

81. பெரி. திரு. 10. 4: 1

82. பெரியாழ். திரு. 1. 6: 1.

நடைபெறுகின்றது. **'சப்பாணிகொட்டுதல்'** என்னும் உறுப்பு பிற்காலப் பிள்ளைத்தமிழின் பத்துறுப்புகளில் ஒன்றாகி விடுகின்றது.

> பூங்கோதை ஆய்ச்சி கடைவெண்ணெய் புக்குண்ண
> ஆங்கவன் ஆர்த்துப் புடைக்க, புடைப்புண்டு
> ஏங்கி இருந்து சிணுங்கி விளையாடும்
> ஓங்கு ஓத வண்ணனே; சப்பாணி;
> ஒளிமணி வண்ணனே! சப்பாணி.[83]

> [பூங்கோதை ஆய்ச்சி—தன்னைப் படர்க்கையாகச் சொல்லிக்கொண்ட படி; ஆழ்வார் யசோதை பேசும் பாசுரமாக அருளிச் செய்தாலும் தரமான தன்மையும் இடைஇடையே தலைக்காட்டிக் அதனால் யசோதையைப் படர்க்கையாகக் குறிக்கின்றார் என்றும் கொள்ளலாம்]

**நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்:** பக்தி இலக்கியக் காலத்தில் தோன்றிய ஆழ்வார்களின் பாசுரங்கள் யாவும் பொது விருப்பானவை. நாட்டு மக்கள் யாவரும் இந்த இயக்கத்தில் பங்கு கொண்டமையால், ஆழ்வார்கள் நாட்டுப்புறப் பாடல்களின் பாணியைப் பின்பற்றிப் பாசுரங்களை அமைத்துப் பாடியுள்ளனர். மணிவாசகப் பெருமான்தான் நாட்டுப்புற இலக்கியக் கூறுகளைப் பெருமளவில் அமைத்துப்பாடி வெற்றிகண்டவர். பாடிய வாய் தேனூறும் திருவாசகத்தில் இந்த அமைப்பை வெற்றியுடன் கையாண்டிருப்பதைக் காணலாம்.

திருமங்கையாழ்வார் புலமை நிரம்பிய பெருந்தகை; **'நாலுகவிப் பெருமாள்'** என்று வழங்கப்பெற்றவர். ஆகவே அவர் நாட்டுப்புற இலக்கியக் கூறுகளையும் அமைத்துச் சிலபதிகங்களை அருளியுள்ளார். சாழல் என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுகளில் ஒன்று. எம்பெருமானின் எளிமைக் குணத்தை

83. பெரி. திரு 10.5: 1

யும் மேன்மைக் குணத்தையும் அநுபவிக்கும் பாங்கில் சாழல் விளையாட்டுப் பாசுரம் அமைந்துள்ளது. இரண்டு பிராட்டிமார் நிலையை அடைகின்றார் ஆழ்வார். ஏசிப் பேசுகின்ற ஒருத்தி வாயால் எளிமைக் குணத்தையும் ஏத்திப் பேசுகின்ற மற்றொருத்தி வாயால் மேன்மைக் குணத்தையும் ஒரேகாலத்தில் அநுபவிக்கும் பாங்கில் பாசுரங்கள் அமைகின்றன. அவற்றுள் ஒரு பாசுரம் இது.

ஆழ்கடல் சூழ் வையகத்தார்
  ஏசப்போய், ஆய்ப்பாடித்
தாழ்குழலார் வைத்த
  தயிர்உண்டான் காண்ஏடீ!
தாழ்குழலார் வைத்த
  தயிர்உண்ட பொன்வயிறுஇவ்
ஏழ்உலகு உண்டும்
  இடம்உடைத்தால் சாழலே.[84]

இதில் ஒருத்தி: "தோழீ! நீ உகந்து கொண்டாடும் பெருமான் யாதொன்றிலும் பற்றுக்கோடு இல்லாதவனாக இருந்தாலன்றோ சிறப்பு? அவனுடைய வரலாறுகளை ஆராய்ந்தால் அவன் நம்மைப் போலவே பிறர் பொருள்களில் விருப்பப்படுகிறவனாகக் காணப்பெறுகின்றானே யல்லது ஆசையற்றவனாகக் காணப்பெறவில்லையே. ஆய்ப்பாடியில் கண்ணனாகப் பிறந்து கள்ளவழியால் தயிர் வெண்ணெய் பால் முதலியவற்றை வாரியுண்டான் எனத் தெரிய வருவதால் இங்ஙனம் பிறர் பொருள்களில் ஆசையுள்ளவன் பரமபுருஷனாக இருக்கத் தகுமோ?" என்கின்றாள்.

மற்றொருத்தி: "தோழீ! திருவாய்ப்பாடியில் இடைச்சியர் சேமித்து வைத்திருந்த தயிரை அமுது செய்தான் என்பது உண்மையே; நம்முடைய வயிறுபோலே ஏதேனும் சிலவற்றை உண்டு நிறைந்து விடுகின்ற திருவயிறோ அவனுடையது?

84. பெரி. திரு. 10. 5: 3

காரேழ்கடலேழ் மலையேழ் உலகுண்டும் ஆரா வயிற்றனாயிருப் பவன்காண். ஏழுஉலகங்களையும் வாரித் திருவயிற்றினுள் இட்டாலும் இன்னமும் இப்படிப் பதினாயிரம் உலகங்களை இட்டாலும் நிறைய மாட்டாமல் விசாலமாகவே இடமுடைத் தாயிராநின்றது காண். ஆகையால் நம்மைப்போல வயிற்றை நிரப்ப வேண்டும் என்கின்ற எண்ணத்தினால் தயிர் முதலியவற்றை அவன் வாரியுண்பவனாகில் அவனுடைய பற்றின்மைக்குக் குறை உண்டாகும்; அடியவர்களின் கைதொட்ட பொருளாலல் லாது தரிக்கமாட்டாத பெருங்குணத்தை வெளியிடவேண்டித் தாழ்குழலார் வைத்த தயிரை உண்டானாகையாலே நாம் யாவரும் போற்றத்தக்க எளிமை காண்'' என்று மறுமாற்றம் உரைக்கின்றாள்.

பறவைமுதலியவற்றை அழைத்தல்: செம்போத்து, காக்கை, குயில், கிளி முதலிய பறவைகள் தங்கள் வழக்கப்படி ஒலிசெய்து கொண்டிருக்கையில் அவற்றையழைத்து 'எம்பெருமான் இங்கே வந்து சேரும்படியாகக் கூவுக' என்று வேண்டிக் கொள்ளுகின்ற பாசுரமாக அமைகின்றது.[75] இது மகள் பாசுரமாக நடைபெறு கின்றது. 'குயிலே கூவாய்' என்று பாடுகின்றாள் பரகால நாயகி.

கூவாய், பூங்குயிலே!
குளிர்மாரி தடுத்துகந்த
மாவாய்க் கீண்ட மணிவண்ணனைவர
கூவாய் பூங்குயிலே![76]

இது குயிலை அழைத்துப்பாடும் பாட்டுகளில் ஒன்று.

வீட்டில் பல்லி ஒரு திசையில் ஒலித்தால் யாரோ விருந்தினர் வருவார் என்று நம்பும் பழைய நம்பிக்கை ஒன்றுண்டு. இதனை யொட்டி, 'திருமால் வருமாறு ஒலிசெய், பல்லியே!' என்று பாடு கின்றார் ஆழ்வார் நாயகி.

75. பெரி. திரு. 10. 10.

76. ஷை 10. 10: 3

கொட்டாய் பல்லிக்குட்டி!
குடம்ஆடி உலகளந்த
மட்டார் பூங்குழல் மாதவ னைவர
கொட்டாய் பல்லிக்குட்டி! [77]

என்பது பல்லிப்பாசுரம். இங்ஙனமே செம்போத்து, காக்கைப் பிள்ளை, பைங்கிளி, கோழி என்று புள்ளினத்தை அழைத்துப் பாடும் பாசுரங்களும் உள்ளன.

**பழமொழிகள்:** ஒருநாட்டின் பண்பாட்டை உணர்வதற்கு அந்நாட்டு மொழியுள் வழங்கும் பழமொழிகள் பெரிதும் பயன் படுவன. பழமொழிகளே அந்நாட்டு மக்கள்பால் அடிபட்டு வரும் மன இயல்புகளை எடுத்துக்காட்டுவன. பழமொழிகள் பயின்று வரச் செய்யுள்கள் இயற்றும் தன்மை பேரறிஞர் நூல்களில் காணப் படும். நாட்டுமக்களிடம் பயின்றுவரும் சில பழமொழிகளைப் பெரும் புலமை வாய்ந்த பரகாலரின் பாசுரங்களிலும் காணலாம். சிலவற்றைக் காட்டுவேன்

கார்ஆர் புரவிஏழ் பூண்ட தனிஆழி,
தேர் ஆர் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா அமுதம் அங்குஎய்தி அதில்நின்றும்
வாராது ஒழிவதுஒன்று உண்டே? அது நிற்க
ஓர்ஆர் முயல்விட்டுக் காக்கைபின் போவதே? [78]

என்ற பாசுரப் பகுதியில் 'முயலை விட்டுக் காக்கைப் பின் போவாருண்டோ?' என்ற பழமொழியைக் காணலாம். நிலத்தில் ஓடுவது முயல்; மரங்களின்மீது பறந்து திரிவது காக்கை. மாமிசம் வேண்டுவோன் கைப்பட்ட முயலை விட்டுக் கைப்பட அரியதும் கைப்பட்டாலும் பயன்படாததுமான காக்கையைப் பின்பற்றித் திரிதல் அறிவற்ற செயல். அப்படியே எளிதாயும் சுவை மிக்கதாயு முள்ள அர்ச்சாவதார அநுபவத்தை விட்டுக் கிட்டுதற்கு அரிதாயும் சுவையற்றதாயுமுள்ள மோட்ச அநு

77. பெரி. திரு. 10. 10: 4

78. சிறிய திருமடல் – கண்ணி 6 - 8.

பவத்தைப் பெற விரும்புதலும் பேதைமையின் பணியாகும் என்று விளக்குவர் பரகாலர்.

இன்னொரு பழமொழியைக் காண்போம். 'தாய் இருக்க மனை நீராட்டுதல்' என்பது பழமொழி. முழுமுதலாம் முதற் கடவுள் திருமால் இருக்கப் பிறதெய்வ வழிபாடு செய்யும் உலகினர் இயல்பை இப்பழமொழியால் விளக்குவர் திருமங்கையாழ்வார்.

பேய்இருக்கும் நெடுவெள்ளம் பெருவிருப்பின்
மீதுஓடிப் பெருகு காலம்
தாய்இருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்றுஇருத்தி உய்யக் கொண்டான்
போய்இருக்க மற்று இங்கோர் புதுத் தெய்வம்
கொண்டாடும் தொண்டீர்! பெற்ற
தாய்இருக்க மனைவெந்நீர் ஆட்டுதிரோ
மாட்டாத தகவு அற்றீரே[79]

[நெடுவெள்ளம்-பிரளயம்; போயிருக்க-வெறுக்கும் படியாக; மாட்டாத-செய்யமாட்டாத; தகவு-இரக்கம்]

என்ற பாசுரத்தில் இவ்விளக்கத்தைக் காணலாம். ஈண்டுத் தாய் என்பது திருமாலுக்கும், மனை என்பது அசேதனப் பொருளுக்கும் உவமைகளாக வந்தன. மகளிர் கருவுயிர்த்தவுடன் தாயையும் சேயையும் நீராட்டுதல் மலை நாட்டு வழக்கமாக முற்காலத்தில் இருந்தது; கருவுயிர்த்தவுடன் தாயை நீராட்டுவது பலவித இடையூறுகட்குக் காரணமாவதால் அத்தாய்க்குப் பதிலாக ஒரு மணைக்கட்டையை நீராட்டுவது இடைக்காலத்து வழக்கமாக இற்றைக்கும் இருந்து வருகின்றது. அதனைத் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்தது இது. தேவதாந்தரத்தை

79. பெரி. திரு. 11. 6: 6

வழிபாடு செய்வதற்கும் மணை நீராட்டுவதற்கும் யாதொரு வேறுபாடும் இல்லை; 'இதுதான் அது, அதுதான் இது என்ற இரண்டிற்கு முள்ளவேற்றுமையின்மையைக் காட்டின படியாகும். நம்மாழ்வாரும் இதே கருத்தைத் தம் திருவாசிரியத்தில் ''சுன்றோளிருக்க மணை நீராட்டி''[80] என்று அருளிச் செய்துள்ளார். திருத்தாயார் பாசுரமாகச் செல்லும் ஒரு திருமொழியில்[81] பாசுரந்தோறும் ஒவ்வொரு பழமொழியை எடுத்துப் பேசுகின்றார் பரகாலர். இவற்றுள் ஒரு பாடல்:

புள்ளுரு வாகி நள்ளிருள் வந்த
பூதனை மாள இலங்கை
ஒள்ளெரி மண்டி உண்ணப் பணித்த
ஊக்க மதனை நினைந்தோர்
கள்ளவிழ் கோதை காதலும் எங்கள்
காரிகை மாதர் கருத்தும்
பிள்ளைதன் கையில் கிண்ணமே ஏக்கப்
பேசுவது? எந்தை பிரானே,[82]

இப்பாசுரத்தில் ''பிள்ளைகையில் கிண்ணம் மெள்ளவே கொள்ளலாம்'' என்ற பழமொழி அமைந்துள்ளது. ''மிகவும் வலிமையுடையவர்கள் பொற்கிண்ணமொன்றை கவர்ந்தால் அதைத் திரும்பவும் கைப்பற்றுவதற்கு பெருமுயற்சி எடுக்க வேண்டும்; அங்ஙனமன்றிச் சிறுபிள்ளை கவர்ந்த கிண்ணத்தைத் திரும்பப் பெறவேண்டுமானால் அதற்காகச் சிறு முயற்சியையும் மேற்கொள்ள வேண்டியதில்லை. நினைத்தபோது எளிதாகப் பெற்றுக் கொள்ளலாம் என்று ஆறியிருக்கும்படியாக இருக்குமேயன்றி

80. திருவாசி–6

81 பெரி. திரு. – 10. 9.

82. பெரி. திரு. 10. 9: 1

பதறவேண்டிய நிலை ஏற்படாது. அதுபோல் இப்பரகால நாயகி விஷயத்தில் நீ நினைத்திருக்கின்றாய் போலும்; இவளை அவ் விதமாக அலட்சியம் செய்திருக்கின்றாய்'' என்கின்றாள் திருத் தாயார்.

இதனை மேலும் விளக்குவேன். "எங்கள் கள்ளவிழ் கோதையின் காதலையும் அலட்சியம் செய்கின்றாய்; காரிகை மாதர்கருத்தையும் அலட்சியம் செய்கின்றாய். இவளுடைய கரை புரண்ட காதலை நோக்கி நீ பதறியோடிவந்து இவளைக் கைப் பற்ற வேண்டும்; அது செய்கின்றிலை. ''வகுத்த விஷயத்தில் காதல் கொண்ட இது நன்றே'' என்று உகந்திடாமல் இதனைப் பழிக்கின்ற ஊரவர் பழிச்சொற்களை நோக்கியாகிலும் பதறியோடி வந்து இவளைக் கைப்பற்றிப் பழிப்பவர்களின் முகத்தைப் பங்கம் செய்திடவேண்டும்; அதுவும் செய்கின்றிலை. இரண்டையும் அலட்சியம் செய்திருக்கின்றாய்'' என்கின்றாள்.

இப்படி இவளை அலட்சியம் செய்திருப்பதற்குக் காரணம் யாது? ''நல்லவென்தோழி நாகணை மிசை நம்பார், செல்வர் பெரியர், சிறு மானிடவர் நாம் செய்வதென்'' என்னும்படியான உன்னுடைய பெருமைகளைப் பாராட்டியோ இவளை இங்ஙனம் அலட்சியம் செய்திருப்பது'' என்கின்றாள். ''பூதனையை முலை யுண்டு முடித்த பெருமிடுக்குடைய நமக்கு இவள் ஈடோ? இரா வணனை முடித்து பெருவீரனான எனக்கு இவள் ஏற்றவளாக இருப்பாளா? என்று திருவுள்ளம் பற்றியிருக்கின்றாய் போலும்; கிருட்டிணாவதாரத்திலும் இராமாவதாரத்திலும் காட்டின தீரச் செயல்களை நினைத்துச் செருக்கியிருக்கின்றாய் போலும்!'' என்கின்றாள்.

படிமங்கள்: பாசுரங்களில் காணப்பெறும் படிமங்கள் (Imagery) பாட்டின்பத்தை மிகுவிக்கின்றன. படிமம் என்பது என்ன? ''படிமம் என்பது சொற்களால் கவிஞன் புலன்கட்குக் கவர்ச்சியுடையதாகச் செய்யும் ஒருவகை உத்தியாகும். புலன்

களின்மூலம் படிப்போரின் எழுச்சிகளையும் அறிவினையும் கிளர்ந்தெழச் செய்தல் இயலும்; இதனைக் கருதியே கவிதையில் படிமம் கையாளப் பெறுகின்றது'' என்று கூறுவர் பர்ட்டன் என்ற ஆங்கிலத்திறனாய்வாளர் கவிதைத் திறனாய்வு என்ற தமது நூலில். மேலும் அவர் கூறுவார்: ''புலன்கட்கு முறையீடு செய்வதற்கேற்ப படிமங்கள் வகை செய்யப்பெறுகின்றன; செவிப்புலப் படிமங்கள், கட்புலப் படிமங்கள், சுவைப்புலப் படிமங்கள் (Gustatory images), நாற்றப்புலப் படிமங்கள் (It factory images), நொப்புலப் படிமங்கள் (Tactual images), இயக்கப்புலப் படிமங்கள் (Kinesthetic images), மரபு வழிப் படிமங்கள் என்பவையாகும்'' என்று. எண்ணத்திற்கும் புலன் காட்சிக்கும் குறியீடுகளாக இருப்பவை சொற்களாகும் என்பதை நாம் அறிவோம். ஒரு கவிதையைப் படிக்கும்போது அக் கவிதையிலுள்ள சொற்கள் அல்லது சொற்கோவைகள் சில பல படிமங்களை நம் மனக்கண் முன் கொண்டுவந்து நிறுத்துகின்றன. புலன்களின் மட்டத்தில் தூண்டல்கள் (Stimuli) செய்வதைப்போலவே படிமங்களும் கருத்து நிலைச் (Ideational level) செயல்களில் நம் புலன்களைத் தூண்டி நம்மிடம் கவிதையநுபவத்தை எழுப்பிக் கவிதையைத் துய்த்து மகிழ்வதற்குத் துணையாக அமைகின்றன. மேலும் சில சொற்கள் நம்மிடம் 'கட்டுண்ட படிமங்களையும் (Tied images), விடுதலைப் படிமங்களையும் (Free images) எழுப்பி விடுகின்றன. இவையும் கவிதையை நுகர்வதற்கு இன்றியமையாத கூறுகளாக (*Sine quo non*) அமைகின்றன.

திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இத்தகைய படிமங்கள் அமைந்திருப்பதால் பாசுரங்களைப் பயில்வோரின் மனத்தில் இவை தோன்றி கவிதை யநுபவத்தைக் கிளர்ந்தெழச் செய்கின்றன. படிப்போரைக் பக்திக் கொடுமுடிக்கும் கொண்டு செலுத்துகின்றன. எடுத்துக் காட்டுகளாக சிலவற்றைக் காட்டுவேன். 'பார் ஆயது உண்டு உமிழ்ந்த பவளத்தூண்' (பெரி. திரு 2. 5: 1), 'களங்கனி முறுவல் காரிகை' (ஷை. 2. 7:7),

'காள் ஆட, மஞ்ஞைக் கணம் ஆட, மாடே கயல் ஆடு கால் நீர்ப் பழனம்' (ஷை 3 2: 1),

'பட்டுஅரவுஏர் அகல்அல்குல் பவளச் செவ்வாய்
பணை நெடுந்தோள் பிணைநெடுங்கண் பால்ஆம் இன்சொல்
மட்டுஅவிழும் குழலி' (ஷை 3. 4: 8)

'உம்பரும்இவ் ஏழ்உலகும் ஏழ்கடலும் உண்ட பிரான்'' (ஷை 3. 10: 3), 'கன்றுதனால் விளவு எறிந்து கனிஉதிர்த்த காளை, காமருசீர் முகில்வண்ணன்' (ஷை 3. 10: 8), 'உளங் கனிந்திருக்கும் அடியவர்தங்கள், உள்ளத்து ஊறியதேன்' (ஷை 4. 3: 9), 'கவளயானை கொம்பு ஒசித்த கண்ணன்' (ஷை 4. 8: 1), 'ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த நாதன்' (ஷை 4. 8: 6), 'பெண் ஆகி இன் அமுதம் வஞ்சித்தானை' (ஷை 2. 5: 8), 'கடிகைத் தடங்குன்றின் மிசைஇருந்த அக்காரக் கனியை' (ஷை 8. 9: 4), 'முன்னம் குறள் உருவாய் மூவடிமண் கொண்டளந்த மன்னன்' (ஷை 9. 4: 2) என்பன போன்ற சொற்கோவைகள் எழுப்பும் படிமங்களைக் கண்டு மகிழலாம். இனி, சிறப்பாக ஒவ்வொருபுலனையும் பொதுவாகப் பல புலன்களையும் கவரும் படிமங்களைக் கண்டு மகிழ்வோம்.

**கட்புலப் படிமங்கள்:** பல்வேறு படிமங்களிடையேயும் கட்புலனைக் கவரும் படிமங்களே அதிகமாக உள்ளன. இவையே படிப்போரின் மனத்தில் நிலையான பதிவினை விளைவிக்கின்றன. கட்புல நரம்பு ஏனைய புல நரம்புகளைவிடத் தடித்திருப்பதே இதற்குக் காரணம் எனக் கருதலாம். இதன் காரணமாகவே இக்காலக் கல்வியில் கட்புல செவிப்புலத் துணைக் கருவிகள் அதிகமாகப் பயன்படுத்தப் பெறுகின்றன. பள்ளிகளில் சுற்றுலா அமைத்து மாணாக்கர்களைப் பல்வேறு இடங்கட்கு இட்டுச் சென்று பல்வேறு காட்சிகளை நேரில் காணச் செய்கின்றனர். திருமங்கை மன்னன் பாசுரங்களில் இத்தகைய ஒரு படிமத்தைக் காட்டுவேன்.

பழகிப் பழகி உருவழிந்து மெருகேறிப் போன சொற்களும் கவிதையில் ஏறும்போது நம்மையே ஏமாற்றிப் புத்தம் புதியன வாய்த் தோன்றுகின்றன. அச்சொற்கள் பேச்சுவழக்கிலும் உரை நடையிலும் தாம் பெறும் நிலையை விடக் கவிதையில் உயர்ந்த பதவியைப் பெறுகின்றன; உயர்ந்த அதிகாரத்தையும் அடைகின்றன. சொற்களுக்கு இந்த வேகத்தையும் வலுவையும் ஊட்டுவதற்கு யாப்பு முறை கவிஞனுக்கு ஓரளவு துணையாக உள்ளது. சதுரங்கக் காய்கள் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் உலவுங்கால் அவை புதிய ஆற்றலைப் பெறுவன போலவும், துப்பாக்கியினுள் இருக்கும் தோட்டாக்கள் புதியதொரு வேகத்தைப் பெறுவன போலவும், கவிதையினுள்ள சொற்களும் ஒருவித யாப்பு முறையில் அமைந்து அவ்வவற்றிற்குரிய இடங்களிலிருக்கும்பொழுது புதிய ஆற்றலைப் பெறுகின்றன. இதனால்தான் மேற்புலத் திறனாய்வாளர்கள் கவிதையைச் 'சிறந்த சொற்களைச் சிறந்த முறைகளில்' (The best words in the best order) அமைக்கும் கலையென்றும், 'மானிட உணர்ச்சிகளைச் சரியான வடிவத்துடனும் ஒலிநயத்துடனும் அமைக்கும் வெளியீடே' (The expression of human emotions in perfect form and rhythm) என்றும் கூறுவர்.

செருமிகு வாள்எயிற்ற அரவுஒன்று சுற்றி
திசைமண்ணும் விண்ணும் உடனே
வெருவர வெள்ளைவெள்ளம் முழுதும் குழம்ப,
இமையோர்கள் நின்று கடைய
பருவரை ஒன்றுநின்று முதுகில் பரந்து
சுழலிக் கிடந்து துயிலும்
அருவரை அன்னதன்மை அடல்ஆமை ஆன
திருமால் நமக்குஓர் அரணே.[25]

திருமங்கையாழ்வார் திருமால் அவதாரங்களில் ஈடுபடுங்கால்

52. பெரி. திரு 11.4:2

அருளிச் செய்த திருப்பாசுரங்களுள் ஒன்று இது; கூர்மாவதாரத்தில் ஈடுபடும் நிலை இது. எழுசீர் விருத்தயாப்பில் அமைந்து சந்த நயம் கொழிக்கும் இத்திருப்பாசுரம் நம்மைப் பக்தியின் கொடுமுடிக்கு இட்டுச் செல்வதை நாம் அநுபவித்து மகிழலாம்.

முளைக்கதிரைக் குறுங்குடியுள் முகிலை மூவா
மூவுலகும் கடந்தப்பால் முதலாய் நின்ற
அளப்புஅரிய ஆரமுதை அரங்கம் மேய
அந்தணனை அந்தணர்தம் சிந்தை யானை
விளக்கு ஒளியை மரகதத்தை திருத்தண் காவில்
வெஃகாவில் திருமாலைப் பாடக் கேட்டு
'வளர்த்ததனால் பயன்பெற்றேன்; வருக' என்று
மடக்கிளியைக் கைகூப்பி வணங்கி னாளே [26]

இது தாய்ப் பாசுரம். ஆழ்வார் தாய் நிலையிலிருந்து வேற்று வாயாலே தன் மகள் நிலையைப் பேசுகின்றாள். சாதாரணச் சொற்கள்தாம்; அவை எண்சீர் விருத்தத்தில் அமைந்து நம்மைப் பக்தியநுபவத்தில் ஆழ்த்துவதை அநுபவித்து மகிழலாம்.

கற்பனைப்பற்றிக் கூறும்போது 'விருத்தமெனும், ஒண்பாவிற்கு உயர்கம்பன், என்று மொழிவர். விருத்தயாப்பின் பல்வேறு வகையின் மர்மங்களையும் இதயத் துடிப்புகளையும் நன்றாக இனிது உணர்ந்து கம்பன் அவற்றை நன்கு அடக்கி ஆண்டுள்ளான் என்று கூறுவர் திறனாய்வாளர். 'நாலுகவிப் பெருமாள்' என்று விருது பெற்ற கலியனும் விருத்தயாப்பின் உயர்நிலையை நன்கு கண்டறிந்து கையாண்டுள்ளார்.

கலையும் கரியும் பரிமாவும்
திரியும் கானம் கடந்துபோய்
சிலையும் கணையும் துணையாகச்
சென்றான் வென்றிச் செருக்களத்து[27]

இஃது ஒருவகை.

26. திருநெடுந். 14;

27. பெரிதிரு 1 5 : 1

மல்லரை அட்டு மாள
கஞ்சனை மலைந்து சென்று
பல்லரசு அவிழ்ந்து வீழப்
பாரதப் போர்மு டித்தாய்[28]

இது பிறிதொருவகை.

பகலும் இரவும் தானேயாய்
பாரும் விண்ணும் தானேயாய்
நிகரில் சுடராய் இருளாகி
நின்றார் நின்ற ஊர்போலும்[29]

இது மற்றொரு வகை.

வானோர் அளவும் முதுமுந்நீர்
வளர்ந்த காலம் வலியுருவின்
மீனாய் வந்து வியந்துய்யக்
கொண்டதண் தாமரைக் கண்ணன்.[30]

என்பது நான்காவது வகை. இங்ஙனம் அறுசீர் விருத்தத்தை மட்டிலும் எடுத்துக் கொண்டால் பல வகைகளைக் காண முடிகின்றது. இங்ஙனம் பல.

**இயற்கை வருணனை:** எங்கெங்கெல்லாம் அழகு உள்ளதோ அங்கங்கெல்லாம் இறைவனும் இருப்பதாகக் கொள்வது தமிழரது கொள்கை. இக்கொள்கையே 'முருகன்' என்ற தமிழ்க்கடவுளின் தத்துவம் என்பதைத் திரு. வி. க. போன்ற இறையன்பு கொண்ட பெரியார்கள் விளக்கிப்போயுள்ளனர். இக்கொள்கையையொட்டியே பக்தர்களும் இயற்கையில் தோய்ந்து இறைவனை அநுபவிக்கின்றனர். காட்டிலும், நாட்டிலும், மண்ணிலும், விண்ணிலும் எல்லா இடங்களிலும் காணும் இயற்கையழகுகளில், எம்பெருமானின் அழகுக் கூறுகளில் மனத்தைப் பறிகொடுக்கின்றனர். இத்தகைய மன நிலையைக் கொண்ட ஆழ்வார்களும் இயற்கை அழகினைத் தமது உள்ளத்து அழகுடன் குழைத்துத் தம் மனம் விரும்பும் கடவுள் வடிவத்தின் தெய்விக அழகாகக் காண்கின்றனர். இத்தகைய இயற்கை அழகுகள் வாய்ந்த தலங்கள் தாம் 'திவ்விய தலங்கள்' என்றும், திருப்பதிகள் என்றும் மதித்து

28. பெரி. திரு. 4.6:6
29 ஷெ. 7: 5:5
30 ஷெ. 8: 8;1

அங்குள்ள திருக்கோயில்களில் கோயில் கொண்டிருக்கும் எம் பெருமான்களை வழிபடுவது முக்கியம் என்று கருதினர் பக்தர்கள். பெரும்பாலும் ஆழ்வார்களின் பாசுரங்கள் திருத்தல வருணனையும் அங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் எம் பெருமானையும் கூறுவதாக அமைந்திருப்பதைக் கண்டு மகிழலாம். ஆகவே, நிலத்தின் இயற்கை எழில்களைக் காட்டும் வருணனைகளை இலக்கிய இன்பத்தைக் காட்டும் இந்தப் பொழிவிலும், இறைவனைக் காட்டும் செய்திகளை இறையநுபவத்தை விளக்கும் அடுத்த பொழிவிலும் காட்டுவேன். இயற்கை வருணனைக்கு நிலத்தின் கருப்பொருள்களே கைகொடுத்து உதவுகின்றன என்பதைச் சங்க இலக்கியப் பயிற்சியுடையவர்கள் நன்கு அறிவர். இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு திருமங்கையாழ்வார் காட்டும் நானில வருணனைகளைக் கண்டு மகிழ்வோம்.

**குறிஞ்சிநிலக் காட்சிகள்:** குறிஞ்சி நில வருணனையைப் பற்றிச் சிந்திக்கும்போது இமயமலை, சிங்கவேழ் குன்றம், திருவேங்கடம், திருமாலிருஞ் சோலைமலை என்ற மலைத் திருப்பதிகள் நம் நினைவிற்கும் வருகின்றன. இத்திருப்பதிகளின் இயற்கையழகுகளில் திருமங்கையாழ்வாரின் மனம் ஆழங்கால் பட்டதைச் சிந்திக்கின்றோம்.

இமய மலையில் ஆண் யானையொன்று தன் காதலியாகிய இளம் பெண் யானையை மகிழ்விக்க வேண்டி நெடுக ஓங்கி வளரும் மூங்கில் முளைகளைப் பெயர்த்து எடுத்து மலை முழைஞ்சுகளில் மிகுதியாகவுள்ள தேனிலே தோய்த்து அதன் வாயில் ஊட்டுகின்றது.

வரைசெய் மாக்களிறு இளவெதிர்
  வளர்முளை அளைமிகு தேன்தோய்த்துப்
பிரச வாரிதன் இளம்பிடிக்கு
  அருள்செய்யும் பிரிதிசென் றடைநெஞ்சே[31]

[களிறு – ஆண்யானை; வெதிர் – மூங்கில்; பிரசம்–தேன்; பிடி–பெண்யானை]

31. பெரி. திரு. 1. 2 :5

என்ற திருப்பிரிதிபற்றிய பாசுரத்தில் இக் காட்சியைக் காணலாம். இதனைச் சிந்திக்கும்போது திருமலையில் பூதத்தாழ் வார் காட்டிய காட்சி நினைவிற்கு வருகின்றது.

பெருகு மதவேழும் மாப்பிடிக்கு முன்னின்று
இருங்கண் இளமூங்கில் வாங்கி, அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங்கடம் 32

[வேழம்-யானை; பிடி-பெண்யானை;
கண்-கணு; தேன்-தேன் கூடு]

என்பது பூதத்தார் காட்டும் காட்சி. மதம் பிடித்து மனம் போனபடி திரியும் யானைபொன்று தன் பேடையைக் காண் கின்றது. அதனை மீறி அப்பால் செல்ல மாட்டாமல் அதற்கு இனிய உணவு கொடுத்துத் திருப்தி செய்ய விரும்புகின்றது. உடனே அருகிருந்த மூங்கிற்குருத் தொன்றைப் பிடுங்கி மலைக் குகையிலுள்ள ஒரு பெருந் தேன் கூட்டில செருகிக் 'குலோப் ஜாமுன்' போல், அதன் வாயில் ஊட்டுகின்றது. இந்தப் பாசுரம் திருமங்கையாழ்வாரின் பாசுரத்திற்கு அடியெடுத்துக் கொடுத் திருக்கலாம் என்று கருத இடம் உண்டு.

இந்த இரண்டு பாசுரங்களின் நினைவினால் கம்பநாடன் சித்திர கூட மலையில் ஓர் அற்புதக்காட்சியினைப் படைத்துக் காட்டுகின்றான்.

உருகு காதலின் தழைகொண்டு
மழலைவண்டு ஓச்சி
முருகு நாறுசெந் தேனினை
முழைநின்றும் வாங்கி
பெருகு சூழ்இளம் பிடிக்குஒரு
பிறைமருப் பியானை
பருக வாயினில் கையில் நின்று 33
அளிப்பன பாராய்.

[முருகு-மணம்; நாறு-வீசுகின்ற; முழை-கல் இடுக்கு; பெருகு சூல்-முதிர்ந்த கருப்பம்; மருப்பு - தந்தம்];

32. இரண். திருவந். 75
33. கம்ப. அயோத் சித்திர. 10

இந்தப்பாடலில் காட்டப்பெற்றுள்ள காட்சி இது: ஆண்யானை யொன்று சூல் கொண்டுள்ள தன் இளம் பிடியின்மீது அளவற்ற அன்பு கொண்டுள்ளது. ஒருமலை இடுக்கில் ஒரு பெரிய தேன் கூடு உள்ளது. அதில் தேன்ததும்பி நிற்கின்றது. ஆண் யானை அண்மையிலுள்ள மரத்தினின்றும் ஒரு தழைக் கொத்தினை ஒடித்து அதனைக் கொண்டு அம் மழலை வண்டினை ஓச்சுகி ன்றது. பிறகு அந்தத் தேன்கூட்டினை அப்படியே அசை யாமல் தன் துதிக்கையினால் வாங்கி சூல் நிறைந்து உண்பதற்கும் சிரமப்படும் தன் பிடியின் வாயில் தின்னுமாறு தந்து நிற்கின்றது — கல்கத்தா ரஸகுல்லாவைத் தருவது போல.

பிரிதி அமைந்துள்ள சூழ்நிலை இது: இங்குச் சிறு துளிகளை யுடைய காள மேகங்கள் அதிர்கின்றன. தோகைகளையுடைய மயில்கள் ஏற முடியாமல் உன்னதமான மலையுச்சியில் கீழ் வயிறு தழுவும்படியாக ஏறிச் சென்று தோகைகளை விரித்துக் கூத்தாடுகின்றன (1). மலைபோன்ற வடிவினையுடையன வாய், வடிவிற்கேற்ப மிடுக்கையுடையனவாய், மிடுக்குக்கு உரிய சினத்தையுடையனவானவாய் மதக்களிறுகள் அஞ்சும் படியாக வாள்போன்ற பற்களையுடைய சிங்கங்கள் திரிகின்றன(2). இந்திர நீலமணி மயமான பாறைகளின்மீது வேங்கைமலர்கள் உதிர்ந்து கிடக்கும் அழகிய படுக்கையின்மீது களிறுகள் தம் பிடி களுடன் கிடந்து உறங்குவதற்குப் பாங்காக வண்டுகள் இன் னிசை பாடுகின்றன (3). பன்றிகள் தலை குனிந்து மாணிக்கப் பாறைகளைப் பிளக்க அதனால் பெயர்ந்த மணிகள் மலையருவி களுடன் அடித்து வரப் பெறுகின்றன (4). முகில்வரை எட்டி வளர்ந்த குருக்கத்திப் பூஞ்சோலைகளில் வண்டுகள் தேனினைப் பருக நுழைந்து இசைபாடுகின்றன (6). அசோக மலர்கள் விரி யும்போது செந்நிறத்தோடு திகழும் அழகைப் பேதை வண்டுகள் நெருப்பென மயங்கி அஞ்சுகின்றன (9). மிளகுக் கொடிகள் விண்ணை எட்டும் வேங்கை மரங்களைத் தழுவிப் படர்ந்து நிற்கும் சிறு மலைகளில் வேங்கை வரிப்புலிகள் நடமாடுகின்றன (7). இருள் சூழ்ந்த மலை முழைஞ்சுகளில் பெரும் பசியுடன் மலைப்பாம்புகள் பெருமூச்சுவிட்டுக் கொண்டுள்ளன (8). கறுத்த

மாமுகில்கள் நீர் கனத்தாலே இயங்க முடியாமல் ஓரிடத்தில் நின்று இடியோசைகளை எழுப்ப அவற்றை யானைகளின் பிளிறல்கள் என மயங்கி மலைப்பாம்புகள் மலை பெயர்ந்தாற் போல் பெயர்ந்து காத்துக் கிடக்கின்றன (10).

வதரியில் நர–நாராயணன் எழுந்தருளியிருக்கும் ஆச்சிரமத்தின் சூழ்நிலை இது: இந்த ஆச்சிரமம் ஆகாய கங்கைக்கரையிலுள்ளது. தேவர்கள் கற்பகமலர்களைக் கொண்டு வந்து சமர்ப்பித்து வணங்கும் இடம் (1); நான்முகனுடன் ஏனைய தேவர்களும் அடிக்கடி வந்து வழிபாடு நடத்தும் இடம் (2); பகலவன் வலம் வரும் மேருமலைவரை முட்டி அங்கிருந்து கங்கை நீர் இழிவதும் மாடமாளிகையின் உச்சியில் நாட்டப்பெற்ற தூண்களில் கட்டப்பெற்றுள்ள துணிகள் காற்றில் அசைந்தாடுவது போல் தோன்றுவது மான இடம் (3); கங்கை நீரில் அப்ஸர மாதர்களின் சேலைகளையும் மாலைகளையும் திரட்டி வருவதுடன் பல்வேறு இரத்தினக் கற்களையும் உருட்டிக் கொண்டு வருவதைக் காணலாம் (4); இங்குத்தான் அண்டத்தைச் சுமக்கும் மேருமலையின் உச்சியிலிருந்து கங்கை இழிகின்றது (5); சகரபுத்திரர்கள் தூய்மையையடைவான் வேண்டி பகீரதன் தவம்புரிந்து கங்கையைக் கொணருங்கால், அதுபெரியதொரு மலையைப் பிளந்து கொண்டு அங்குள்ள களிறுகளைத் தள்ளிக் கொண்டு வருவதைக் காணக்கூடிய இடம் (6); கங்கை ஒருமுகமாக வந்து இழிந்தால் பெருவிசையோடு வரும் மிடுக்கைக் கடல் பொறாதென்று கருதிய தேவர்களின் பிரார்த்தனைக் கிணங்க அது பல முகமாகப் பெருகிவரும் இடம் (7); இந்தக் கங்கையின் வரலாற்றைத்தான் விசுவாமித்திரன் இராமஇலக்குமணர் கட்குக் கூறியதாகும் (8); பகீதரன் கங்கையைக் கொணர்ந்தபோது அது பிரம்மலோகத்தை ஊடறுத்துக் கொண்டு ஆகாயத்தினின்றும் இழிந்து அங்கிருந்து பூமி நடுங்கும்படியாகப் பிரவகித்துத் தெளிந்த நீரையுடையதாகின்றது (9).

சாளக்கிராமத்து அடிகள் எழுந்தருளியுள்ள இடத்தின் சூழ்நிலை [34] இது: இத்திருத்தலம் நீர்வளம் மிக்க நிலத்தைக்

34. பெரி. திரு. 1.5.

கொண்ட வளப்புடையது (3): எங்கும் தடாகங்கள் நிறைந்திருப்பது (5); சந்தன மரங்கள் நிறைந்த சோலைகள் சூழ்ந்தது (8); தடாகங்கள்தோறும் "உரம் பெற்ற மலர்க்கமலம் உலகளந்த சேவடிபோல் உயர்ந்து காட்டும்"[35] சோலைகளில் வண்டுகள் களித்து இசைபாடும்; அங்கிருக்கும் கழனிகளில் கயல் மீன்கள் நிறைந்து கிடக்கும்; இம்மீன்கள் துள்ளிப் பாய்ந்து தடாகங்களிலும் ஏனைய நீர்நிலைகளிலும் தாமரை மொட்டுகளின்மீது விழ, அவை மகிழ்ச்சி அடையும் (9); தாரா என்ற பறவைக் கூட்டங்கள் வயல்களில் காணப்பெறும் (4).

சிங்கவேழ் குன்றத்தின் சூழ்நிலை ஆழ்வார் பார்த்த அன்று இருந்ததைப்போல் இன்றும் உள்ளது.[36] அடர்ந்த காடுகள் நெருங்கி இருப்பது இத்திருமலை. அச்சந் தரும் ஒரு சூழ்நிலையைக் காட்டுகின்றார் ஆழ்வார்.

ஓய்ந்தமாவும் உடைந்த குன்றும்
அன்றியும் நின்றழலால்
தேய்ந்த வேயும் அல்லதுஇல்லாச்
சிங்கவேழ் குன்றமே.[37]

[ஓய்ந்த — களைத்துப் போன; மா-விலங்குகள்; அழல்-நெருப்பு; வேய்-மூங்கில்]

'அலைந்து திரிந்து களைத்துப் போன மிருகங்களை இங்குக் காணலாம்; மூங்கில்கள் ஒன்றோடொன்று உராய்ந்து நெருப்புப் பற்றி எரிந்து குறைகொள்ளியாக இருக்குமாற்றைச் சிறப்பாக இங்குக் காணலாம். இன்னும் ஆழ்வார்,

காய்த்தவாகை நெற்றொலிப்பக்
கல்லதர்வேய்ங் கழைபோய்
தேய்த்ததீயால் விண்சிவக்கும்
சிங்கவேழ் குன்றமே.[38]

[கல்அதர்—கல்வழி; வேய்ங்கழை-குழல் மூங்கில்]

35. பெரியாழ். திரு. 4.9:8.
36. பெரி. திரு. 1.7.
37. கடி 1.7:3
38. ஷ 1. 7. :8

என்று காட்டுவார். ‘வாகை நெற்றுக்கள் காற்று வீசுவதால் ஒலிக்கின்றன. மூங்கில் உராய்வதால் உண்டான செந்தீ விண் முழுவதையும் சிவக்கச் செய்கின்றது’ என்கின்றார். சில சமயம் சுழல்காற்று சிவந்த நெருப்பை வாரிக் கொண்டு விண்முழுதும் ஓடிப் பரவுகின்றது (5); மூங்கில்கள் நெருப்பில் வேகின்றபோது ஒலி உண்டாகின்றது; அந்த நெருப்பில் கற்களும் வேகின்றன (7); மேலும் அந்தமலைச் சூழ்நிலையில் நெல்லி மரங்கள் கல் லிடைகளில் முளைத்து வளர்ந்து அவற்றினிடையே வேரோடு வதால் அந்தவேர்கள் பருத்துப் பாறைகளையும் பிளந்து தள்ளு கின்றன (9). இந்தச் சூழ்நிலையை நான் மலையின்மீது மாட்டு வண்டியில் சென்று கொண்டிருந்தபோது கண்டு வியந்தேன் (1969).

இங்ஙனம் அச்சத்தை விளைவிக்கும் அடவியில் யானை, குதிரை, சிங்கம், புலி முதலிய கொடிய விலங்குகள் இங்குமங்கும் ஓடியலைந்து ஓய்ந்து நிற்கின்றன (3); மூங்கில் புதர்களினின் றும் புலிகள் பெருவழியில் வந்து சேர்ந்து யானைகள் நடமாடின அடையாளங்களைக் கூர்ந்து ஆராய்கின்றன (2); அவை உலாவின இடங்களைத் தேடித் திரிகின்றன. மற்றும் இங்கு நண்பகலில் பகலவன் காலும் வெப்பம் தாங்கமாட்டாது நாய்க ளும் கழுகுகளும் அவ்விடத்தில் நடக்கும்பொழுது கால் தடு மாறித் திண்டாடுகின்றன (4); எம்பெருமானின் சந்நிதான மகி மையினால் அவ்விடத்து மிருகங்களும் பகவத் பக்தியில் திளைக் கின்றன. சிங்கங்கள் களிறுகளைக் கொன்று அவற்றின் கோடு களைப் பிடுங்கிக் கொண்டு வந்து எம்பெருமான் திருவடிகளில் வைத்து பகவதாராதனம் நடத்துகின்றன (1).

இந்தச் சூழ்நிலையில் மக்களின் நடமாட்டத்தையும் பற்றிப் பேசுகின்றார் ஆழ்வார்.

மலைத்தசெல் சாத்தெறிந்த பூசல்
வன்துடி வாய்கடுப்ப
சிலைக்கை வேடர் தெழிப்பறாத
சிங்கவேழ் குன்றமே.[39]

39. பெரி.திரு. 1. 7: 2

[ மலைத்த-ஆக்கிரமிக்கப்பெற்ற; சாத்து-பயணிகளின் கூட்டம்; பூசல்-போர், பேரொலி; துடி-பறை;வாய்கடுப்ப -ஒலிக்க; தெழிப்பு-ஆரவாரம் ]

என்பது ஆழ்வாரின் திருவாக்கு. திருத்தலப் பயணமாகப் பலர் அந்த அடவியில் செல்லுகின்றனர். அவ்விடத்து வேடர்கள் அவர்களைத் தகைந்து போரிடுவர். அப்போரில் வேடர்களின் வில்லோசையும், பறையோசையும் இடைவிடாது இருந்து கொண்டே இருக்கும். இப்பொழுது இம்மலையில் வாழும் வேடர்கள் 'செஞ்சு' என்ற பெயர்களால் வழங்கப்பெறுகின்றனர். இவர்கள் மரபில் பிறந்த மங்கையொருத்தியை எம்பெருமான் உகந்து மணந்து கொண்டதாகத் தலவரலாறு கூறுகின்றது. இதனால் ஆந்திரத்தில் மகளிருக்குச் 'செஞ்சு லட்சுமி' என்று பெயரிடும் வழக்கமும் இருந்து வருகின்றது.

திருவேங்கடத்தின்இயற்கை யெழிலைவிட அங்கு எழுந்தருளியிருக்கும் 'நெடியோன்' இவர் உள்ளத்தைக் கவர்ந்தனால் அவனிடம் அதிகமாக ஈடுபட்டுவிடுகின்றார் ஆழ்வார். இருப்பினும் இயற்கையெழில் மின்வெட்டுபோல் சித்திரிக்கப்பெறுகின்றது. 'செங்கயல் திளைக்கும் சுனைத் திருவேங்கடம்' (பெரி திரு 1. 8: 1) 'கன்றி மாரி பொழிந்திட ... திருவேங்கடம்' (1. 8: 3), 'காரும் வார்பனி நீள் விசும்பிடைச் சேரும் மாமுகில் தோய்தர சேரும் வார்பொழில் சூழ்எழில் திருவேங்கடம்' (1. 8: 7), 'வாசமாமலர் நாறு வார்பொழில் சூழ்தரும் ... மலைத்திரு வேங்கடம்' (1. 8: 9), வேய்ஏய் பூம்பொழில் சூழ்விரைஆர் திருவேங்கடம்' (1. 9: 1), 'தேன்ஏய் பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை' (1. 9: 2), 'குன்றுஏய் மேகம் அதிர் குளிர் மாமலை வேங்கடம்' (1. 9: 3.), 'நிலம்தோய் நீள்முகில்சேர் நெறிஆர் திருவேங்கடம்' (1. 9: 4.), 'செப்புஆர் திண்வரை சூழ்திருவேங்கடம்' (1. 9: 5), .... என்றெல்லாம் திருமலையைப் பற்றி உளங்குளிரப் பேசுவார் ஆழ்வார். வேடர்கள் காரகிற் கட்டைகளை விறகாகக் கொண்டு சமைப்பதால் உண்டாகும் புகை திருமலை எங்கும் 'கமகம' என்று பரிமளித்துர் கொண்டிருக்கும். குறத்திகளும் வண்டுகளும் குறிஞ்சி முதலிய பண்களைப் பாடுவர். இங்குக் கவரிமான்கள் கூட்டம் கூட்டமாக உலவும். இப்படியாக அசித்துப் பொருள்களையும் அனுபவித்து மகிழ்

கின்றார் ஆழ்வார். அசித்தும் எம்பெருமான் படைப்பு; அவன் திருமேனி.

'அழகர் மலை' என வழங்கப் பெறும் 'திருமாலிருஞ்சோலை மலை'யின் அழகில் மங்கை மன்னன் ஆழங்கால் படுவதைக் காண்போம். ஆழ்வார் இம்மலையைச் 'சினைவளர் பூம்பொழில் சூழ் திருமாலிருஞ்சோலை' (பெரி. திரு. 9. 9:2), 'தேன்அமர் பூம்பொழில்சூழ் திருமாலிருஞ் சோலை' (9. 9: 5), 'தெள் அருவி கொழிக்கும் திருமாலிருஞ் சோலை' (9. 9: 7), 'சிலம்பியல் ஆறுடை திருமாலிருஞ் சோலை' (9. 9: 4), 'திங்கள் மாமுகில்சேர் திருமாலிருஞ் சோலை' (9. 9: 4) என்றெல்லாம் வருணித்திடுவர். பாசுரப் பகுதிகளில் ஆழங்கால்பட்டு ஆனந்தம் அடைகிறோம். பாசுரங்களில் சோலையுடன் மலைச்சாரல்களில் மலையையும் வருணிக்கும் பகுதிகள் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றன.

சோலையின் சூழ்நிலை நம்மைத் திருமங்கை மன்னனின் பாசுரங்களில் ஆழங்கால் படச் செய்கின்றது. சோலை மலைச் சாரலில் மூங்கில்கள் விண்டு விரிந்து வளர்ந்துள்ளன; நறுமணம் மிக்க குறிஞ்சி மலர்களிலுள்ள செவ்வித் தேனில் படிந்த வண்டுகள் இன்னொலியுடன் வட்டமிடுகின்றன (9. 8: 2); காலம் உணர்த்தும் சோதிடன் போன்று உரிய காலங்களில் பூக்கும் மேகமண்டலம்வரை ஓங்கியுயர்ந்த வேங்கை மரங்களும் கோங்கு மரங்களும் அங்குச் சூழப்பெற்றுள்ளன (9. 8: 3,4); ஒன்றோடொன்று பிணங்கி நிற்கும் விண்ணளாவும் மூங்கில்களின் நுனி மலையுச்சியிலுள்ள தேனடைகளின் வாயைக் கிழிப்பதனால் தேனீக்கள் நாற்புறமும் பறந்தோடுகின்றன; அதனால் தேனின் மணம் எம்மருங்கும் வீசுகின்றது. (9. 8: 5); 'வருமழை தவழும் மாலிருஞ்சோலை' யில் முகில்கள் ஆழ்கடலில் நீரை முகந்து கொண்டு விண்ணில் ஏறி இடிமுழக்கம் செய்கின்றன; அவ்வொலியைக் கேட்கும் சிங்கங்கள் அது யானையின் பிளிறல் என்று கருதி எதிர் முழக்கம் செய்கின்றன (9. 8: 6); மதங்கொண்ட களிறுகளின் கவுள்களின் வழியே மதநீர் பெருகி வருகின்றது. அதனை வண்டுகள் பருகியும் அதனால் வற்றாது மேலும் பாய்ந்து சாரல்தோறும் வெள்ளமிடுகின்றது (9. 8: ');

மலையினின்றிழியும் அருவிகள் சந்தனக் கட்டைகளையும் இரத்தினக் கற்களையும் உருட்டிக் கொண்டு வருகின்றன (9. 8; 1.) ; விண்ணளவும் ஓங்கி உயர்ந்துள்ள சோலைகளில் மானினங்கள் மலையின் நீலப்பாறை வழிகளில் புகுந்து எங்கும் மேய்ந்து கொண்டிருக்கும் காட்சி நம்மனத்தைக் கவர்கின்றது (9. 8: 7); குறவர்கள் தம் கையிலுள்ள கவணில் வைத்தெறியும் மணிகளின் ஒளி மலையெங்கும் வீசுகின்றது (9. 8:3).

**மருத நிலக்காட்சிகள் ;** தென்னார்க்காடு, தஞ்சை, திருச்சி மாவட்டங்களிலுள்ள திவ்விய தேசங்கள் யாவும் நீர்வளம் நிலவளமிக்க மருதநிலச் சூழலில் அமைந்துள்ளன. இத்திருத் தலங்கட்கு வருங்கால் ஆழ்வார் மருதநிலக் காட்சிகளில் ஆழங்கால் படுகின்றார். தொண்டை நாட்டுத் திருத்தலப் பயணத்தை முடித்துக் கொண்டு நடுநாட்டிற்கு வருகின்றார். முதலில் திருக்கோவலூர் திரிவிக்கிரமனைச் சேவிக்க வருகின்றார். இத் திவ்வியதேசம்,

பாவருந் தமிழாற் பேர்பெறு பனுவற்
பாவலர் பாதிநாள் இரவில்
மூவரும் நெருக்கி மொழிவிளக் கேற்றி
முகுந்தனைத் தொழுதநன் னாடு [40]

என்று வரந்தருவார் புகழ்ந்து கூறும் படியான முதலாழ்வார் மூவரும் ஒருவரை யொருவர் சந்தித்து அந்தாதி பாடின தலம் இது; ஏன்? நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம் பிறந்ததற்குக் காரணமான வரலாற்றுப் புகழ்பெற்ற திவ்வியதேசம்; தென் பெண்ணையான்றின் தென்கரையில் அழகான சூழ்நிலையில் அமைந்துள்ளது. இந்த ஊர்ச் சூழ்நிலையைக் காட்டும் ஆழ்வார்,

எழுந்தமலர்க் கருநீலம் இருந்தில் காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்ட
செழுந்தட நீர்க்கமலம் தீவிகைபோல் காட்டும்
திருக்கோவலூர்.[41]

40. வில்லிபாரதம் - சிறப்புப் பாயிரம்-9

41. பெரி. திரு. 2. 10 13

[இருந்தை-கரி; செம்பொன்-பசும் பொன்; தீவிகை-விளக்கு]

என்பது அவர் உருவகித்துக் காட்டும் காட்சி. இதை ஒரு தட்டானின் பொற்களரியாக உருவகித்துக் காட்டுகின்றார். பொற்களரியில் கரிகள் கொட்டப் பெற்று நிரம்பியிருக்கும்; பொன்களும் முத்துகளும் நிறைந்திருக்கும்; நெருப்பு செந் நிறத்துடன் ஒளிர்ந்து கொண்டிருக்கும். இங்குக்கருநீல மலர்கள் கரித்துண்டுகளாகவும், புன்னை மொக்குகள் முத்தாகவும், புன்னைப் பூக்கள் பொன்னாகவும், தாமரைப் பூக்கள் திகழ்ந்து தட்டானின் பொற்களரிபோல் காணப்பெறுகின்றது. இந்தக் காட்சி நெஞ்சில் நிற்பதாக அமைந்து இலக்கிய இன்பத்தை நல்குகின்றது.

இங்கே இன்னொரு காட்சியைக் காண்போம். 'அடியவர்க்கு ஆர் அமுதம் ஆன' திரிவிக்கிரமனை எங்குக் காண்கின்றார்? அவரே கூறுகின்றார்:

கோங்அரும்பு சுரபுன்னை குரவார் சோலைக்
குழாம்வரிவண் டிசைபாடும் பாடல் கேட்டுத்
தீங்கரும்பு கண்வளரும் கழனி சூழ்ந்த
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன் நானே.[42]

[கோங்கு - ஒரு மரம்; குரவு-ஒருவித மரம்; குழாம்-கூட்டம்; வரிவண்டு-அழகிய வரிவண்டுகள்; தீங் கரும்பு- இனிய கரும்பு; கண்வளரும் கண்கள் ஏறி வளர்ப்பெற்ற, உறங்கும்; கழனி-வயல்]

சோலைகளும் வயல்களும் சூழ்ந்த இடம் திருக்கோவலூர் என் கின்றார். கோங்குஅரும்புகளும், சுரபுன்னைகளும், குரவ மலர்களும் செறிந்து திகழும் சோலைகளில் வண்டுகள் கூட்டம் கூட்டமாக மதுஉண்ட களிப்பாலே இசைபாடுகின்றன. இத்தகைய சோலைகளினாலும் கண்கணாகச் செழித்துவளரும் கரும்பு

42. 2. திரு 10: 4.

களையும் கொண்ட வயல்களினால் சூழப்பட்டது திருக்கோவலூர் என்கின்றார் ஆழ்வார்.

இங்குக் கூறப் பெற்ற 'அடியவர்கள்' பொய்கையார், பூதத்தார், பேயார் என்னும் முதலாழ்வார்கள். இவர்கள் சந்தித்து அந்தாதி பாடிய வரலாற்றை நாம் அறிவோம். அவர்கட்குத் 'தேனே பாலே கண்ணலே அமுதே' என்னும்படி இருந்தவன் இத்தலத்து எம்பெருமான் — திரிவிக்கிரமன். அதனால் இவன் அவர்கட்குத் தீங்கரும்பு ஆகின்றான். கரும்புக்கு நீர் பாய்ச்ச, அது கணுக்கள் விட்டு வளர்கின்றன; வண்டுகளின் இசைப் பாடலாகிய இன்ப ரசம் பாயப் பெற்றுக் கணுக்கள் வளரப்பெறுகின்றன; இதனால் வண்டுகளின் பாடல் 'ரஸமாய்' இருக்கின்றது என்றும் உணர்த்தியவாறாகும். நம் நாட்டுத் தாவரநூற் பேரறிஞர் சர். ஜே. சி. போஸ் இசையினாலும் செடிகள் வளர்கின்றன என்றுகூறிய உண்மையும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கது.

எம்பெருமான் 'தீங்கரும்பாக' உருவகப்படுத்தும்பொழுது வண்டுகள் முதலாழ்வார்களாக உருவகம் பெறுகின்றனர். அவர்கள் பாடும் பாசுரங்கள் முதல் மூன்று அந்தாதிகளிலுள்ளவை. ஆழ்வார்கள் இந்தப் பாசுரங்கள் பாடுவதைக் கேட்டு 'திருக்கோவலூர் தீங்கரும்பு' (இறைவன்) கண் வளர்கின்றானாம். இந்த நிகழ்ச்சியை நினைந்து வேதாந்த தேசிகர் தம் 'தேகளீஸ் துதி' என்னும் சிறுநூலை அமைக்கின்றார். இது வடமொழியாலான நூல். மூன்று ஆழ்வார்களும் மிருகண்டு முனிவர் இல்லத்துத் தேகளி (ரேழி)யில் எம்பெருமானை மூன்று ஆலை உருளைகள் போல் நெருக்குதலால் திருக்கோவலூர்த் தீங்கரும்பினின்று பிழியப்பெறும் 'சௌலப்பியம்' என்னும் ரஸத்தைப் பக்த கோடிகள் பருகி அநுபவிக்கின்றனர் என்று அற்புதமாகக் காட்டுகின்றார். இங்ஙனம் தமிழ் இலக்கியம் பல வடமொழிப் புலவர்கட்குத் தாம் இயற்றும் நூல்கட்கு 'கருத்து தானம்' வழங்கியுள்ளது என்பதையும் சிந்தித்து மகிழ்கின்றோம்.

இந்தப் பாசுரங்களில் ஆழ்வார் பொதுவாக அழகெல்லாம் திரண்ட திருமேனியைக் கொண்ட எம்பெருமானை ஒரு பாதிப்

பாசுரத்திலும் இயற்கை எழில் கொழிக்கும் அவன் வீற்றிருக்கும் நிலப்பகுதியை இன்னொரு பாதிப் பாசுரத்திலுமாக இயைத்துக் காட்டுவார்.

இருங்கைமா கரிமுனிந்து, பரியைக் கீறி,
இனவிடைகள் ஏழடர்த்து, மருதம், சாய்த்து,
வரும்சகடம் இறஉதைத்து மல்லை அட்டு
வஞ்சம்செய் கஞ்சனுக்கு நஞ்சா னானை,
கருங்கமுகு பசும்பாலை வெண்முத்து, ஈன்று
காய்எல்லாம் மரகதமாய் பவளம் காட்ட,
செருந்திமிக மொட்டலர்த்தும் தேன்கொள் சோலைத்
திருக்கோவ லூர்அதனுள் கண்டேன், நானே [43]

[இருகை – நீண்டதுதிக்கை; கரி – யானை; முனிந்து – கோபித்து;மல் – மல்லர்கள்; அட்டு – கொன்று; மரகதம் – பச்சைக்கல்; செருந்தி – சுரபுன்னை]

என்பது பாசுரம். பாசுரம் பாலடை பிசுகோத்து (Cream biscuit) போல் இனிக்கின்ற தல்லவா? இயற்கையில் தோய்ந்து இலக்கிய இன்பம் நுகர்வாருக்கும் இனிக்கும்; இறையநுபவத்தில் உள்ளத்தைப்பறி கொடுப்பார்க்கும் தித்திக்கும்; இரண்டிலும் ஈடுபடுவார்க்கும் பக்தி வெறியில் கொண்டுசெலுத்தும். இஃது ஆழ்வார் பாசுர இயல்புக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

திரு அயிந்திர புரத்திற்கு வருகின்றோம்[44]. 1966–இல் என்று நினைக்கின்றேன். கடலூரில் ஓர் உணவு விடுதியில் தங்கி காலை ஏழரை மணிக்கு ஒரு பேருந்தில் கிளம்பினேன். அது சனவரி மாதத் தொடக்கம்; மழை பெய்து ஓய்ந்து போன காலம். சாலையின் இருபுறத்தினுள்ள சோலைகளும் வயல்களும் கண்ணையும் கருத்தையும் கவர்ந்தன. சோலைகளில் திரள்திரளாக வண்டுகள் புகுந்து மதுவைப் பருகிக் களித்து அக்களிப்புக்குப் போக்குவீடாக இனிய இசைகளைப் பாடிக் கொண்டு உலவா நிற்கின்றன; உலாவும்போது செறியப்பூத்த சுரபுன்னை மாங்கள் தென்படவே, அவற்றிலும் மதுவைப்

43. பெரி, திரு. 2. 10: 7
44. ஷை. 3. 1.

பருகச்சென்று சேர்கின்றன. "தூவிரிய மலருழக்கித் துணை யோடும் பிரியாதே பூவிரிய மது நுகரும் பொறிவரிய சிறு வண்டுகள்" பேடைகளுடனே கூடித் தாமரை மலரிலிருந்து கொண்டு மது பானம் பண்ணா நிற்கையில் தம்பதிகளிடையே ஊடல் உண்டாகின்றது. பேடை ஆண்வண்டை நோக்கி, 'இனி நீ சீவிக்கும்படி யெல்லாம் நான் காண்கின்றேன்' என்று சொல்லிவிட்டுக் கிளம்பிக் குருக்கத்திப் பந்தலிலே சென்று புகுந்தொளிக்கின்றது; அதைப்பிரிந்து ஆற்ற மாட்டாத ஆண் வண்டு தனது இப்பேடை ஊடல் தீர்ந்து ஓடிவருமாறு தனது கஷ்டநிலைகளை வெளியிடுகின்ற இன்னிசைப்பாடல் களைத் தாமரை மலரினின்று நிகழ்த்தா நின்றது உரையாசிரியர் பெரியவாச்சான் பிள்ளை இதற்கு உள்ளுறைப் பொருள் கூறுவர். "பிராட்டியும் தானுமான சேர்த்தியில் பிரணய கலகம் (ஊடல்) மாறாதே செல்லுமா போலேயாயிற்று அங் குத்தை (அங்குள்ள) திர்யக்குகளுடைய (விலங்குகள்) யாத்திரை யும்" என்பது அவருடைய அருளிச்செயல். வண்டானது சாகை நுனியிலே திரியுமாபோலே வேத சாகைகளின் நுனியிலே (உபநிடதம்) விளங்குகின்ற எம்பெருமான் பிராட்டியோடே ஊடல் கொண்டு செய்யும் படிகளைச் சொல்லிற்றாகக் கொள்ள வேண்டும்.

சாலையின் இருபுறமும் ஓங்கி வளர்ந்த கருப்பஞ்சோலைகள் காட்சி தருகின்றன (1) தவிர, குரங்குக்கூட்டம் ஒருமரத்தினின்றும் பிறிதொரு மரத்திற்குத் தாவித் திரிந்து கீசு கீசென்ற பேரொலி கள் செய்கின்றன; பலாமரத்தைக் கண்டதும் அதன் மதுரமான கனிகளை உட்கொள்கின்றன (5) இந்தத் திவ்வியதேசம் சிறிய மலைகள் சூழ்ந்ததாதலால், அம்மலையின் அருகே செந்நெற் கழனிகளிலே தாமரைத் தடாகங்கள் உள்ளன; அங்குள்ள தாமரைமலர்களிலே அன்னப்பறவைகள் தம் துணையோடும் பொருந்தி வாழ்வதற்கேற்ப, அதற்குப் பாங்காகச் சாமரம் வீசு வதுபோல் செந்நெற்கதிர்கள் இனிது வீசுகின்றன (7) இத்திருத் தலத்தின் அருகில் ஓடுவது கருடநதி. இதில் பெருவெள்ளம் வரும் போது யானைத் தந்தங்களையும் அகிற்கட்டைகளையும் மற்றும் பல மணி மாணிக்கங்களையும் கொழித்துக் கொண்டு

வருகின்றது (8). இதனால் வெற்றிலைத் தோட்டங்கள், பாக்குச் சோலைகள், நீர்வாய்ப்புள்ள கழனிகள் இவற்றிற்குக் குறைவில்லை (9).

சிறுபுலியூர் [44] சலசயனப் பெருமாள் திருக்கோயில் கொண்டுள்ள சூழ்நிலை இது:

வெள்ளம்முது பரவைத்திரை
விரிய கரைஎங்கும்
தெள்ளும்மணி திகழும்சிறு
புலியூர். [45]

'கடல் வெள்ளம் அலையெறிந்து நவமணிகளைக் கொண்டு வந்து கொழிக்கும் நீர்க் கரைகளையுடையது சிறுபுலியூர்' என்கின்றார் ஆழ்வார்.

அறையும்புனல் ஒருபால்;வயல்
ஒருபால்;பொழில் ஒருபால்;
சிறைவண்டுஇனம் அறையும்சிறு
புலியூர். [46]

---

44. இத்திருத்தலம் மாயூரம் – காரைக்குடிகிளை இருப்பூர்திவழியில் கொல்லுமாங்குடி நிலையத்திற்குக் கிழக்கே ஒருகல்தொலைவிலுள்ளது. எம்பெருமான் புலிக்கால் முனிவருக்கு (வியாக்கிரக பாதர்) பாலசயனமாய்ச்சேவைசாதித்த தலம். சலம் - மாயை. உறங்குவான்போல் யோகு செய்வதற்குக் கொண்ட சயனமாதலால் 'சல சயனம்' (மாயப் படுக்கை) எனப்பட்டது. மாமல்லபுரத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான் 'தலசயனன்' (தரையில் படுத்திருப்பவன்) என்பதையும் நினைவு கூரலாம்.

45 பெரிதிரு 7. 9: 1

46. பெரி. திரு. 7. 9: 3

'ஊரைச் சூழ்ந்த நீர்நிலைகளிலும் வயல்களிலும் பொழில்களிலும் வண்டுகள் இன்னொலிகளை எழுப்பிக் கொண்டுள்ளன; கண்ணுக்கும் செவிக்கும் விருந்தூட்டும் சூழ்நிலையை யுடையது சிறுபுலியூர்' என்கிறார்.

நீர்நிலைகளில் வண்டுகள் ஒலிக்குமோ? என்ற வினா எழுகின்றது. நீர்நிலைகளில் மதுவோடு கூடிய வெள்ளப் பெருக்கம் இருக்குமாதலால், மதுவின் நசையினால் வண்டுகள் வந்து மொய்க்கும். கம்பநாடனின் பாடல் ஒன்று இக் கருத்தை அரண் செய்வதுபோல் அமைகின்றது.

ஈக்கள் வண்டொடு
மொய்ப்ப வரம்பிகந்து
ஊக்கமே மிகுந்து
உள்தெளிவு இன்றியே
தேக்கு எறிந்து
வருதலின் தீம்புனல்
வாக்கு தேனுகர்
மாக்களை மானுமே.[47]

[வரம்பு - எல்லை; தேக்கு - ஏப்பம்; எறிந்து - வீசிக் கொண்டு; வாக்கும் - வார்க்கும்; தேன் - கள்; மானும் - ஒத்திருக்கும்]

என்ற பாடலில் இக்கருத்தைக் காட்டுவான். கட்குடியரையும் ஆற்று வெள்ளத்தையும் ஒப்பிட்டுக் காட்டும் பாடல் இது கட்குடியரைக் கூறுமிடத்து: ஈக்கள் வண்டோடு மொய்த்தல் - அவரிடத்துள்ள கள் நாற்றத்திற்காக ஈக்களும் வண்டுகளும் மொய்க்கும்; வரம்பு இகத்தல் - தமது குலம், குடிப்பிறப்பு என்ற இவற்றுக்கு ஏற்ற ஒழுக்கத்தைக் கை விடுவர்; ஊக்கம் மிகுதல்- உற்சாகம் மிகுந்தவராயிருப்பர்; உள் தெளிவு இன்மை - மனம் தெளிவு பெறாதிருப்பர்; தேக்கு எறிதல் - சதா ஏப்பம் விட்டுக்

47. கம்பரா. பால. ஆற்றுப் - 10

கொண்டே இருப்பர் இத் தன்மைகளையுடையவர்கள் கட்குடியர். ஆற்று வெள்ளத்தைக் கூறு மிடத்து: ஈக்கள் வண்டோடு மொய்த்தல் – அடித்துச் செல்லும் பல்வகை மலர்களிலுள்ள தேன் முதலியவற்றிற்காக ஈக்களும் வண்டுகளும் மொய்க்கும்; வரம்பு இகழ்தல் – கரை கடந்து செல்லும் வெள்ளம். ஊக்கம் மிகுதல் – வலிமைமிக்குச் செல்லும்; உள் தெளிவு இன்மை - தன்னுள்ளே இருக்கும் நீர் கலங்கியிருத்தல்; தேக்கு எறிதல் - அடித்துக் கொண்டுவரும் தேக்கு மரங்களை வீசுலைக் காணலாம். இப்பாடலில் வண்டுகள் வெள்ளத்தில் மொய்ப்பதை எடுத்துக் காட்டியிருப்பதைக் கண்டு மகிழலாம்.

இன்னொரு நயமான கருத்து ஆழ்வார் பாடலில் காணப் படுகின்றது.

முழுநீலமும் அலராம்பலும்
அரவிந்தமும் விரவிக்
கழுநீரோடு மடவார் – அவர்
கண்வாய்முகம் மலரும்
செழுநீர்வயல் தழுவும் சிறு
புலியூர்[48]

[விரவி – சேர்ந்து; மடவார் – பெண்கள்]

சிறுபுலியூரில் ஊருக்கும் வயலுக்கும் வேறுபாடு தெரிந்து கொள்ள வொண்ணாதபடி இருக்கும் என்கின்றார் ஆழ்வார். நீலோற்பலங்களைப் பார்த்தால் அவ்வூர்ப் பெண்களின் கண்களாகத் தோற்றும்; அரக்காம்பல்களை நோக்கினால் அப் பெண்களின் செவ்விதழ்களை நிகர்ப்பனவாக இருக்கும்; தாமரை மலரைக் காணின், அம்மங்கையரின் முகம்போலக் காட்சி

48. பெரி. திரு. 7. 9: 6

அளிக்கும். எனவே, ஊரின் உள்வீதிகட்கும் வெளி நிலங்கட்கும் வேறுபாடு தெரிவர்தாக இருக்கும். இவ்வூர் மகளிர், கிளிப்பிள்ளைகட்குப் பேசும் பயிற்சி தருவதை "கிளி மடவார் செவ்வாய் மொழி பயிலும் சிறுபுலியூர்" [49]என்று காட்டுவர் ஆழ்வார்.

கண்ணபுரத்தைக் காட்டும் ஆழ்வார் "கார் வானம் நின்று திருக்கண்ணபுரம்"[50] "கார்மலி கண்ணபுரம்"[51] "காவளரும் கடி பொழில்சூழ் கண்ணபுரம்"[52] என்று காட்டுவர்.: ஊரின் சூழ்நிலையை இவ்வாறு காட்டுவார்,: "கண்ணபுரம் குளங்கள் நிறைந்த ஊர் (பெரி. திரு. 8. 7: 1); களை பறிக்கின்றவர்கள் களைக்கொட்டுகளைக்கொண்டு களை பறிக்குங்கால் சிறு தூறுகளினின்றும் புறப்படும் முயல்கள் அவர்கள் முகத்தில் துள்ளும்; செழிப்பான கழனிகளில் கயல் மீன்கள் துள்ளும் (3); சோலைகள் எங்கும் நறுமண முள்ள மலர்களைக் கோதி, மதுவைப் பருகி அக்களிப்பினால் இசை எழுப்பும் (4,6); கழனிகளில் கலப்பைகளைச் செலுத்தும்போதும், காலால் குழப்பும் போதும் இடையிலே தப்பிக் கிடந்த தாமரை மலர்களினின்றும் நறுமணம் புறப்படும் (8).

எங்கும் சோலைகள்; வண்டினங்களின் இன்னோசைகள். இந்தச் சூழ்நிலையில் வண்டுகளை நோக்கிப் பாடத் தோன்றியது போலும். ஆழ்வாருக்கு, நாயகி நிலையிலிருந்து பத்துப் பாசுரங்களைப் பாடி இனியராகின்றார். அவற்றுள் ஒன்று:

விண்ட மலரெல்லாம் ஊதி, நீ,8 என்பெறுதி?
அண்ட முதல்வன் அமரர்கள் எல்லாரும்

---

49. பெரி. திரு. 7, 9: 8
50. ஷை. 8. 1: 4
51. ஷை. 8. 2: 10
52. ஷை. 8. 6: 10

கண்டு வணங்கும் கண்ணபுரத்து எம்பெருமான்
வண்டுநறுந் துழாய்வந்து ஊதாய் கோல்தும்பீ[53]

[விண்ட—மலர்ந்த; ஊதி—ஒலிசெய்து;
அண்டம்—உலகம்; நறு—மணம் மிக்க]

'தும்பி' என்பது வண்டுகளில் ஒருவகை; நருவண்டு என்றும் கூறுவர். மரக் கொம்புகளில் மதுவுக்காகத் திரியும் இயல்பு பற்றிக் 'கோல் தும்பி' (கோல்—கிளை) என்று விளித்துப் பேசுகின்றாள் ஆழ்வார்நாயகி. "திறந்து கிடந்த வாசல் எல்லாம் திரியுமாப்போலே விண்டமலர்கள்தோறும் நீ ஊதித் திரிவதனால் என்ன பேறு பெறப் போகின்றாய்? அற்பமாயும் நிலையற்றதுமாயும் உள்ள மதுவையுடைய இம்மலர்களிலே ஊதித் திரிவதை விட்டு, திருக்கண்ணபுரத்தில் சந்நிதிபண்ணிக் கொண்டிருக்கும் எம்பெருமானுடைய திருத்துழாய் மாலையிலே உன் சுற்றத்தாருடன் தங்கியிருந்து அங்குள்ள பரிமளத்தை இங்குக் கொணர்ந்து ஊதுவாயாகில் மிகுதியும் நிலையானதுமான மதுவைப் பருகலாம்" என்கின்றாள் பரகாலநாயகி.

வண்ணம் திரிவும் மனம்குழைவும்
மானம் இலாமையும் வாய்வெளுப்பும்
உண்ண லுறாமையும் உள்மெலியும்
ஓதநீர் வண்ணன் என்பானொருவன்
தண்ணந் துழாய் என்னும் மாலைகொண்டு
சூட்டத் தணியும்.[54]

[வண்ணம்-மேனிநிறம்; திரிவு—மாறுபாடு;
குழைவு—தளர்ச்சி; உள்மெலிவு —
அறிவு சுருக்கம்]

53 பெரி. திரு 8. 4: 3

54. நாச். திரு. 12:7

என்று கூறுவாள் குடிக்கொடுத்த சுடர்க்கொடி. எம்பெருமானு டைய திருத்துழாய்ப் பிரசாதத்தைக் கொணர்ந்து தனது தலையில் சூட்டினால்தான் தனது காதல் நோய் தீரும் என் கின்றாள். ஆனால் பரகாலநாயகி வண்டுகள் திருத்துழாயில் படிந்து வந்து ஊதினால் போதும் என்கின்றாள்.

இவ்விடத்தில் மணிவாசகப் பெருமானின் 'திருக்கோத்தும்பி' பதிகமும் சிந்திக்கத் தக்கது. இங்கு அடிகள் ஓர் அரசவண்டை நோக்கிப் பேசுகின்றார்.

> தினைத்தனை உள்ளதோர்
> பூவினில்தேன் உண்ணாதே
> நினைத்தொறும் காண்டொறும்
> பேசுந்தொறும் எப்போதும்
> அனைத்தெலும் புள்நெக
> ஆனந்தத் தேன்சொரியும்
> குனிப்புடை யானுக்கே
> சென்றூதாய் கோத்தும்பி.[55]

[தினைத்தனை–தினையளவு; உள்நெக– உள் உருக]

"நீ மலர்தோறும் ஊதுவதால் கிடைக்கும் தேன் சிறிய அளவினது. எப்பொழுதும் மாளா இன்பத்தேன் சொரியும் குனிப் புடையான் திருவடித் தாமரைக்கண் சென்று ஊதுவாயாக. இந்தத் தேன் என்றும் பசியா இன்னமுதாய் என்பும் உருக்கி உணர்வினில் இனிது உயிர்க்கு ஓவா வளம் தரும்" என்று பேசுவர் அடிகள். பண்டிருந்து இப்படி வண்டினை (வண்டுகளை) விளித்துப் பேசுவது ஓர் இலக்கியமாக இருந்து வருகின்றது.

திருநாங்கூர்த் திருப்பதிகள்பற்றிய இயற்கையழகு சொல்லுந் தரமன்று. ஒவ்வொருவரும் படித்து அநுபவிக்க வேண்டியது. விரிவஞ்சி அதனுள் புகவில்லை. என்னுடைய சோழநாட்டுத்

55. திருவா. திருக்கோத். 3

திருப்பதிகள் - இரண்டாம் பகுதி[56] என்னும் நூலில் விரிவாக விளக்கப்பெற்றுள்ளது. ஆண்டுக் கண்டு தெளிய வேண்டு கின்றேன்.

சிதம்பரத்தை அடுத்துள்ள காழிச் சீராமவிண்ணகரத்தை வருணிக்கும் போது[57] பல அற்புதமான காட்சிகளில் ஆழங்கால் படுகின்றோம். இத் திருத்தலத்தைச் சூழ்ந்துள்ள வயல்களில் சங்குகள் கருவுயிர்க்கும் நிலையில் உள்ளன; உழுகின்ற எருதுகள் குறுக்கும் நெடுக்குமாக ஓடுகின்றன; அந்த அதிர்ச்சியினால் சங்குகள் முத்துகளைக் கருவுயிர்க்கின்றன. அம்முத்துகளைக் கொக்குகள் தம்முடைய முட்டைகளாக மயங்கி அவற்றைச் சுற்றிப் பறந்து கொண்டிருக்கின்றன (2). வண்டுகளின் செய்தி நம்மை மகிழ்ச்சியூட்டுகின்றது. வண்டுகள் செங்கழுநீர் மலர்களில் தம் பேடைகளுடன் கூடிக் குலவுகின்றன; இதனாலுண்டான சோர்வுக்குப் பரிகாரமாக, தாமரைப் பூக்களையடைந்து அங்குள்ள தேனைப் பருகித் துயின்று களைப்புத்தீர்கின்றன; பின்பு தாழை மடலின் சுண்ணங்களிலே (பூந்தாதுகளில்) போய்ப் புரண்டுத் தம் களிப்பின் மிகுதியால் இசைப்பாடுகின்றன (9). காழியின் ஊர்த் தெருக்களின் வருணனை மிக அற்புதமாய் அமைந்துள்ளது. கடலில் உள்ள சங்குகள் கடலைத் துறந்து தாழைகள் மலிந்த கழிகளை வந்தடைகின்றன; பின்னர் வயல்களில் பாய்கின்றன; வயலில் உள்ள வாய்க்கால்கள் வழியாக ஊரினுள் புகுகின்றன; தெருக்களை அடைகின்றன; நீர் வடியும்போது மேலும் போக முடியாமல் முத்துகளைக் கருவுயிர்க்கின்றன (7).

மாதர்களைப்பற்றிய சமத்கார வருணனை நமக்கு மகிழ் வூட்டுகின்றது. வயல்களில் களை பரிக்கும் கடைசி மார்கள்,

நெய்தலோடு
மையணைந்த குவளைகள்தம் கண்கள் என்றும்
மலர்க்குமுதம் வாய்என்றும் கடைசி மார்கள்
செய்யணைந்து களை களையாது ஏறும் காழி[57].

56. பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை-600 108.
57. பெ. திரு. 3.4

[மை அணைந்த- கருமை நிறம் மிக்க; கடைசி மார்கள் - களை பறிக்கும் பெண்கள்; செய் - வயல்; அணைந்து - இழிந்து; களை களையாது - களைபறியாமல்; ஏறும் - கரை ஏறும்.]

என்று காட்டப்பெறுகின்றனர். கழனிகளில் பயிர்களினிடையே நெய்தல், குமுதம், குவளை முதலியவற்றின் வளர்ச்சியால் பயிரின் வளர்ச்சி குறைபடுமாதலால் அவற்றைக் களை பறிப்பது வழக்கம். அங்ஙனம் களை பறிப்பதாக வயலில் இழிந்த கடைசி மார்கள் அந்த நெய்தல் குவளை, குமுதம் ஆகிய மலர்களை முதலிரண்டைத் தங்கள் கண்களாகவும், மூன்றாவதைத் தம் வாயாகவும் பாவித்துத் தம்முடைய அவயவங்களையே தாம் பறிக்க நேர்ந்தனவே என்று கையொழிந்து களை பறியாமலேயே வெளியேறுகின்றனர். நகரிலுள்ள அழகிய மாதர்களை,

விகிர்த மாதர்
அவ்வாய வாள்நெடுங்கண் குவளை காட்ட
அரவிந்தம் முகங்காட்ட அருகே ஆம்பல்,
செவ்வாயின் திரள்காட்டும் வயல்சூழ் காழி[59]

[விகிர்தமாதர் - அழகிய பெண்கள்; அவ்வாய - அப்படிப்பட்ட; அரவிந்தம் - தாமரை].

என்று காட்டுவர். இந்தப் பெண்கள் குவளை போன்ற கண்ணழகும் கமலம் போன்ற முக அழகும் செவ்வாம்பல் போன்ற வாயழகும் உடையவர்கள் என்கின்றார்.

**சில ஊர்க் குறிப்புகள்:**

(1) சோலைகளின் நிலைமையைக் கூறும் ஆழ்வார்,

58. பெரி. திரு. 3. 4: 3

59. ஷ 3. 4: 5

அணில்கள் தாவ
நெட்டிலைய கருங்கமுகின் செங்காய் வீழ
நீள்பலவின் தாழ்சினையின் நெருங்கு பீனத்
தெட்டபழம் சிதைத்துமதுச் சொரியும் காழி[60]

[பீனம் — பருத்த; தெட்ட - கனியப் பழுத்த ; சிதைந்து — நசுங்கி]

என்று காட்டுவர் ஆழ்வார். அணிற்பிள்ளைகள் மரங்களில் தாவித் திரிகின்றன. அவை பாக்கு மரங்களில் தாவும்போது அந்த உராய்தலினால் செங்காய்கள் உதிர்ந்து பலாப்பழங்களின் மீது 'தொப்' என்று விழுகின்றன. அதனால் அப்பழங்கள் பிளவுற்று உள்ளிருந்து தேன் வெள்ளமிட்டுப் பெருகுகின்றது.

தெட்டபழம்: இதுபற்றி ஒரு வரலாறு உண்டு. எம்பெருமானார் இந்தப் பிரபந்தக் காலட்சேபம் நடத்தியருளிய போது 'தெட்ட' என்பதற்குச் சரியான பொருள் விளங்கவில்லை என்று அருளிச் செய்து வைத்தார். பின்பொருகால் திவ்விய தேச யாத்திரையாக எழுந்தருளும் போது இத்தலத்தின் சோலை வழியே வந்து கொண்டிருந்தார். அங்கே நாவல் மரங்களின்மீது சில சிறு பிள்ளைகள் ஏறிப் பழம் பறித்துக் கொண்டிருந்தனர். கீழே இருந்த சில பிள்ளைகள் 'அண்ணே! தெட்ட பழமாகப் பார்த்துப் பறித்துப் போடு' என்கின்றனர். இதை எதிர்பாராது கேட்டருளிய எம்பெருமானார், 'பிள்ளாய்! தெட்டபழம் என்றால் என்ன?'. என்று வினவ, அவர்கள் 'கனிந்த பழம்' என்று மொழிந்தனர். உடையவர் திருவுள்ளம் உவந்து இஃது ஒருதிசைச் சொல் போலே இருந்தது; நம்மாழ்வாரின் திருநாவாய் பற்றிய திருவாய்மொழிப் பதிகத்திலே[61] "குறுக்கும் வகையுண்டு கொலோ' என்றதை ஒக்கும் இது" என்று அருளிச் செய்தாக உரையில் ஒரு குறிப்பு உள்ளது.

60. பெரி. திரு. 3. 4: 8

61. திருவாய்: 9. 8: 1

(2) புள்ளம்பூதங்குடி என்ற திவ்வியதேசத்தின் வயல் வளம் கூறும் ஆழ்வார்,

பள்ளச் செறுவில் கயல்உகளப்
பழனக் கழனி அதனுள்போய்
புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்
புள்ளம் பூதங் குடிதானே.[62]

[உகள - துள்ளி விளையாட]

என்கின்றார். பட்டர் காலத்தில் ஆலவாயுடையான் என்ற தமிழன் ஒருவன் பட்டரிடம் வந்து ஒரு வினா விடுத்தான்: 'பள்ளச் செறுவில் கயலுகள' என்ற போதே அவ்விடத்து வயல் களில் மீன்கள் அளவற்றுக் கிடக்கின்றமை வெளிவந்து விட்டது; அப்படியிருக்க ஈற்றடியில் 'புள்ளுப் பிள்ளைக்கு இரைதேடும்' என்று எங்ஙனே சொல்லலாம்? மீன் அருமைப் பட்டிருந்தாலன்றோ இரை தேட வேண்டும்; கொள்வார் தேட்டமாம்படி குறையற்றுக் கிடக்கும்போது தேடிப் பிடிப்பதாகச் சொல்லுதல் பொருந்தா தன்றோ?'' என்று கேட்டான். இதற்குப் பட்டர் அருளிச் செய்த தாவது: ''பிள்ளாய்! நீ கற்றவனாயினும் சொற்போக்கு அறிந் திலை; 'பிள்ளைக்கு இரை தேடும்' என்றுள்ளது கரண்; அங்குள்ள மீன்கள் நிலமிதியாலே 'தூணும் துலாமும் போலே' தடித்திருக்கும்; அவை பறவைக் குஞ்சுகளின் வாய்க்குப் பிடிக்கமாட்டா வாகையாலே உரிய சிறிய மீன்களைத் தேடிப் பிடிக்கவேண்டுமன்றோ?'' என்றாராம்.

(3) நாச்சியார் திருக்கோயில்' என்ற ஊர்தான் திருமங்கை யார் பாசுரங்களில் 'நறையூர்' என்று குறிப்பிடப் பெறும். தஞ்சை மாவட்டமல்லவா? நீர்வளம் நிலவளத்திற்குக் குறை வில்லை. இந்த ஊரின் நீர்வளத்தைக் குறிப்பிடும் பாசுரத்தில்,

62. பெரி. திரு. 5. 1: 2 இத்தலம் சுவாமிமலையிலிருந்து மூன்று கல் தொலைவிலுள்ளது.

பள்ளி கமலத் திடைப்பட்ட
பகுவாய் அலவன் முகம்நோக்கி
நள்ளி யூடும் வயல்சூழ்ந்த
நறையூர் நின்ற நம்பியே. 63

[கமலம்–தாமரைபூ; பகுவாய்-பெரிய வாய்; அலவன்–ஆண் நண்டு; நள்ளி–பெண் நண்டு]

'தாமரைப்பூவில் படுத்துக் கொண்டிருந்த ஆண் நண்டின் முகத்தைப் பெண் நண்டு பார்த்து ஊடல் செய்யப் பெற்ற வயல் சூழ்ந்த நறையூர்'– என்பது நேர் பொருள்; மூல பாடத்தை யொட்டியது. பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் கண்டது (பட்டர் அருளிச் செய்ததைக் குறிப்பாகக் கேட்டிருந்த நம்பிள்ளை அருளிச் செய்தது): ஓர் ஆம்பல் மலரில் நண்டுத் தம்பதிகள் இனிது வாழ்கையில் நிறைசூல் கொண்ட பேடைக்கு இனிய பொருள்களைக் கொணர்ந்து தர வேண்டும் என்று அலவனுக்கு ஆசை உண்டாயிற்று; பிறகு தாமரைப் பூவிலிருந்து நல்ல மகரந்தத்தைத் திரட்டிக் கொணர்ந்து கொடுக்க விரும்பி மெல்ல மெல்ல நகர்ந்து தாமரைப் பூவை அடைந்தது. அவ்வயம் பகலவன் மறையவே. அத்தாமரை மலர் மூடிக் கொண்டது. அலவன் அதற்குள் அகப்படுக் கொண்டது. தாமரையை மலர்த்திக் கொண்டு எப்படியாவது வெளிக்கிளம்பி விடவேண்டுமென்று எவ்வளவோ முயன்றும் பயன் அளிக்க வில்லை. மறுநாள் பகலவன் உதயமானாலல்லது தாமரை மலராது. உடம்பைக் கொண்டு புரண்டு இரவு முழுதும் அதிலே தங்கியிருந்து பொழுது விடிந்ததும் மலர்ந்த தாமரையினின்றும் வெளிப்பட்டுத் தாதும் சுண்ணமும் உடம்பிலே நிழலிட்டுத்தோற்ற தன் மனைக்கு விரைந்து வந்து சேர்ந்தது; பகற்பொழுதில் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளும். ஆண் நண்டு அங்கு வந்து சேரும் சமயமும் பெண் நண்டு கிடக்கும் ஆம்பல் மலர் மூடிக்கொள்ளும் சமயமும் ஒன்றாக இருந்தது. இதனைப் பார்த்தால், ஆண் நண்டு

63. பெரி. திரு. 6. 7: 6

இரவில் வேறிடத்தில் தங்கி எந்தபடியாலும் உடம்பில் சுவடு இருந்தபடியாலும் கவடு இல்லாத ஆண்நண்டின்மீது ஊடல் கொண்டது பெண் நண்டு; கதவையும் அடைத்துக் கொண்ட படியாகவும் இருந்தது. இஃது அகப்பொருளில் ''வாயில் மறுத்தல்'' துறைக்கு நல்லதோர் எடுத்துக்காட்டு. ஒரு புறத்தில் மலர்ந்த தாமரை மலர்களும் மற்றொரு புறத்தில் குவிந்துள்ளன வுமான ஆம்பல்மலர்களும் விளங்கப்பெற்ற வயலால் சூழப்பட்டது நறையூர் என்று வயல்வளம் கூறிய ஆழ்வாரின் கற்பனைத் திறமும் அதற்குப் பொருத்தமாக அற்புத விளக்கம் தந்த பட்டரின் கூரிய அறிவும் நம்மை வியக்க வைக்கின்றன.

இதனைப் பட்டர் அருளிச் செய்ததும் பிள்ளை திரு நறையூர் அரையர் 'ஆராய்ந்து குற்றம் கண்ட பிறகு அன்றோ தண்டிக்கவேண்டும்? என்று சொல்ல, அதற்குப் பட்டர் 'என் செய்வோம்? கேள்வியில்லாத படி பெண்ணரசு நாடாய்த்தே' என்று அருளிச்செய்தார். (திருநறையூர் என்ற நாச்சியார் கோவிலில் எம்பெருமானுக்கு முக்கியத்துவம் இல்லை; பிராட்டிக்கு தான் எல்லா முக்கியத்துவமும். திருவீதி புறப்பாடுகளில் நாச்சி யார் முன்னே எழுந்தருள்வதும் எம்பெருமான் பின்னே; எழுந்தருள்வதுமாக இருக்கும் .ஆணரசு நாடாகில் கேட்பாருண்டு: பெண்ணரசு நாடாததால் கேட்பாரில்லை. இதுவும் ஒரு ரஸோக்தி; நயம்பட உரைக்கும் திறமாகும்.

(4) **திருவிண்ணகர்** – என்பது கும்பகோணத்திற் அருகி லுள்ள ஒரு திவ்வியதேசம்; ஒப்பலியப்பன் சந்நிதி என்று வழங்கப் பெறுவது. இத்திருத்தலம் ஆழ்வாரின் மூன்று பதிகங் களால் மங்களாசாசனம் செய்யப்பெற்றுள்ளது. இந்தப் பதிகங்களுள் ஒரு பாசுரத்தில்,

கோனே குறுங்குடி யுள்குழகா திருநறையூர்த்
தேனே வருபுனல்சூழ் திருவிண்ணக ரானே.[64]

[குழகன் - கலந்து கொள்ள நிற்பவன்; வருபுனல் - பெருகுகின்ற தீர்த்தங்கள்]

என்ற அடிகளில் 'திருநறையூர்த் தேனே!' என்று அடுத்து 10 பதிகங்களாலும் இரண்டு மடல்களாலும் மங்களாசாசனம் செய்யப் போகின்ற திருநறையூர் நம்பி இவர் உள்ளத்தில் காட்சி தருகின்றார். 'திருநறையூர்த்தேனே!': "பட்டர் 'திருநறையூர்ப் பெருக்குக்குச் சினையாறு படுகின்றது கிடாய், என்று அருளிச்செய்வர்'' என்பது பெரியவாச்சான் பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீ சூக்தி. இதனை விளக்குவது இன்றியமையாததாகின்றது. திருவிண்ணகர் விஷயமான இத்திருமொழி (6.3) முடிந்தவுடனே, 'கண்ணுஞ் சுழன்று' (6.4) என்ற திருமொழி தொடங்கிச் 'சினவிற்செங்கண்' (7.3) என்ற திருமொழியளவும் நூறு பாசுரங்களாலே திருநறையூரை அநுபவிக்கப் போகிறாரே ஆழ்வார்; அதற்குள்ளே இப்போது 'திருநறையூர்த் தேனே!' என்று அத்திருப்பதியைப் பற்றிச் சுட்டுவானேன்? என்று நஞ்சீயர் போல்வார் பட்டரைக் கேட்டனர். அதற்கு பட்டர் அருளிச் செய்த மறுமாற்றம் இது: இதன் கருத்து யாதெனில், ஆற்றில் பெருவெள்ளம் வருவதற்கு முன்னே ஆறு பொசிந்து காட்டுவது வழக்கம்; அதுபோலே, நூறு பாசுரங்களால் திருநறையூர்த் திருப்பதியநுவமாகிற பெருவெள்ளம் அண்மையில் வந்து விட்டதால் அதற்கு முன்அடையாளமாகத் 'திருநறையூர்த் தேனே!' என்று இவ்வாறு பொசிந்து காட்டுகின்றது. இத்தகைய அழகிய நுண்பொருள் பட்டர் திருவுள்ளத்தில்தானே தோன்றும்!

(5) திருநாங்கூர் மணிமாடக்கோயில் மங்களா சாசனப், பாசுரமொன்றின் இயற்கை வருணனையில் எருமைகளின் இருப்பை

64. பெரி. திரு. 6. 2: 3

ஓங்குபைந்தாள்
கண்ணார் கரும்பின் கழைதின்று வைகி
கழுநீரில் மூழ்கி செழுநீர்த் தடத்து
மண்ஏந்து இளமேதிகள் வைகும் நாங்கூர்.[65]

[கண்ஆர் - கணுக்கள் நிரம்பிய கழை-கரும்பு; வைகி-தாமதித்துநடத்து; தடத்து - தடாகத்தில்; மேதி-எருமை]

என்று காட்டுவர். வயல்களில் இளைய எருமைகள் கரும்புத் தலையாடியை மேய்ந்து, அளவு மீறித் தின்னதாலே, நகர்ந்து செல்லமாட்டாமல், இருந்தஇடத்திலேயே இடம்- வலம் கொண்டு அசைபோடுகின்றன; பிறகு மெதுவாக நடந்து சென்று செங்கழு நீர்ப்பூக்கள் நிரம்பியிருக்கப்பெற்ற அழகிய நீர் நிரம்பிய தடா கத்திலே மூழ்குகின்றன; குட்டையின் சேற்றில் கொம்புகளைக் குத்தி மண்ணுருண்டையைப் பெயர்த்தெடுத்துத் தாங்கிக் கொண்டு கிளம்பி, பின்னர்க் கரையேறவும் முடியாதபடி அவ் விடத்திலே தாமதித்துக் கிடக்கின்றன'' என்கின்றார்.

இப்பாசுரத்தைப் பிள்ளை விழுப்பரையரும் ஆப்பானும் கூடி அநுசந்தித்துப் பொருள் நோக்குங்கால் - மூன்றாம் அடியில் 'வைகி' என்று ஒருமுறை வந்துள்ளது; நான்காம் அடியிலும் 'வைகு' என்று மீண்டும் வந்துள்ளது. இப்படித் திரும்பவும் கூறுவதற்குப் பொருளென்ன? என்று ஐயுற்றுப் பட்டரைப் பணிந்து கேட்க, அவர் ''அவ்விடத்து எருமைகளின் இளமைத் தன்மை (சௌகுமார்யம்) விளக்கப்பட்டதாகின்றது; முரட் டெருமைகளாயிருந்தால் பதறிப்பதறி நடக்கும்; சுகுமாரமான எருமைகளாகையினாலே வைகி வைகிக் கிடக்கின்றபடி'' என்று அருளிச் செய்தாராம். வைகுதல் - விளம்பித்தல், தாமதமாக இருத்தல்.

(6) ''தூவிரிய மலழக்கி''[66] என்ற பதிகம் தலை வனைப் பிரிந்த தலைவி வண்டு முதலியவற்றை நோக்கி இரங்கிக் கூறுதலாக அமைந்தது. இங்கு ஓர் ஐதிகம்: நஞ்சீயர்

65. பெரி. திரு. 3. 8: 6
66. பெரி, திரு. 3:6

நோய் வாய்ப்பட்டு இருக்கையில் அவர்தம் சீடர்களில் (ஸ்ரீபாதத்து முதலிகளில்) ஒருவரான பெற்றி என்பவர் விசாரிக்கச் சென்று உரையாடுகையில் ''இப்போது சுவாமிக்கு என்ன திருவுள்ளம்'' என்று கேட்க, அதற்கு நஞ்சீயர், 'தூவிரிய மலருழக்கி' திருப்பாசுரங்களைக் காதாரக் கேட்கவும், பெருமாள் எழுந்தருளப் பின்னும் முன்னும் வந்து சேவிக்கவும் விருப்பமாயுள்ளது என்று அருளிச் செய்தார். உடனே வரந்தரும் எம்பெருமாளரையர் என்புவரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து இத் திருவாய்மொழியைச் சேவிக்கச் சொல்லிக் கேட்டருளா நிற்கையில், நான்காம் பாசுரத்தில்,

தானாக நினையானேல்
தன்னினைந்து நைவேற்குஓர்
மீனாய கொடிநெடுவேள்
வலிசெய்ய மெலிவேனோ? (4)

என்னும் அளவில் வந்தவாறே ''நோவுபடுவதற்கு முன்பு வந்து உதவாமற்போனாலும், நேர்ந்த நோயைப் போக்குவதற்காகிலும் வந்தாலாகாதோ?'' என்றருளிச்செய்து மிகவும் தளர்ந்து வருந்தினாராம். ஆகவே, இத் திருமொழி பகவத் காமுகர்களை நன்கு உருக்கும் என்பது வெள்ளிடைமலை.

(7) அர்ச்சையில் எம்பெருமானைக் காணும் திருமங்கையாழ்வார் அவனுடைய விபவாவதாரச் செயல்கள் பலவற்றைத் திருவுள்ளங் கொண்டு அவனது திருக்குணத்தில் தன் மனத்தை ஈடுபடுத்துவர்.

''அன்று பேய்ச்சி
விடம்பருகு வித்தகனைக் கன்றுமேய்த்து
விளையாட வல்லானை வரைமீகானில்
தடம் பருகு கருமுகிலை' (2. 5: 3)

என்பது கடல் மல்லைத் தலசயனப் பெருமாள்மீதுள்ள பாசுரப் பகுதி. இதில் 'வரைமீகானில் தடம் பருகு கருமுகிலை'

என்பதற்கு நஞ்சீயர் பொருள் கூறிக் கொண்டிருக்கும்போது அதனைக் கேட்டுக் கொண்டிருந்த பிள்ளை யழகிய மணவாளப் பெருமாளரையர் என்பவர் பராசர பட்டர் அருளிச் செய்த வேறு பொருளை அவரிடம் சமர்ப்பித்தாராம். அப்பொருள்: கண்ணன் மலைமீதுள்ள காடுகளில் கன்றுகளை மேய்த்துக் கொண்டிருக்கும்போது இளங்கன்றுகள் அங்குள்ள தடாகங்களில் நீர் குடிக்கப் புகும்போது நீரில் முன்னே இறங்கிக் குடிக்க அஞ்சுமாம். அக்கன்றுக்கு நீருண்ணும் விதத்தைப் பழக்கு வதற்காகக் கண்ணன் தன்முதுகில் கைகளைக் கட்டிக் கொண்டு கவிழ்ந்து நின்று தண்ணீரமுது செய்து காட்டுவானாம். இங்குக் காட்டிய சொற்றொடர் கண்ணனின் இச் செயலைக் குறிப்பிடுகின்றது என்பாராம் பட்டர். பாசுரத்தை அநுபவித்த பட்டரின் திறனை நாம் எண்ணி எண்ணிப் போற்றுகின்றோம்.

**நெய்தல் நிலக் காட்சிகள்:** திருநாகை அழகியாரை அநுபவித்த ஆழ்வார், நாயகி பாவனையுடன் (சோழநாட்டுத் திருத்தலப் பயணத்தை முடித்துக் கொண்டு) திருப்புல்லாணிக்கு வருகின்றார். திருப்புல்லாணிப் பாசுரங்களால் அற்புதமான நெய்தல் நிலக்காட்சிகளை அநுபவிக்கின்றார் ஆழ்வார். இராமேசுவரத்தில் கடல் அமைதியாக இருப்பதுபோல், திருப்புல்லாணிக் கடல் அமைதியாக இல்லை; அங்குக் கடல் மிகக் கொந்தளிப்புடன் உள்ளது.

பொருது முந்நீர்க் கரைக்கே
மணியுந்து புல்லாணி[68]

என்று பேசுவர் ஆழ்வார். இதற்குப் பெரிய வாச்சான் பிள்ளை அருளிச் செய்தஉரை: "உத்தேச்ய ஸித்திக்கு இருந்த இடம் விட்டுப் போக வேண்டாத தேசம்; 'பொருள்வயிற் பிரி

---

67 பாண்டி நாட்டுத்திருப்பதிகளுள் ஒன்று. இஃது இராமநாத புரத்திற்குத் தெற்கே ஏழு கல் தொலைவிலுள்ள ஒரு சிற்றூர். கடற்கரையருகிலுள்ளது. இராமநாதபுரத்திலிருந்து பேருந்து வசதி உண்டு.

68 பெ. திரு. 9. 3:2

கின்றேன்' என்று இவனுக்குக் கண்ணழிவு சொல்ல வொண்ணாததேசம்'' என்பது. இதனை விவரிப்பேன் தலைவியை விட்டுப் பிரிந்துசெல்லும் தலைவன் நல்வாழ்க்கைக்கு உறுப்பாக வுள்ள அரும்பெரும் பொருள்கள் திரட்டிக் கொணர்வதற்காகத் தொலை நாடு செல்ல அவசியமில்லாதபடி திருப்புல்லணையில் மனை வாயிலிலே மணியும் முத்தும் மலிந்து கிடக்கின்றன வாதலின், அங்குச் சென்று கூடினோமாயின் பொருள்வயிற் பிரிவும் நேரமாட்டாது என்பது குறிப்பு. மேலும் ஆழ்வார், 'பொங்கு முந்நீர்க்கரைக்கே மணியுந்து புல்லாணி' (4) என்றும் 'புணரியோதம் பணிலம் மணியுந்து புல்லாணி' (5) என்றும் 'புரவி என்னப் புதம் செய்து [69] வந்துந்து புல்லாணி' (7) என்றும் இங்குள்ள கடலை வருணித்திருப்பதைக் கண்டு மகிழலாம் இந்த ஊர்க்கடற்கரைக்கு '**பொன்னங்கழிகானல்**' எனத் திருநாமம், இட்டு மகிழ்கின்றார். ஆழ்வார் வானமாமலையில் '**சேற்றுத்தாமரை** என்ற திருநாமத்துடன் (திருவாய். 5. 7: 1) தடாகமும் '**தேனமாம் பொழில்**' என்ற திருநாமத்துடன் தோப்பும் (5. 7: 6), திருமோகூரில் '**தாளதாமரை**' என்ற திருநாமத்துடன் தடாகமும் நம்மாழ்வார் திருவாக்கில் வந்துள்ளமை ஈண்டு நினைந்து மகிழ்வதற்குரியவை.

இங்குள்ள கடற்கரைச் சோலைகள் ஆழ்வார் திருவாக்கில் மிக அற்புதமாக இடம் பெற்றுள்ளன.

இலங்கு முத்தும் பவளக்
கொழுந்தும் எழில் தாமரை
புலங்கள் முற்றும் பொழில் சூழ்ந்து
அழகாய புல்லாணி [70]

69. புரவி - குதிரை; புதம்செய்தல் - தாவிப்பாய்தல்.

70. பெரி. திரு. 9. 3: 10

என்பது அவர் காட்டும் சோலை. 'ஒளிமல்குகின்ற முத்துகளையும், அழகிய பவளத்துளிர்களையும் மலர்ந்த தாமரைப் பொய்கைகளையும் உடைத்தான சோலைகளால் சூழப்பட்டது திருப்புல்லாணி' என்கின்றார். 'தாதுமல்கு தடம்சூழ் பொழில்' (3) 'போது நாளும் கமழ் பொழில் சூழ்ந்த, புல்லாணி' (3), 'செழுந்தடம் பூஞ்சோலை சூழ் புல்லாணி' (9. 4: 6), 'பூஞ்செருந்தி பொன் சொரியும். புல்லாணி' (8), 'போதலரும் புன்னைசூழ் புல்லாணி' (9) என்ற அப்பெருமானின் வாக்குகளை எண்ணி மகிழ்கின்றோம். மேலும்,

> கள்ளவி ழும்மலர்க் காவியும்
> தூமடற் கைதையும்
> புள்ளும் அள்ளற் பழனங்களும்
> சூழ்ந்த புல்லாணி [71]
>
> [கள்-மது; அவிழும்-ஒழுகும்; காவி-செங்கழுநீர்ப் பூ; தூமடல் - வெளுத்த மடல்; கைதை - தாழை; அள்ளல் - சேறு; பழனம் - வயல்]

என்று அந்தத் திவ்விய தேசத்தின் சூழலை நெய்தல் நிலக் கருப்பொருளைக் கொண்டே வருணித்திருக்கும் எழில் நலம் நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகின்றது. ஆயினும், இன்று அச்சூழ் நிலையை நாம் காணமுடிகின்ற தில்லை!

**புதிய இலக்கிய உத்திகள்:** சங்க இலக்கியக் காலத்திற்குப் பிறகு பக்தி இயக்கக் காலத்தில் யாப்புமுறையிலும் விரைப்பான நடைப் போக்கிலும் முற்றிலும் மாறியன. கற்றவர்க்கு உரியனவாகப் பாடப் பெற்ற பாடல்களின் போக்கு மாறி கற்றவர்களோடு மற்றவர்களும் கூடிக்களிப்புடன் பாடுவதற்கு ஏற்றவாறு சந்தக் கொழிப்பும் இசை ஏற்றமும் கொண்ட பாசுரங்கள் பெருகின;

---

71. பெரி. திரு. 9. 3: 6

தமிழ்நடையிலும் நெகிழ்ச்சி அமைந்தது. மக்கள் கூட்டம் கூட்டமாகப் பாடித் திருக்கோயிலைச் சுற்றி வந்து வழிபடும் முறைக்கு ஏற்றவாறு இசைஇனிமையும் நடை எளிமையும் கூடினமையால் தமிழ் இலக்கியத்தில் ஒருவித புத்துணர்ச்சி பிறந்தது. புதியஇலக்கிய உத்திகளும் கையாளப் பெற்றதால் சமுதாயத்தில் பெரும்பாலோர் இலக்கியத்தைத் துய்க்கமுடிந்தது. பாமர மக்கள் மனத்திலும் இலக்கிய வானம் கவிந்து அவர்களிடமும் முருகுணர்ச்சி எழுவதற்குக் காரணமாயிற்று.

'பண்ஆர்தமிழ்' 72 'செயிரில் சொல் இசைமாலை' 73 இருந்தமிழ் நன்மாலை இணையடிக்கே சொன்னேன்' 74 'கலிகன்றி செஞ்சொலால் எடுத்த தெய்வநன்மாலை' 75 என்ற ஆழ்வார் பெருமக்களின் வாக்குகளாலேயே இப்பாசுரங்கள் இசையுடன் பாடப்பெறுபவை என்பதை வலியுறுத்தும். திருவாய்மொழி முழுமைக்கும் பெரிய திருமொழியில் கிட்டத்தட்ட முக்கால் பங்கு அளவிற்கும் பண் – தாளக்குறிப்புகள் அமைந்திருத்தல் கவனித்தற்குரியது.

பண்ணார் பாடல் இன்கவிகள்
    யானாய்த் தன்னைத் தான்பாடி
தென்னா என்னும் என்அம்மா
    திருமா லிருஞ்சோ லையானே[76]

என்ற நம்மாழ்வாரின் திருவாக்கு முத்தாய்ப்புவைத்தமாதிரி ஆழ்வார்கள் இசையோடு பாடினர் என்பதைத் தெளிவாக்கு

72. திருவாய் 9. 8: 11

73. ஷை 3. 2: 11

74. இரண். திருவந் 85

75. பெரி. திரு. 1. 1: 10

76. திருவாய் 10. 7: 5

கின்றது. இனி புதிய சில இலக்கிய உத்தி முறைகளைக் காண்போம்.

**தடம்பொங்கத்தம் பொங்கோ:** இராமபிரானது வெற்றியைத் தோற்ற இளக்கதர்கள் வாயிலே வைத்துப் பேசுவது. இப்படித் தம் வாயாலே பேசுவது தகுமா என்பதை ஆராயாமலேயே ஏதேனும் ஒருபடியாலே (முறையாலே) பெருமாளுடைய வெற்றியைப் பேசுகிறார்கள் என்னும் இவ்வளவே கொண்டு உகந்து அவர்களின் நிலைமையைத் தாம் ஏறிட்டுக் கொண்டு ஆழ்வாரே பேசுகின்றார். ஒவ்வொரு பாசுரமும் தடம்பெ ங்கத்தம் பொங்கோ என்று முடிகின்றது. இத்தொடர்மொழி இந்த ஆழ்வாரின் அருளிச்செயல் தவிர வேறு எவ்விடத்தும் பிரயோகிக்கப்பட்டிருப்பதாகப் புலப்படவில்லை "தோற்றவர்கள் தோல்வியாலே படையடிக்க ஆடுவதொரு கூத்துண்டு; அந்த சப்தாநுகாரம்" என்றிவ்வளவே பெரியவாச்சான் பிள்ளையும் அருளிச் செய்துள்ளார்.

இரக்கமின்றி எங்கோன் செய்த தீமை
இம்மையே எமக்கு எய்திற்றுக் காணீர்;
பகக்கயாம் இன்று உரைத்துஎன்? இராவணன்
பட்டனன்;இனி யாவர்க்கு உரைக்கோம்?
குரக்கு நாயகர் காள்!இளங் கோவே!
கோல வல்வில் இராம பிரானே!
அரக்கர் ஆட அழைப்பா ரில்லை நாங்கள்
அஞ்சி னோம்தடம் பொங்கத்தம் பொங்கோ[77]

வானர வீரர்களையும் இளையபெருமாளையும் இராமபிரானையும் விளித்து இலங்கையரக்கர்கள் தங்கள் தோல்வியும் இவர்களின் வெற்றியும் தோற்றச் சொல்லிக் கூத்தாடுகின்றனர்.

**அரக்கர் ஆட அழைப்பாரில்லை:** இத்தொடருக்கு நஞ்சீயர் நம் பிள்ளைக்கு "இராக்கதரில் இனி ஆடுபோலக் கூப்பிடக்

77. பெரி. திரு. 10. 2: 1

கடவாரில்லை'' என்று பொருள் பணிக்க, அதனை நம்பிள்ளை கேட்டு, ஆடு என்று வெற்றிக்கும் வாசகமாதலால் இந்த இராக்கதர் சாதியில் வெற்றி சொல்வாரில்லை; அதாவது, 'தோற்றோம் தோற்றோம்' என்று தோல்வியைச் சொல்ல வல்லார் உளரே யொழிய 'வென்றோம்' என்று வெற்றியைச் சொல்லிக் கொள்ள வல்லார் இல்லை என்று பொருள் கூறலாகாதோ'' என்ன, நஞ்சீயரும் இதைக்கேட்டு அருளி ''இதுவே பொருந்தும் பொருள்; இப்படியே சொல்லிக் கொள்ள அமையும்' என்று நியமித்தருளினாராம்.

**குழமணிதூரம்:** 'தடம்பொங்கத்தம் பொங்கோ' என்ற திருமொழியைப் போலவே இத்திருமொழியும் இலங்கை யரக்கர்களின் பாசுரமாகச் செல்லுகின்றது. தோற்றவர்கள் தங்கள் தோல்விக்கு ஈடாக ஆடுவதொரு கூத்துக்குக் 'குழமணிதூரம்' என்று பெயர். அக்கூத்தையாடுகின்ற அரக்கர்களின் நிலைமையிலேயே நின்று ஆழ்வார் இராமபிரானின் வெற்றியைப் பேசி அநுபவிக்கின்றார் ஆழ்வார்.

ஏத்து கின்றோம் நாத்தழும்ப
இராமன் திருநாமம்;
சோத்தம் நம்பி சுக்கிரீவா!
உம்மைத் தொழுகின்றோம்
வார்த்தை பேசீர் எம்மை உங்கள்
வானரம் சொல்லாமே;
கூத்தர்போல ஆடு கின்றோம்
குழமணி தூரமே.[78]

''[சோத்தம் – தாழ்ச்சி தோற்றச் சொல்லும் ஒரு சப்த விசேஷம்; 'ஸ்தோத்திரம்' என்னும் வடசொல் 'சோத்தம்' எனத் திரிந்து கிடக்கின்றது என்பாரும் உளர்]

78. பெரி. திரு. 10. 3: 1

"[இராமன் ஆட்சி புரிந்த காலத்தில் உலகமே இராம மயமாக ஆய்விட்டது] என்றாப்போலே இப்போது இலங்கையும் இராம நாம மயமாக ஆய்விடுகின்றது. நாக்குத் தடிப் பேறும்படி இராம நாமங்களையே சொல்லிக் கூத்தாடுகின்றோம்". என்கின்றார்கள்.

**அம்மம் உண்ண அழைத்தல்:** இதையும் ஓர் இலக்கிய உத்தியாகக் கொண்டார் இந்த ஆழ்வார். பெரியாழ்வார்தாம் இத்தகைய உத்திகளைக் கையாண்டு பிற்காலப் பிள்ளைத் தமிழ் இலக்கியத்திற்கு வித்திட்டார். ஆயினும் இது பிள்ளைத் தமிழ் இலக்கிய உறுப்பாகச் சேர்த்துக் கொள்ளப்பெறவில்லை. கண்ணபிரான் விளையாட்டில் விருப்பத்தாலே முலையுண் பதையும் மறந்து திரிகின்றான். யசோதைப் பிராட்டி அப் பிரானை விளித்து முலையுண்ணாமையை அவனுக்கு அறிவித்துத் தன்னிடம் முலையுண்ண வருமாறு நிர்பந்தித்த படியை ஆழ்வார் தாமும் அநுபவிக்க விரும்பித் தம்மை அவ்ய சோதைப் பிராட்டியாகப் பாவித்துக்கொண்டு அவனை அம்மம் உண்ணுமாறு வேண்டுவதாக நடைபெறுகின்றது இத்திருமொழி. பெரியாழ்வார் திருமொழியில்,[80]

அரவு அணையாய்! ஆயர் ஏறே!
அம்மம் உண்ணத் துயிலெழாயே

என்று தொடங்கும் திருமொழியோடு ஒக்கும் இத்திருமொழி. உச்சிப்போதில் முலையுண்ண அழைத்தது அத்திருமொழி; அந்தியம் போதில் முலையுண்ண அழைக்கின்றது இத்திருமொழி.

சந்தமலர்க் குழல்தாழ தான் உகந்து
ஓடி தனியே
வந்துஎன் முலைத்தடம்தன்னை வாங்கிநின்
வாயில் மடுத்து,

79. பெ. திரு. 10. 4.

80. பெரியாழ். திரு. 2. 2 இங்கு அம்மம் தர மறுத்தற்கும் ஒரு திருமொழி உண்டு (3.1).

நந்தன் பெறப்பெற்ற நம்பீ! நான்
உகந்துண்ணும் அமுதே!
எந்தை பெருமானே! உண்ணாய்;என்
அம்மம் சேமம் உண்ணாயே.[81]

'அம்மம்' என்பது கண்ணபிரானுடைய குழந்தைப் பருவத்திற்குத் தகுதியாக யசோதை சொல்வதொரு வார்த்தையாகும். 'புவ்வா' என்றும், 'பாப்பம்' என்றும் குழந்தைகட்குச் சொல்லும் சொற்களைப்போலே இதுவும் ஒரு சொல்.

**நான் உகந்து உண்ணும் அமுதே:** தேவர்கள் உண்ணும் உப்புச் சாறு போலன்று யசோதைப்பிராட்டி உண்ணும் அமுதம் அமுதிலும் ஆற்ற வினிய அமுத மன்றோ இது? இப்படிப்பட்ட அமுதுக்கும் அமுதூட்டப் பாரித்து அழைக்கின்றாள்.

**சப்பாணி கொட்டல்:** இதுவும் ஒரு வித இலக்கிய உத்தியாக அமைந்து விடுகின்றது இந்த ஆழ்வார் பாசுரங்களில். 'குழந்தைகளின் விளையாடல்களில் 'சப்பாணி கொட்டுதல்' என்பது ஒரு விளையாட்டு; அதாவது ஒரு கையோடு மற்றொரு கையைச் சேர்த்துக் கொட்டுதல். இந்த விளையாட்டை அக்காலத்தில் யசோதைப் பிராட்டி பிரார்த்தித்து அநுபவித்ததைப் பிற்காலத்தில் பெரியாழ்வார்,

மாணிக்கக்கிண்கிணி ஆர்ப்ப, மருங்கின்மேல்
ஆணிப்பொன் னாற்செய்த ஆய்பொன் உடைமணி
பேணி பவளவாய் முத்திலங்க, பண்டு
காணி கொண்ட கைகளால் சப்பாணி
கருங்குழல் குட்டனே சப்பாணி [82]

என்று தொடங்கும் பாசுரத்தைக் கொண்ட திருமொழியில் அநுபவித்தார். அது போலவே இந்த ஆழ்வாரும் அதே விளையாட்டை யசோதைப் பிராட்டிநிலையில் இருந்து கொண்டு அநுபவிக்கின்றார். பாசுரமும் யசோதைப் பிராட்டியின் பேச்சாக

81. பெ திரு. 10. 4: 1

82. பெரியாழ். திரு. 1. 6: 1.

நடைபெறுகின்றது. 'சப்பாணிகொட்டுதல்' என்னும் உறுப்பு பிற்காலப் பிள்ளைத்தமிழின் பத்துறுப்புகளில் ஒன்றாகி விடுகின்றது.

பூங்கோதை ஆய்ச்சி கடைவெண்ணெய் புக்குண்ண
ஆங்கவன் ஆர்த்துப் புடைக்க, புடைப்புண்டு
ஏங்கி இருந்து சிணுங்கி விளையாடும்
ஓங்கு ஓத வண்ணனே; சப்பாணி;
ஒளிமணி வண்ணனே! சப்பாணி.[83]

[பூங்கோதை ஆய்ச்சி—தன்னைப் படர்க்கையாகச் சொல்லிக்கொண்ட படி; ஆழ்வார் யசோதை பேசும் பாசுரமாக அருளிச் செய்தாலும் தரமான நன்மையும் இடைஇடையே தலைக்காட்டிக் அதனால் யசோதையைப் படர்க்கையாகக் குறிக்ன்றார் என்றும் கொள்ளலாம்]

**நாட்டுப்புற இலக்கியக் கூறுகள்:** பக்தி இலக்கியக் காலத்தில் தோன்றிய ஆழ்வார்களின் பாசுரங்கள் யாவும் பொதுவிருப்பானவை. நாட்டு மக்கள் யாவரும் இந்த இயக்கத்தில் பங்கு கொண்டமையால், ஆழ்வார்கள் நாட்டுப்புறப் பாடல்களின் பாணியைப் பின்பற்றிப் பாசுரங்களை அமைத்துப் பாடியுள்ளனர். மணிவாசகப் பெருமான்தான் நாட்டுப்புற இலக்கியக் கூறுளைப் பெருமளவில் அமைத்துப்பாடி வெற்றிகண்டவர். பாடிய வாய் தேனூறும் திருவாசகத்தில் இந்த அமைப்பை வெற்றியுடன் கையாண்டிருப்பதைக் காணலாம்.

திருமங்கையாழ்வார் புலமை நிரம்பிய பெருந்தகை; **'நாலுகவிப் பெருமாள்'** என்று வழங்கப்பெற்றவர். ஆகவே அவர் நாட்டுப்புற இலக்கியக் கூறுகளையும் அமைத்துச் சிலதிகங்களை அருளியுள்ளார். சாழல் என்பது மகளிர் விளையாடும் விளையாட்டுகளில் ஒன்று. எம்பெருமானின் எளிமைக் குணத்தை

83. பெரி. திரு. 10.5: 1

யும் மேன்மைக் குணத்தையும் அநுபவிக்கும் பாங்கில் சாழல் விளையாட்டுப் பாசுரம் அமைந்துள்ளது. இரண்டு பிராட்டிமார் நிலையை அடைகின்றார் ஆழ்வார். ஏசிப் பேசுகின்ற ஒருத்தி வாயால் எளிமைக் குணத்தையும் ஏத்திப் பேசுகின்ற மற்றொருத்தி வாயால் மேன்மைக் குணத்தையும் ஒரேகாலத்தில் அநுபவிக்கும் பாங்கில் பாசுரங்கள் அமைகின்றன. அவற்றுள் ஒரு பாசுரம் இது.

ஆழ்கடல் சூழ் வையகத்தார்
  ஏசப்போய், ஆய்ப்பாடித்
தாழ்குழலார் வைத்த
  தயிர்உண்டான் காண்ஏடீ!
தாழ்குழார் வைத்த
  தயிர்உண்ட பொன்வயிறுஇவ்
ஏழ்உலகு உண்டும்
  இடம்உடைத்தால் சாழலே.[84]

இதில் ஒருத்தி: "தோழீ! நீ உகந்து கொண்டாடும் பெருமான் யாதொன்றிலும் பற்றுக்கோடு இல்லாதவனாக இருந்தாலன்றோ சிறப்பு? அவனுடைய வரலாறுகளை ஆராய்ந்தால் அவன் நம்மைப் போலவே பிறர் பொருள்களில் விருப்பப்படுகிறவனாகக் காணப்பெறுகின்றானே யல்லது ஆசையற்றவனாகக் காணப்பெறவில்லையே. ஆய்ப்பாடியில் கண்ணனாகப் பிறந்து கள்ளவழியால் தயிர் வெண்ணெய் பால் முதலியவற்றை வாரியுண்டான் எனத் தெரிய வருவதால் இங்ஙனம் பிறர் பொருள்களில் ஆசையுள்ளவன் பரமபுருஷனாக இருக்கத் தகுமோ?" என்கின்றாள்.

மற்றொருத்தி: "தோழீ! திருவாய்ப்பாடியில் இடைச்சியர் சேமித்து வைத்திருந்த தயிரை அமுது செய்தான் என்பது உண்மையே; நம்முடைய வயிறுபோலே ஏதேனும் சிலவற்றை உண்டு நிறைந்து விடுகின்ற திருவயிறோ அவனுடையது?

84. பெரி. திரு. 10. 5: 3

காரேழ்கடலேழ் மலையேழ் உலகுண்டும் ஆரா வயிற்றனாயிருப் பவன்காண். ஏழுஉலகங்களையும் வாரித் திருவயிற்றினுள் இட்டாலும் இன்னமும் இப்படிப் பதினாயிரம் உலகங்களை இட்டாலும் நிறைய மாட்டாமல் விசாலமாகவே இடமுடைத் தாயிரா நின்றது காண். ஆகையால் நம்மைப்போல வயிற்றை நிரப்ப வேண்டும் என்கின்ற எண்ணத்தினால் தயிர் முதலியவற்றை அவன் வாரியுண்பவனாகில் அவனுடைய பற்றின்மைக்குக் குறை உண்டாகும்; அடியவர்களின் கைதொட்ட பொருளாலல் லாது தரிக்கமாட்டாத பெருங்குணத்தை வெளியிடவேண்டித் தாழ்குழலார் வைத்த தயிரை உண்டானாகையாலே நாம் யாவரும் போற்றந்தக்க எளிமை காண்" என்று மறுமாற்றம் உரைக்கின்றான்.

பறவைமுதலியவற்றை அழைத்தல்: செம்போத்து, காக்கை, குயில், கிளி முதலிய பறவைகள் தங்கள் வழக்கப்படி ஒலிசெய்து கொண்டிருக்கையில் அவற்றையழைத்து 'எம்பெருமான் இங்கே வந்து சேரும்படியாகக் கூவுக' என்று வேண்டிக் கொள்ளுகின்ற பாசுரமாக அமைகின்றது.[75] இது மகள் பாசுரமாக நடைபெறு கின்றது. 'குயிலே கூவாய்' என்று பாடுகின்றாள் பரகால நாயகி.

கூவாய், பூங்குயிலே!
குளிர்மாரி தடுத்துகந்த
மாவாய்க் கீண்ட மணிவண்ணனைவர
கூவாய் பூங்குயிலே![76]

இது குயிலை அழைத்துப்பாடும் பாட்டுகளில் ஒன்று.

வீட்டில் பல்லி ஒரு திசையில் ஒலித்தால் யாரோ விருந்தினர் வருவார் என்று நம்பும் பழைய நம்பிக்கை ஒன்றுண்டு. இதனை யொட்டி, 'திருமால் வருமாறு ஒலிசெய், பல்லியே!' என்று பாடு கின்றார் ஆழ்வார் நாயகி.

75. பெரி. திரு. 10. 10.

76. ஷை 10. 10: 3

கொட்டாய் பல்லிக்குட்டி!
குடம்ஆடி உலகளந்த
மட்டார் பூங்குழல் மாதவ னைவர
கொட்டாய் பல்லிக்குட்டி! [77]

என்பது பல்லிப்பாசுரம். இங்ஙனமே செம்போத்து, காக்கைப் பிள்ளை, பைங்கிளி, கோழி என்று புள்ளினத்தை அழைத்துப் பாடும் பாசுரங்களும் உள்ளன.

**பழமொழிகள்:** ஒருநாட்டின் பண்பாட்டை உணர்வதற்கு அந்நாட்டு மொழியுள் வழங்கும் பழமொழிகள் பெரிதும் பயன் படுவன. பழமொழிகளே அந்நாட்டு மக்கள்பால் அடிபட்டு வரும் மன இயல்புகளை எடுத்துக்காட்டுவன. பழமொழிகள் பயின்று வரச் செய்யுள்கள் இயற்றும் தன்மை பேரறிஞர் நூல்களில் காணப் படும். நாட்டுமக்களிடம் பயின்றுவரும் சில பழமொழிகளைப் பெரும் புலமை வாய்ந்த பரகாலரின் பாசுரங்களிலும் காணலாம். சிலவற்றைக் காட்டுவேன்

கார்ஆர் புரவிஏழ் பூண்ட தனிஆழி,
தேர் ஆர் நிறைகதிரோன் மண்டலத்தைக் கீண்டுபுக்கு
ஆரா அமுதம் அங்குஎய்தி அதில்நின்றும்
வாராது ஒழிவதுஒன்று உண்டே? அது நிற்க
ஓர்ஆர் முயல்விட்டுக் காக்கைபின் போவதோ? [78]

என்ற பாசுரப் பகுதியில் 'முயலை விட்டுக் காக்கைப் பின் போவாருண்டோ?' என்ற பழமொழியைக் காணலாம். நிலத்தில் ஓடுவது முயல்; மரங்களின்மீது பறந்து திரிவது காக்கை. மாமிசம் வேண்டுவோன் கைப்பட்ட முயலை விட்டுக் கைப்பட அரியதும் கைப்பட்டாலும் பயன்படாததுமான காக்கையைப் பின்பற்றித் திரிதல் அறிவற்ற செயல். அப்படியே எளிதாயும் சுவை மிக்கதாயு முள்ள அர்ச்சாவதார அநுபவத்தை விட்டுக் கிட்டுதற்கு அரிதாயும் சுவையற்றதாயுமுள்ள மோட்ச அநு

77. பெரி. திரு. 10. 10: 4

78. சிறிய திருமடல் – கண்ணி 6 - 8.

பவத்தைப் பெற விரும்புதலும் பேதைமையின் பணியாகும் என்று விளக்குவர் பரகாலர்.

இன்னொரு பழமொழியைக் காண்போம். 'தாய் இருக்க மணை நீராட்டுதல்' என்பது பழமொழி. முழுமுதலாம் முதற் கடவுள் திருமால் இருக்கப் பிறதெய்வ வழிபாடு செய்யும் உலகினர் இயல்பை இப்பழமொழியால் விளக்குவர் திருமாங்கையாழ்வார்.

பேய்இருக்கும் நெடுவெள்ளம் பெருவிருப்பின்
மீதுஓடிப் பெருகு காலம்
தாய்இருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்றுஇருத்தி உய்யக் கொண்டான்
போய்இருக்க மற்றுஇங்கோர் புதுத் தெய்வம்
கொண்டாடும் தொண்டீர்! பெற்ற
தாய்இருக்க மணைவெந்நீர் ஆட்டுதிரோ
மாட்டாத தகவு அற்றீரே[79]

[நெடுவள்ளம்-பிரளயம்; போயிருக்க-வெறுக்கும் படியாக; மாட்டாத-செய்யமாட்டாத; தகவு-இரக்கம்]

என்ற பாசுரத்தில் இவ்விளக்கத்தைக் காணலாம். ஈண்டுத் தாய் என்பது திருமாலுக்கும், மணை என்பது அசேதனப் பொருளுக்கும் உவமைகளாக வந்தன. மகளிர் கருவுயிர்த்தவுடன் தாயையும் சேயையும் நீராட்டுதல் மலை நாட்டு வழக்கமாக முற்காலத்தில் இருந்தது; கருவுயிர்த்தவுடன் தாயை நீராட்டுவது பலவித இடையூறுகட்குக் காரணமாவதால் அத்தாய்க்குப் பதிலாக ஒரு மணைக்கட்டையை நீராட்டுவது இடைக்காலத்து வழக்கமாக இற்றைக்கும் இருந்து வருகின்றது. அதனைத் திருவுள்ளம்பற்றி அருளிச் செய்தது இது. தேவதாந்தரத்தை

79. பெரி. திரு. 11. 6: 6

வழிபாடு செய்வதற்கும் மணை நீராட்டுவதற்கும் யாதொரு வேறுபாடும் இல்லை; 'இதுதான் அது, அதுதான் இது' என்ற இரண்டிற்கு முள்ளவேற்றுமையின்மையைக் காட்டின படியாகும். நம்மாழ்வாரும் இதே கருத்தைத் தம் திருவாசிரியத்தில் ''ஈன்றோளிருக்க மணை நீராட்டி''[80] என்று அருளிச் செய்துள்ளார். திருத்தாயார் பாசுரமாகச் செல்லும் ஒரு திருமொழியில்[81] பாசுரந்தோறும் ஒவ்வொரு பழமொழியை எடுத்துப் பேசுகின்றார் பரகாலர். இவற்றுள் ஒரு பாடல்:

புள்ளுரு வாகி நள்ளிருள் வந்த
பூதனை மாள இலங்கை
ஒள்ளெரி மண்டி உண்ணப் பணித்த
ஊக்க மதனை நினைந்தோர்
கள்ளவிழ் கோதை காதலும் எங்கள்
காரிகை மாதர் கருத்தும்
பிள்ளைதன் கையில் கிண்ணமே ஏக்கப்
பேசுவது? எந்தை பிரானே,[82]

இப்பாசுரத்தில் ''பிள்ளைகையில் கிண்ணம் மெள்ளவே கொள்ளலாம்'' என்ற பழமொழி அமைந்துள்ளது. ''மிகவும் வலிமையுடையவர்கள் பொற்கிண்ணமொன்றை கவர்ந்தால் அதைத் திரும்பவும் கைப்பற்றுவதற்கு பெருமுயற்சி எடுக்க வேண்டும்; அங்ஙனமன்றிச் சிறுபிள்ளை கவர்ந்த கிண்ணத்தைத் திரும்பப் பெறவேண்டுமானால் அதற்காகச் சிறு முயற்சியையும் மேற்கொள்ள வேண்டியதில்லை. நினைத்தபோது எளிதாகப் பெற்றுக் கொள்ளலாம் என்று அறியிருக்கும்படியாக இருக்குமேயன்றி

80. திருவாசி–6

81 பெரி. திரு. – 10. 9.

82. பெரி. திரு. 10. 9: 1

பதறவேண்டிய நிலை ஏற்படாது. அதுபோல இப்பரகால நாயகி விஷயத்தில் நீ நினைத்திருக்கின்றாய் போலும்; இவளை அவ் விதமாக அலட்சியம் செய்திருக்கின்றாய்'' என்கின்றாள் திருத் தாயார்.

இதனை மேலும் விளக்குவேன். "எங்கள் கள்ளவிழ் கோதையின் காதலையும் அலட்சியம் செய்கின்றாய்; காரிகை மாதர்கருத்தையும் அலட்சியம் செய்கின்றாய். இவளுடைய கரை புரண்ட காதலை நோக்கி நீ பதறியோடிவந்து இவளைக் கைப் பற்ற வேண்டும்; அது செய்கின்றிலை. "வகுத்த விஷயத்தில் காதல் கொண்ட இது நன்றே'' என்று உகந்திடாமல் இதனைப் பழிக்கின்ற ஊரவர் பழிச்சொற்களை நோக்கியாகிலும் பதறியோடி வந்து இவளைக் கைப்பற்றிப் பழிப்பவர்களின் முகத்தைப் பங்கம் செய்திடவேண்டும்; அதுவும் செய்கின்றிலை. இரண்டையும் அலட்சியம் செய்திருக்கின்றாய்'' என்கின்றாள்.

இப்படி இவளை அலட்சியம் செய்திருப்பதற்குக் காரணம் யாது? "நல்லவெண்தோழி நாகணை மிசை நம்பார், செல்வர் பெரியர், சிறு மானிடவர் நாம் செய்வதென்'' என்னும்படியான உன்னுடைய பெருமைகளைப் பாராட்டியோ இவளை இங்ஙனம் அலட்சியம் செய்திருப்பது'' என்கின்றாள். "பூதனையை முலை யுண்டு முடித்த பெருமிடுக்குடைய நமக்கு இவள் ஈடோ? இரா வணனை முடித்த பெருவீரனான எனக்கு இவள் ஏற்றவளாக இருப்பாளா? என்று திருவுள்ளம் பற்றியிருக்கின்றாய் போலும்; கிருட்டிணாவதாரத்திலும் இராமாவதாரத்திலும் காட்டின தீரச் செயல்களை நினைத்துச் செருக்கியிருக்கின்றாய் போலும்!'' என்கின்றாள்.

**படிமங்கள்:** பாசுரங்களில் காணப்பெறும் படிமங்கள் (Imagery) பாட்டின்பத்தை மிகுவிக்கின்றன. படிமம் என்பது என்ன? "படிமம் என்பது சொற்களால் கவிஞன் புலன்கட்குக் கவர்ச்சியுடையதாகச் செய்யும் ஒருவகை உத்தியாகும். புலன்

களின்மூலம் படிப்போரின் எழுச்சிகளையும் அறிவினையும் கிளர்ந்தெழச் செய்தல் இயலும்; இதனைக் கருதியே கவிதையில் படிமம் கையாளப் பெறுகின்றது'' என்று கூறுவர் பர்ட்டன் என்ற ஆங்கிலத்திறனாய்வாளர் கவிதைத் திறனாய்வு என்ற தமது நூலில். மேலும் அவர் கூறுவார்: ''புலன்கட்கு முறையீடு செய்வதற்கேற்ப படிமங்கள் வகை செய்யப்பெறுகின்றன; செவிப்புலப் படிமங்கள், கட்புலப் படிமங்கள், சுவைப்புலப் படிமங்கள் (Gustatory images), நாற்றப்புலப் படிமங்கள் (It factory images), நொப்புலப் படிமங்கள் (Tactual images), இயக்கப்புலப் படிமங்கள் (Kinesthetic images), மரபு வழிப் படிமங்கள் என்பவையாகும்'' என்று. எண்ணத்திற்கும் புலன் காட்சிக்கும் குறியீடுகளாக இருப்பவை சொற்களாகும் என்பதை நாம் அறிவோம். ஒரு கவிதையைப் படிக்கும்போது அக் கவிதையிலுள்ள சொற்கள் அல்லது சொற்கோவைகள் சில பல படிமங்களை நம் மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்து கின்றன. புலன்களின் மட்டத்தில் தூண்டல்கள் (Stimuli) செய்வதைப்போலவே படிமங்களும் கருத்து நிலைச் (Ideational level) செயல்களில் நம் புலன்களைத் தூண்டி நம் மிடம் கவிதையநுபவத்தை எழுப்பிக் கவிதையைத் துய்த்து மகிழ்வதற்குத் துணையாக அமைகின்றன. மேலும் சில சொற்கள் நம்மிடம் 'கட்டுண்ட படிமங்களையும் (Tied images), விடுதலைப் படிமங்களையும் (Free images) எழுப்பி விடுகின்றன. இவையும் கவிதையை நுகர்வதற்கு இன்றியமையாத கூறுகளாக (*Sine quo non*) அமைகின்றன.

திருமங்கையாழ்வார் பாசுரங்களில் இத்தகைய படிமங்கள் அமைந்திருப்பதால் பாசுரங்களைப் பயில்வோரின் மனத்தில் இவை தோன்றி கவிதை யநுபவத்தைக் கிளர்ந்தெழச் செய் கின்றன. படிப்போரைக் பக்திக் கொடுமுடிக்கும் கொண்டு செலுத்துகின்றன. எடுத்துக் காட்டுகளாக சிலவற்றைக் காட்டுவேன். 'பார் ஆயது உண்டு உமிழ்ந்த பவளத்தூண்' (பெரி. திரு 2. 5: 1), 'களங்கனி முறுவல் காரிகை' (ஷை. 2. 7:7),

'கான் ஆட, மஞ்ஞைக் கணம் ஆட, மாடே கயல் ஆடு கால் நீர்ப் பழனம்' (ஷ 3 2: 1),

'பட்டு அரவுஏர் அகல்அல்குல் பவளச் செவ்வாய்
பணை நெடுந்தோள் பிணைநெடுங்கண் பால்ஆம் இன்சொல்
மட்டுஅவிழும் குழலி' (ஷ 3. 4: 8)

'உம்பரும்இவ் ஏழ்உலகும் ஏழ்கடலும் உண்ட பிரான்'' (ஷ 3. 10: 3), 'கன்றதனால் விளவு எறிந்து கனிஉதிர்த்த காளை, காமருசீர் முகில்வண்ணன்' (ஷ 3. 10: 8), 'உளங் கனிந்திருக்கும் அடியவர்தங்கள், உள்ளத்து ஊறியதேன்' (ஷ 4. 3: 9), 'கவளயானை கொம்பு ஒசித்த கண்ணன்' (ஷ 4. 8: 1), 'ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த நாதன்' (ஷ 4. 8: 6), 'பெண் ஆகி இன் அமுதம் வஞ்சித்தானை' (ஷ 2. 5: 8), 'கடிகைத் தடங்குன்றின் மிசைஇருந்த அக்காரக் கனியை' (ஷ 8. 9: 4), 'முன்னம் குறள் உருவாய் மூவடிமண் கொண்டளந்த மன்னன்' (ஷ 9. 4: 2) என்பன போன்ற சொற்கோவைகள் எழுப்பும் படிமங்களைக் கண்டு மகிழலாம். இனி, சிறப்பாக ஒவ்வொருபுலனையும் பொதுவாகப் பல புலன்களையும் கவரும் படிமங்களைக் கண்டு மகிழ்வோம்.

கட்புலப் படிமங்கள்: பல்வேறு படிமங்களிடையேயும் கட்புலனைக் கவரும் படிமங்களே அதிகமாக உள்ளன. இவையே படிப்போரின் மனத்தில் நிலையான பதிவினை விளைவிக்கின்றன. கட்புல நரம்பு ஏனைய புல நரம்புகளைவிடத் தடித்திருப்பதே இதற்குக் காரணம் எனக் கருதலாம். இதன் காரணமாகவே இக்காலக் கல்வியில் கட்புல செவிப்புலத் துணைக் கருவிகள் அதிகமாகப் பயன்படுத்தப் பெறுகின்றன. பள்ளிகளில் சுற்றுலா அமைத்து மாணாக்கர்களைப் பல்வேறு இடங்கட்கு இட்டுச் சென்று பல்வேறு காட்சிகளை நேரில் காணச் செய்கின்றனர். திருமங்கை மன்னன் பாசுரங்களில் இத்தகைய ஒரு படிமத்தைக் காட்டுவேன்.

பவ்வநீர் உடை ஆடை ஆகச் சுற்றி
பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா
செவ்விமர் திரம்எட்டும் தோளா அண்டம்
திருமுடியா நின்றான்பால் செல்ல கிற்பீர்[83]

எம்பெருமான் உலக உருவமாயிருக்கும் நிலையைத் திருமங்கையாழ்வார் அநுபவித்து மகிழ்கின்றார் இப் பாசுரத்தில். எங்கும் பரவியுள்ள (விபுவான) எம்பெருமானுக்குக் கடல் நீர் ஆடையாகின்றது; பூமிப் பரப்பெல்லாம் திருவடியாகின்றது; வாயு மண்டலம் திருமேனியாகின்றது; திசைகள் எட்டும் திருத்தோள்களாகின்றன. அண்டகடாகம் திருஅபிடேகமாகின்றது. இந்தப் பேருருவம் கட்புலப் படிமமாக அமைந்துள்ளது.

**செவிப்புலப் படிமங்கள்:** காதினால் மட்டிலும் கேட்டு உள்ளத்தைப் பறிகொடுக்கச் செய்யும் படிமங்கள் இவை. இவ்வகையில் ஒன்றைக் காண்போம்.

சிலம்பின்இடைச் சிறுபரல்போல் பெரிய மேரு,
திருக்குளம்பில் கணகணப்ப திருஆ காரம்
குலுங்க,நில மங்கைதனை இடந்து புல்கிக்
கோட்டிடைவைத் தருளியஎம் கோமான்[84]

இது திருநாங்கூர்த் திருத்தெற்றியம்பலத்துச் செங்கண்மால் மீதுள்ள பாசுரம். இதில் ‘கணகணப்ப’ என்பது மட்டிலுமே செவிப்புலப் படிமம். சிறுபரல், பெரிய மேரு, திருக்குளம்பு, திருஆகாரம், நிலமங்கை, கோமான் — இவை கட்புலப் படிமங்கள்; குலுங்க, இடந்து, புல்கி — இவை இயக்கப் புலப் படிமங்கள். இதில் வராக அவதாரக் காட்சியைக் கலவைப் படிமம் அற்புதமாகப் புலப்படுத்திக் காட்டுவதைக் கண்டு மகிழலாம்.

83 பெ. திரு. 6. 6: 3.

84 பெரி. திரு. 4. 4: 8

**சுவைப்புலப் படிமங்கள்:** நாவினால் பெறும் அநுபவத்தைத் தரும் பாசுரங்கள் அதிகமாகவே காணப்பெறுகின்றன. இறைவனே 'ஆரா அமுதனாக' இருக்கும்போது அவனைப்பற்றி நுவலும் பாசுரங்களில் இத்தகைய பாசுரங்கள் மிகுதியாக இருப்பதில் வியப்பில்லை.

வேங்க டத்துஅரி யைப்பரி கீறியை
வெண்ணெய் உண்டுஉர லின்இடை ஆப்புண்ட
தீங்க ரும்பினை தேனைநன் பாலினை
அன்றி, என்மனம் சிந்தைசெய் யாதே,[85]

ஆழ்வார் திருநறையூர் எம்பெருமானை அநுபவிக்கும் பாசுரம் இது. இதில் வெண்ணெய் உண்ணல் சுவைப்புலப் படிமம். எம்பெருமானைக் கரும்பு, தேன், பால் என்று உருவகம் செய்யும் பொழுது சுவைப்புலப் படிமங்கள் நம் மனத்தில் எழுகின்றன. அவனை அப்பொருள்களாகவே அநுபவித்து மகிழ்கின்றோம். அடுத்த பாசுரத்திலும் எம்பெருமான் 'அம் கட்டியை கரும்பீன்ற இன்சாற்றை'[86] என்று உருவகித்து அநுபவிக்கும்பொழுது சுவைப்புலப் படிமங்களை நம் மனத்தில் எழுப்புவதை அறியலாம். இவரே திருமெய்யத்தில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை 'திருமெய்யத்து இன்னமுத வெள்ளம்'[87] என்று உருவகித்து இனியராகும்போது நம் மனம் சுவைப்புலப் படிமத்தால் நிறைந்து விடுகின்றது.

**நாற்றப்புலப் படிமங்கள்:** மூக்கினால் முகர்ந்து அநுபவிக்கக் கூடிய காட்சிகளாக அமைந்திருப்பவை இவை. மங்கை மன்னன்,

தேனார் பூஞ்சோலைத்
திருவேங்கட மலை[88]

85 பெரி. திரு. 7. 3: 5
86 ஷெ. 7. 3: 6
87 ஷெ 2. 5: 3
88 பெரி. திரு. 4: 7

வெறியார் தன்சோலைத்
திருவேங்கட மலை[89]

விரைகுழுவும் மலர்பொழில்சூழ்
வித்துவக் கோடு[90]

வெறிகமழ் சோலைத்தென்
காட்கரை[91]

தெருவெல்லாம் காவி
கமழ்திருக் காட்கரை[89]

மங்கை மன்னன் பாசுரங்களில் இவற்றைக் காண்பது அரிதாகை யால் குலசேகரர், நம்மாழ்வார் பாசுரங்களிலிருந்து இவை எடுத் துக்காட்டப் பெற்றன. இவையும் அத்திபூத்த மாதிரி ஆங்கொன் றும் ஈங்கொன்றுமாக அமைந்திருப்பதைக் கண்டு நுகரலாம்.

**நொப்புலப் படிமங்கள்:** தொடுவதால் அநுபவிக்கக் கூடிய படிமங்கள் இவை. இவையும் அரியனவாக இருப்பதால் ஆண்டாள் பாசுரத்திலிருந்து காட்டப்பெறுகின்றன.

குத்து விளக்கெரியக் கோட்டுக்கால் கட்டில்மேல்
மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மேலேறி
கொத்தலர் பூங்குழல் நப்பின்னை கொங்கைமேல்
வைத்துக் கிடந்த மலர்மார்பா.[93]

இதில் குத்து விளக்கு எரிதல், கோட்டுக்கால் கட்டில், நப் பின்னை கொங்கை, மார்பன்—இவை கட்புலப் படிமங்கள். மெத்தென்ற பஞ்ச சயனம் நொப்புலப் படிமம். இக் கலவைப்

89 பெரு. திரு. 4:8
90 ஷை 5: 1
91 திருவாய் 9. 6: 4
92 ஷை 9. 6: 1
93. திருப். 19

படிமம் நம்மிடம் பாட்டநுபவத்தை மிகுவிக்கின்ற தன்றோ? அடுத்த பாசுரத்தில் 'செற்றார்க்கு வெப்பம் கொடுக்கும் விமலா'[94] என்ற தொடரில் பயமாகியசுரம் (காய்ச்சல்) வருவதைக் காணலாம். இது நொப்புலப் படிமமாகும்.

**இயக்கப்புலப் படிமங்கள்:** ஒரு பொருள் அல்லது மனிதனின் இயக்கத்தை விளக்குவது இந்நிலைப் படிமமாகும். செவிப்புலப் படிமம் காட்டப்பெற்றபோது இவை காட்டப்பெற்றன. ஈண்டு இன்னொன்றைக் காட்டுவேன்.

ஒண்மிதியில் புனல்உருவி ஒருகால் நிற்ப
ஒருகாலும் காமருசீர் அவுணன் உள்ளத்து
எண்மிதியும் கடந்து அண்டம்மீது போகி
இருவிசும்பி னூடுபோய் எழுந்து மேலைத்

தண்மதியும் கதிரவனும் தவிர ஓடி,
தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு
மண்முழுதும் அகப்படுத்து நின்ற எந்தை
மலர்புரையும் திருவடியே வணங்கி னேனே[95]

ஆழ்வார் திரிவிக்கிரமாவதாரத்தை அநுபவிக்கும் பாசுரம் இது. இதில் புனல் உருவுதல், எண்மதியும் கடத்தல், அண்டம் மீது போதல், இருவிசும்புனூடுபோதல் எழுதல், தவிர ஓடுதல், புறந்தடவுதல், அப்பால் மிகுதல்—இவை யாவும் இயக்கப்புலப் படிமங்கள். இவை ஒருங்கிணைந்து 'ஓங்கி உளகளந்த உத்தமனை' அற்புதமாகக் காட்டுவதைக் கண்டு மகிழலாம்.

**படிமங்களின் கலவை:** பெரும்பாலும் படிமங்கள் தனித்து வருதல் அருமை; அவை கலவையாகவே கவிதையில் அமைந்து

94. திருப். 20
95. திரு. நெடுந்' 5

அவற்றிற்கு மெருகூட்டுகின்றன. இவற்றிற்கும் பிற ஆழ்வார்களின் பாசுரங்களை நாடவேண்டியுள்ளது.

ஆழி மழைக்கண்ணா! ஒன்றுநீ கைகரவேல்
ஆழியில் புக்கு முகந்துகொ டார்த் தேறி
ஊழி முதல்வன் உருவம்போல் மெய்கறுத்துப்
பாழியந் தோளுடைப் பற்பநா பன்கையில்
ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்கம் உதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய்[96]

ஆயர்பாடிச் சிறுமிகள் மழை தெய்வத்தை வேண்டுவதாக ஆண்டாள் பாடிய பாசுரம் இது. ஆழியில் புகுதல், ஏறுதல், சார்ங்கம் உதைத்தல் - இவை இயக்கப்புலப் படிமங்கள்; ஆழிமழைக் கண்ணன், ஊழி முதல்வன் போல் மெய்கறுத்தல், ஆழிபோல் மின்னுதல் இவை கட்புலப் படிமங்கள்; ஆர்த்தல், அதிர்தல், சரமழை பெய்தல் - இவை செவிப்புலப் படிமங்கள். இம்மூவகைப் படிவங்களின் கலவை பாட்டநுபவத்தை மிகுவிக்கின்றது.

இத்தகைய கலவைப் புலப் படிமத்தை இன்னொரு பாசுரத்திலும் கண்டு மகிழலாம்.

மாரி மழைமுழைஞ்சில் மன்னிக் கிடந்துறங்கும்
சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து
வேரி மயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதரி
மூரி நிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டு
போதருமா போலேநீ பூவைப்பூ வண்ணா,உன்
கோயில் நின்று இங்ஙனே போந்தருளி[97]

கோபியர் தங்கள்முன் கண்ணன் எவ்வாறு எழுந்தருளிக் குறை முடிக்க வேண்டும் என்பதைத் தெரிவிக்கும் பாசுரம் இது. மலை முழைஞ்சில் உறங்கும் சிங்கம், தீவிழித்தல், பூவைப்பூ வண்ணன்,

96. திருப். 4

97 .ஷை.23

இவை கட்புலப் படிமங்கள்; வேரிமயிர் பொங்குதல், போர்ந்து உதறுதல், மூரிநிமிர்தல், புறப்படுதல், போந்தருளுதல் இவை இயக்கப்புலப் படிமங்கள்; நிமிர்ந்து முழங்குதல் செவிப்புலப் படிமம். இவை கலந்து நிற்கும் நிலையில் கவிதையநுபவம் கொடுமுடியை எட்டிவிடுகின்றது.

**கவிதை அநுபவம்:** நாம் ஒரு கவிதையை நுகர்ந்து மகிழ்ச்சிப் பெருக்கால் நம் உள்ளம் பூரிக்கும்போது நம் உடலினுள் நடைபெறும் மாற்றங்களை அறிவியலடிப்படையில் விளக்க முயல்வேன். உண்ணும் உணவு செரிமானம் ஆகி உடலினுள் தன்வயம் ஆகும் போது நடைபெறும் செயல்களை நாம் அறிவோம். இங்ஙனமே நாம் ஒரு கவிதையை அநுபவித்து மகிழும்போது சில செயல்கள் நமது மூளையில நடைபெறுகின்றன. இவற்றை விளக்குவேன். நமது உடல் தூண்டல் – துலங்கல் (Stimulus–Response) என்ற உளவியல் தத்துவப்படி இயங்குகின்றது. உள்ளமும் அதற் கேற்பத் துலங்குகின்றது. வெளிஉலகிலிருந்து தூண்டல்கள் புலன்களைத் தாக்கும்போது (Sensory level) அவற்றிற்கேற்பப் புலன்கள் துலங்குகின்றன. அதாவது, அப்புலன்கள் அத் தூண்டல்களால் கிளர்ச்சியடைகின்றன. அதனால் ஏற்படும் உணர்ச்சியை மனம் அநுபவிக்கின்றது. இந்த உணர்ச்சிப் பெருக்கில் உண்டாகும் இன்பமே – முருகுணர்ச்சியே - சுவையாகும். எடுத்துக்காட்டாக, மணப்பொருள்கள் தரும் மணத்தை நாற்றப்புல நரம்புகள் வாங்கி மூளைக்கு அனுப்புகின்றன. மனம் அப்பொருள்கள் நல்கும் மணத்தை அநுபவிக்கின்றது. ஊதுவத்தியின் மணம் செயற்படுவதைக் கருதினால் இவ்வுண்மை தெளிவாகும். இங்ஙனமே பிற புலன்களின்மூலம் பெறும் தூண்டல்களால் மனம் அந்தந்தப் பொருள்கள் தரும் சுவைகளைப் பெற்று அவற்றில் ஈடுபடுகின்றது. இவ்வாறு வெளியுலகத் தூண்டல்களால் அடிக்கடி மனம் பெறும் அநுபவம் பெரு மூளையில் பதிவாகிவிடுகின்றது. உலகை இன்பமயமாகக் கண்டு உள்ளத்தில் பூரிப்பு அடைபவர்களே கவிஞர்கள். ஆழ்வார்கள் போன்ற ஞானச் செல்வர்கள் உள்ளத்தில் கனிவு அடைந்தவர்களாதலின்

அவர்கள் இயற்கையில் இறைவனையே காணும் பேறு பெற்ற வர்களாகின்றனர்.

இவ்வாறு பெரு மூளையில் பதிவாகி இருக்கும் அநுபவம் அச்சு வடிவிலுள்ள கவிதைகளைப் படிக்கும்போது நினைவாற் றலின் காரணமாகத் தூண்டல்களாக (Ideational level) மாறுகின்றன. அவை மூளையிலுள்ள பூத்தண்டு (Thalamus) மேற்பூத்தண்டு (Hypothalamus) என்ற பகுதிகளின் மூலமாகப் புலன்களை அடையும் போது மூளையில் அற்புதமாக அமைந் திருக்கும் நரம்பு அமைப்புகளைத் தூண்ட அந்நரம்புகளின் இயக்கத்தால் மாங்காய்ச் சுரப்பிகள் (Adrenal glands) போன்ற நாளமிலாச்சுரப்பிகளின் (Ductless glands) சாறுகளை ஊறச் செய்து குருதியோட்டத்தை மிகுவிக்கின்றன. உடலும் கிளர்ச்சி அடைகின்றது. அப்போது கவிதைகளில் வரும் படி மங்களைப் (Imagery) புலன்கள் மீட்கும் மனத்தில் தோன்றச் செய்கின்றன. மனம் அக்காட்சிகளை அநுபவித்து மகிழ்கின்றது. இத்தகைய முருகுணர்ச்சி ஆழ்வார் பாசுரங்களில் பக்தியுணர்ச் சியாகப் பரிணமிக்கின்றது. இந்தப் பாசுரங்களைப் பயிலுங் கால் அதே உணர்ச்சியை நாம் பயிற்சியால் பெற முடிகின்றது. ஆழ்வார்கள் அநுபவித்த பக்கி உணர்ச்சி அவர்தம் பாசுரங்களில் தேக்கி வைக்கப் பெற்றுள்ளது. அவர்தம் பாசுரங்களை நாம் பயிலுங்கால் அவற்றிலுள்ள சுவைகளை—பக்தி உணர்வுகளை— நம்மனம் அநுபவித்து மகிழ்கின்றது. பாசுரங்களும் 'மம்மர் அறுக்கும் மருந்தாக' நமக்குக் களிப்பூட்ட, நாம் பிரம்மாநுபவம் (Bliss of Brahman) பெற்ற நிலையை அடைகின்றோம்.

பொழிவு 3

## 3. அருளிச் செயல்கள் — தத்துவக் கருத்து

நேயர்களே,

திருமாலை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சமயம் வைணவம். இது பல உயர்ந்த கொள்கைகளைத் தன்னகத்தே கொண்ட ஒரு பரந்த சமயமாகும். தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் திருமாலைப்பற்றிய குறிப்புகள் பரவலாகக் காணப்பெறுவதால் இந்த உயரிய சமயத்தின் தொன்மை அறியப் படும். வைணவ சம்பிரதாயப்படி அச்சமயத்தைச் சிறப்பித்த வராகக் கருதப்பெறும் பெரியோர்கள் ஆழ்வார்கள், ஆசார்யர்கள் என்று இருவகைப் படுவர். ஆழ்வார் திருமாலடியார்கள். அவர்கள் திருமாலின் மங்கள குணங்களாகிய அமுத வெள்ளத்தில் மூழ்கி மிகவும் ஈடுபட்டு நன்றாக ஆழ்ந்திடுவர் என்னும் காரணத்தி னால் அவர்கட்கு ஆழ்வார்கள் என்னும் திருநாமம் ஏற்பட்டது. வைணவர்கள் இவர்களை அவதார புருஷர்கள் எனக் கருதி வழிபடுவர். இதனை விளக்குவதற்கு முன்னர் வேறொரு கருத் தினை விளக்கவேண்டியது இன்றியமையாததாகின்றது. அஃதா வது, எம்பெருமானின் திருமேனியைப் பற்றியது அது.

எம்பெருமான் கருடனுடைய உடலாய் நிற்கும் வேதத்தின் பொருளாய் நிற்பவன். இவன் திருமேனியில் சீவன் இரத்தினங் களுள் சிறந்த கௌஸ்துபமாகவும், மூலப் பிரகிருதி ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவாகவும், மான் என்னும் தத்துவம் கௌமோதகி என்னும் கதையாகவும், ஞானம் நந்தகம் என்னும் வாள் (கத்தி) ஆகவும், மருள் வாளின் உறையாகவும், தாமசாகங்காரம் சார்ங்கம் என்னும் வில்லாகவும், சாத்விகாகங்காரம் பாஞ்ச சன்னியம் என்னும் சங்காகவும், மனம் சுதர்சனம் என்னும் சக்கரமாகவும், ஞானேந்திரியங்கள் ஐந்தும் கர்மேந்திரியங்கள் ஐந்தும் ஆகிய பத்தும் அம்புகளாகவும், தந்மாத்ரங்கள் ஐந்தும் பூதங்கள் ஐந்தும் ஆகிய இருவித பூதங்களின் வரிசையும் வன மாலையாகவும் இப்படி எல்லாத் தத்துவங்களும் எம்பெரு மானுக்கு ஆயுதமாகவும் ஆபரணமாகவும் இருப்பதாகக் கருதுவது

வைணவ மரபு. அதாவது எம்பெருமான் சேதநம், அசேதநம் என்னும் தத்துவங்கள் அனைத்தையும் ஆபரணமாகவும் ஆயுதமாகவும் கொண்டுள்ளான். இவை திவ்யாபரணாழ்வார்கள் திவ்வியாயுதாழ்வார்கள் எனப்பெயர் பெறுகின்றன. நித்தியசூரி களையே இவ்வடிவங்களாகக் கருதுவது வைணவ மரபு.

**நம்மாழ்வாரின் திருமேனி:** ஆழ்வார்கள் பன்னிருவருள் சடகோபர் 'நம்மவர்' என்று போற்றத் தக்க பெருமை வாய்ந்து 'நம்மாழ்வார்' என்ற சிறப்புத் திருநாமத்தால் வழங்கப் பெறுகின்றார். ஏனைய ஆழ்வார்களை நம்மாழ்வாரின் ஒவ் வோர் அவயவமாகவும், நம்மாழ்வாரை அவயவியாகவும் வழங்குவது வைணவ மரபு. ஆழ்வாரின் திருமுடி நம்பெரு மாள். பூதத்தாழ்வாரைத் தலையாகவும், பொய்கை பேயாழ் வார்களைத் திருக்கரங்களாகவும், பெரியாழ்வாரைத் திருமுக மண்டலமாகவும், திருமழிசையாழ்வாரைக் கழுத்தாகவும் குலசேகராழ்வாரையும் திருப்பாணாழ்வாரையும் திருக்கை களாகவும், தொண்டரடிப்பொடியாழ்வாரைத் திருமார்பா கவும், திருமங்கையாழ்வாரைத் திருநாபியாகவும், மதுர கவிகளையும் எம்பெருமானாரையும் திருவடிகளாகவும் பெரியோர் அருளிச் செய்வார். நம்மாழ்வார் திருமாலின் திருவடியில் எப்போதும் விளங்குகின்றார் என்பது வைணவசமயக்கொள்கை. அதனால் திருமால் திருக்கோயில்களில் அப்பெருமானைச் சேவிக்கச் செல்வோரின் முடிமீது அவருடைய திருவடியாக வைக்கப்பெறுவதைச் 'சடகோபன்', 'சடாரி' என்று வழங்கு கின்றனர். 'சடகோபன்' 'சடாரி' என்பன நம்மாழ்வாரின் திருப்பெயர்கள் என்பது அறியத்தக்கது. இதனால் நம்மாழ்வாரின் தத்துவமே ஏனைய ஆழ்வார்களின் தத்துவமாகும். அதாவது, வைணவ தத்துவம் ஆகும்.

இவ்விடத்தில் ஓர் உண்மையை நினைவிற்கொள்ள வேண்டும். சாத்திர நூல்கள் தத்துவங்களை விளக்குதற்காக

1, தே. பி. 80

எழுந்தவை; ஆதலால் அவற்றில் தத்துவங்கள் அளவை முறையில் கோவையாக எடுத்து விளக்கப்பெறும். ஆனால், தோத்திர நூல்கள் எம்பெருமானின் புகழ் பாடுபவவை. இவற்றில் தத்துவக் கருத்துக்கள் கோவைப்பட அமைந்திருக்கும் என எதிர்பார்க்க முடியாது. அவை ஆங்கொன்றும் ஈங்கொன்று மாக அமைந்திருக்கும். திருமங்கையாழ்வாரின் அருளிச்செயல் களை ஆராயும்போது இந்த உண்மை தெளிவாகும். ஆகவே, நாம் தெளிவாக அறியும் பொருட்டு இந்த மூன்றாவது பொழிவில் முதலில் வைணவ தத்துவம் இன்னதென விளக்கி, அதன் அடிப்படையில் ஆழ்வாரின் அருளிச் செயல்களின் அத்தத்துவக் கருத்துகள் அமைந்திருப்பதைக் காட்டுவேன். ஆகவே, முன்ன தாக வைணவதத்துவம் இன்னதென்பதை விளக்குவேன்.

வைணவ சமயத்தின் கொள்கைகளை (1) தத்துவம் (2) இதம் (3) புருஷார்த்தம் என்று சுருக்கமாக விளக்கி வைக்கலாம்.

## 1. தத்துவம்:

முதலில் தத்துவத்தை விளக்குவேன். தத்துவங்கள் மூன்று. அவை சித்து, அசித்து, ஈசுவரன் என்று வழங்கப்பெறுவன. **சித்து** என்பது, உயிர்களின் தொகுதி; ஆன்மாக்களின் கூட்டம் **அசித்து** என்பது, மக்கள், விலங்கு முதலியவற்றின் உடம்பு முதலிய உலகப் பொருள்கள் எல்லாவற்றிற்கும் காரணமான பிரகிருதி என்பது; இதனை மூலப்பிரகிருதி எனவும் வழங்குவர். ஈசுவரன் என்பவன், இறைவன். இவை மூன்றும் **'தத்துவத்திரயம்'** (திரயம்-மூன்று) என்ற பெயரால் வழங்கி வருகின்றன.

**சித்து:** ஞானத்திற்கு இடமான ஆன்மா அல்லது உயிர் சித்து என வழங்கப்பெறுகின்றது, இஃது அன்னமயம், பிராண மயம், மனோ மயங்கட்கு அப்பாலாயிருப்பது. தேகம், இந்திரியங்கள், மனம், பிராணன், ஞானம் இவற்றிற்கு வேறுபட்டது. அறியும் தலைவனும், அறிவும், அறியப் பெறும் பொருளும் தாகனாவே இருப்பது. அணுவின் அளவினையுடைய இந்த ஆன்மா ஆனந்த வடிவத்தைக் கொண்டது; என்றும் நிலை பெற்றிருப்பது

இது கண்முதலிய இந்திரியங்கட்குத் தோற்றாது; மனத்தாலும் இதை நினைக்க முடியாது. இதனைப்பகுதிகளாகவும் பிரிக்கமுடியாது; அவயவமும் அற்றது. வளர்தல், பருத்தல், குறைதல் முதலிய வேறுபாடுகள் இதற்கு இல்லை. அறிவு மயமாக இருக்கும் இந்த ஆன்மா அறிவுக்கு இருப்பிடமானது. இந்த அறிவு 'தர்ம பூத ஞானம்' என்று வழங்கப்பெறும். இதனால் ஆன்மா 'தர்மி பூத ஞானம்' என்ற வேறொரு பெயராறும் வழங்கப் பெறும். இந்தச் சீவான்மா தனக்கு எப்பொழுதும் தோன்றிக் கொண்டேயிருக்கும், தன்னை 'நான்' என்று அறியும் பொழுது தர்ம பூத ஞானம் உதவவேண்டும் என்பதில்லை. ஆனால் சீவான்மா தன்னைத் தவிர வேறு எந்தப் பொருளையும் தன் தர்ம பூத ஞானத்தால் மட்டிலுமே அறிய முடியும், தன் சொருபத்தைத் தர்ம பூத ஞானத்தைக் கொண்டும் அறியலாம். ஆன்மா இறைவன் ஏவியபடி நடப்பது; அவனால் தரிக்கப் பெற்று, அவனுக்கு அடிமையாகவே இருப்பது.

**சித்தின் வகை:** சீவான்மாக்கள் எண்ணற்றவர். இவர்களின் தொகுதி **பத்தர்** (தளைப்பட்டிருப்பவர்), **முக்தர்**, **நித்தியர்** என்னும் வேற்றுமையால் மூவகைப் பட்டிருக்கும். இவர்களுள் பத்தர் என்பவர் 'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர்மும்மைத் தாம காலமும் கணக்கும் நீத்த காரணனின்' மாயையால் மறைக்கப்பெற்ற சொருபத்தையுடையவர்கள்; அநாதி அஞ்ஞானத்தால் தேடிய புண்ணிய பாவங்களால் (**வினையினால்**)[2] சூழப் பெற்றவர்கள்; இவர்கள் அவரவர்களின் வினைக்குத்தக்கவாறு மாறிமாறித் தேவ, மனித, விலங்கு, தாவர வடிவங்

---

2. மூன்று வகைப்படும். இப்பிறப்பிற்கு முன்னைய பிறப்புகளில் செய்தவினைகளுள் இப்பிறப்பில் அநுபவித்தற்கென்று அளந்து கொள்ளப் பெற்ற வினைத் தொகுதி **பிராரத்தம்** (நுகர்வினை) எனப்படும், எஞ்சிய வினைத் தொகுதி **சஞ்சிதம்** (பழவினை) எனப்படும்; இப்பிறப்பில் செய்யப் பெறும் வினைத் தொகுதி **ஆகாமியம்** (எதிர்வினை) என்று வழங்கப்படும்.

களைப் பெற்றுத் துக்க பரம்பரைகளை அநுபவிக்கும் சம்சாரிகளாவர். முத்தர்என்பவர், இவ்வுலகத் தளைகள் கழிந்து பரமபதத்தில் பகவத நுபவ கைங்கரிய போகரானவர்கள் ஆவர். நித்தியர் என்பவர், ஒருநாளும் சம்சார சம்பந்தம் இல்லாத அனந்தன், கருடன், சேனை முதலியார் தொடக்கமானவர்களாவர்.

அசித்து: அசித்து என்பது அறிவில்லாத பொருள். இது, விகாரத்திற்கு இடமானது. அதாவது முன்னைய நிலைகளை விட்டு வேறுநிலைகளை அடைவதாகின்ற வேறுபாட்டிற்கு இடமாய் இருக்கும். இந்த அசித்து இராஜஸ தாமஸங்கள் கலவாத சுத்த சத்துவம் என்றும், இராஜஸ தாமஸங்கள் கலந்த மிச்ரதத்துவம் என்றும், சத்துவம் முதலிய குணங்களற்ற சத்துவசூனியம் என்றும் மூவகைப்படும்.

சுத்த சத்துவம்: இஃது ஆதல், அழிதல் இல்லாதது; ஞானத்தையும் ஆனந்தத்தையும் உண்டாக்கக் கடவது. இறைவன் அநுபவத்தின் பொருட்டே உண்டான இச்சையாலே நித்திய விபூதியில் (பரம பதத்தில்) விமானம், கோபுரம், மண்டபம், உப்பரிக்கை முதலிய வடிவுடன் தோற்றக்கடவது. இது வைகுந்தத்திலிருந்து மேலே எல்லையின்றி எங்கும் பரவி நிற்கும். நெருப்பு, கதிரவன் முதலிய ஒளியுள்ள பொருள்களும் மின்மினிக்கு ஒப்பாம்படி அளவிறந்த ஒளிவடிவானது; கணநேரத்திற்குக் கணநேரம் முன்பில்லாத வியப்பினை உண்டாக்க வல்லதாக இருக்கும். நித்தியர், முத்தர், ஈசுவரன் இவர்கள் ஞானத்தால் தன்னை அறிய வொண்ணாதபடி ஒளிவிட்டுத் திகழும். ஆனால் சம்சாரிகட்கு அங்ஙனம் தோற்றாது.

மிச்ர தத்துவம்: இதில் சாத்துவிகம், இராசசம், தாமசம் ஆகிய மூன்றும் கூடி கர்மவான்களாகிய சம்சாரி சேதநருடைய ஞான ஆனந்தங்கட்கு மறைவை உண்டாக்கும்; அதுவல்லாததனை அதுவாக நினைக்கும் விபரீத அறிவினையும் விளைவிக்கும். இஃது உற்பத்தி விநாசமில்லாதது. இஃது ஈசுவரனுடைய உலகப்படைப்பு முதலியவற்றிற்கு விளையாட்டுக் கருவியாக

இருந்து, ஏற்றத்தாழ்வு உள்ள இடம் அவை இல்லாத இடம என்ற இடவேறுபாட்டாலும், அழிக்கும் காலம் படைப்புக் காலம் ஆகிய இரண்டு வகையான கால வேறுபாட்டாலும், சூக்கும விகாரங்களையும் தூல விகாரங்களையும் உண்டாக்கக்கடவது. இந்த மிச்ர தத்துவம் பிரகிருதி, அவித்யை, மாயை என்ற பெயர்களாலும் வழங்கப்பெறும்.

இந்த மிச்ர தத்துவம் இருபத்துநான்கு வடிவங்களாக இருக்கும். அதாவது சேதநரைப் பூரிக்கும்படிச் செய்யும் சுவை, ஒளி, ஊறு, ஓசை நாற்றம் ஆகிய புலன்கள் ஐந்தும்; மெய், வாய், கண், செவி, மூக்கு ஆகிய பொறிகள் ஐந்தும்; வாக்கு, கால், கை, வாய், உபத்தம் ஆகிய கருமேந்திரியங்கள் ஐந்தும்; மண், நீர், எரி, கால், ஆகாயம் என்னும் பூதங்கள் ஐந்தும்; இங்குள்ள அந்த ஆன்மாக்கள் பொருந்தியுள்ள மூலப்பிரகிருதி ஒன்றும்; மகத் (மான்) தத்துவம் ஒன்றும், அகங்காரதத்துவம் ஒன்றும், மனம் ஒன்றும் என இருபத்து நான்காம். இந்த இருபத்து நான்கு தத்துவங்களையும்[3] கலந்து தான் ஈசுவரன் தானாகவும், நான்முகன் மூலமாகவும் இந்த அகிலத்தைப் படைக்கின்றான்.

**சத்துவ சூனியம்;** இது கால தத்துவம் என்றும் வழங்கப்படும். இஃது எங்கும் பரந்து நிற்கும் ஒரே திரவியம். இதில் சத்துவம் முதலிய பிரகிருதியின் மூன்று குணங்களும் இல்லை. எதிர், நிகழ், கழிவு முதலிய விவகாரங்களுக்கு இதுவே காரணம் ஆகும்.

3. புருஷன் (ஆன்மா), பரமான்மா (புருஷோத்தமன்) ஆகிய இரண்டும் சேர்ந்து வைணவதத்துவம் 26 ஆகின்றன.

நிமிடம், விநாடி, நாழிகை முதல் பரார்த்தம் வரையிலுள்ள [4] பகுதிகளெல்லாம் இதனுடையனவே. இஃது ஈசுவரப் படைப்பின் பரிணாமங்களுக்குக் காரணமாய், தோற்றம் ஈறுஅற்றதாய், அவனுடைய படைப்பு அளிப்பு அழிப்பு ஆகிய விளையாட்டிற்குக் கருவியாய் அவனுக்கு உடலாகத் திகழும். வைகுந்தத்தில் முன்பின் என்ற அளவிற்குக் காலம் உளதேயாயினும், அதன் சம்பந்தமின்றி அனைத்தும் எம்பெருமானது சங்கற்பத்தால் மட்டிலும் நடப்பனவாகும்.

**சரீர சரீரி பாவனை:** மேற்கூறிய அசித்தின் மூன்று பகுதிகளும், ஒவ்வோர் ஆன்மாவும் இறைவனின் திருமேனியாக உள்ளன என்பது வைணவ தத்துவம். திருமங்கையாழ்வார்,

திடவிசும்பு எரிநீர் திங்களும் சுடரும்
செழுநிலத்து உயிர்களும் மற்றும்
படர்பொருள் களுமாய் நின்றவன். [5]

என்ற பாசுரத்தில் இந்த இரண்டைச் சேர்த்துக் கூறுவதைக் காணலாம்.

பல்வநீர் உடையாடை ஆகச் சுற்றி
பார்அகலம் திருவடியா பவனம் மெய்யா
செவ்விமா திரம்எட்டும் தோளா அண்டம்
திருவ்டியா நின்றான். [6]

என்பதில் அசித்தை மட்டிலும் இறைவனது உடலாகக் காட்டுவர். நம்மாழ்வாரும்,

4. முத்திநெறி – (பக் 45 – 46) என்ற எனது நூலில் (பாரி நிலையம், 184, பிரகாசம் சாலை, சென்னை – 600 108) காண்க.

5. பெரி. திரு. 4. 3: 3.

6. ஷெ 6. 6: 3.

நீர்ஆய் நிலன்ஆய் தீஆய்
கால்ஆய் நெடுவானாய்.
சீரார் சுடர்கள் இரண்டுஆய்
சிவன்ஆய் அயன்ஆனாய். [7]

என்று கூறுவதையும் ஈண்டுநினைத்தல் தகும். சுத்தசத்துவம், மிச்ர தத்துவம் ஆகிய அசித்தின் இரண்டு பகுதிகளும் ஈசுவரனுக்கும் நித்தியர், முத்தர், பத்தர் என்ற மூன்றுவித ஆன்மாக்களுக்கும் போக்கியமாயும் (அநுபவப்பொருள்களாயும்), போகத்திற்கு உபகரணமாயும், போகத்தை அநுபவிக்கத் தக்க இடங்களாயும் இருக்கும் என்பதையும் தெளிவாக அறியலாம்.

சரீர – சரீரபாவனையை விளக்கும் ப்ாசுரங்கள் ஏராளமாக உள்ளன. சிலவற்றை ஈண்டுக் காட்டுவேன்.

அம்பரம் அனல்கால் நிலம்சலம்
ஆகி நின்ற அமம்ர்கோன் [8]

வான்நாடும் மண்நாடும்
மற்றும்உள்ள பல்லுயிரும்
தான்ஆய எம்பெருமான் [9]

திடவிசும்பு எரிநீர் திங்களும் சுடரும்
செழுநிலத் துயிர்களும் மற்றும்
படர்பொருள் களுமாய் நின்றவன் [10]

நீர்அழல் வான்ஆய் நெடுநிலம் கால்ஆய்
நின்றநின் நீர்மை. [11]

என்பவை அவற்றுள்சில.

**விளக்கம்:** சரீர – சரீரிபாவனை என்ற கருத்தை இவ்

7. திருவாய் 6. 9: 1
8. பெரி. திரு 1. 8: 8
9. ஷை 4. 1: 3
10. ஷை 4. 3: 3
11. ஷை 10. 9: 9

விடத்தில் விரிவாக விளக்குவது பொருத்தமாகும். உயிர் உடலில் இருந்து அதனைத் தரித்திருக்கச் செய்கின்றது. உயிரின்றேல் உடல் வீழ்ந்து விடுதல் கண் கூடு. மேலும், உயிர்தான் உடலை இயக்குகின்றது. உயிர் உடலுக்குத் தலைவனாக உள்ளது. அங்ஙனமே இறைவன் எல்லாப் பொருளுள்ளும் இருந்து அவற்றைத் தரிக்கச் செய்து, அவற்றைத் தன் விருப்பம்போல் நடத்தி அவற்றிற்குத் தலைவனாகவும் இருக்கின்றனன். ஆயினும், உடலினுள் உயிர் இருப்பதற்கும் எல்லாப் பொருளினுள் இறைவன் இருப்பதற்கும் வேறுபாடு உண்டு. உயிர் அணு அளவினதாய் உடம்பினுள் ஓரிடத்திலிருந்து, தன் ஞானத்தால் (தர்மபூத ஞானத்தால்) உடல் முழுதும் வியாபித்து இவ்வுடம்பைப்பற்றிய நிகழ்ச்சிகளை உணர்த்துகின்றது. இறைவன அங்ஙனமின்றி ஒவ்வொரு பொருளுள்ளும் முழுவதும் தன் சொரூபத்தோடு வியாபித்துள்ளான். அன்றியும், உடலினுன் உயிர் இருப்பதற்கும் உடல் உயிர் ஆகிய இரண்டினுள் இறைவன் இருப்பதற்கும் மற்றொரு வேறுபாடும் உண்டு. உயிர் உடலினுள் இருக்கும் போது அவ்வுடலுக்குரிய வளர்ச்சி தேய்வுகள் (விகாரங்கள்) உயிருக்கு உன்டாவதில்லை. ஆனால், ஆவ்வுடலைப்பற்றிய இன்பதுன்ப உணர்ச்சிகள், அறிவின் சுருக்கம்; பெருக்கம் ஆகியவை உயிருக்கு உண்டு. உடலின்மீது தண்ணிய காற்று வீசுங்கால் இன்புறுதலும் தீ சுடுங்கால் துன் புறுதலும் உடலினுள் இருக்கும் உயிருக்கு நேரிடுகின்றன. இனி, குழந்தைப் பருவத்தில் அதனுள் இருக்கும் உயிரின் அறிவு சுருங்கிய நிலையிலிருந்து பின்பு வளர்ச்சியுறுதலைக் காண் கின்றோம். மற்றும், மக்கள் உடம்பினுள் உள்ள உயிர் ஐம் பொறியறிவும் உடையதாக உள்ளது. அவ்வுயிரே மரம், எறும்பு முதலிய உடல்களில் புகுந்தால் ஐம்பொறியறிவு மின்றிச் சில குறையவும் பெறுகின்றன. இனி, உயிர் பருஉடலைப் பெறாத நிலையில் அறிவு சுருங்கியிருத்தலும், பருஉடலைப் பெற்ற நிலையில் அறிவு விரிந்திருத்தலும் உண்டு இங்ஙனமாக உடலைப் பற்றி நிற்கும் உயிர் அவ்வுடலுக்கேற்ப இன்ப துன்ப உணர்ச்சிகளும், அறிவின் சுருக்கமும் பெருக்கமும் அடைதல் தெளிவாகும்.

ஆனால் உடல் உயிர் இவ்விரண்டினுள்ளும் கலந்து நிற்கும் இறைவனை இவ்வேறுபாடுகள் சிறிதும் அடைவதில்லை. இக் கருத்தினை ஆழ்வார்.

புலனொடு புலன் அலன்.[12]

என்று சுருக்கமாக உரைத்துள்ளார். பிறிதோரிடத்தில் இதனையே,

யாவையும் எவர்க்கும் தானாய்
அவரவர் சமயந்தோறும்
தோய்வு இலன் ; புலன் ஐந்துக்கும்
சொலப்படான் ; உணர்வின் மூர்த்தி:
ஆவிசேர் உயிரின் உள்ளால்
ஆதுமோர் பற்று இலாத
பாவனை அதனைக் கூடில்
அவனையும் கூடலாமே,[13]

[யாவை—அசேதநம்; எவரும்—சேதநர்; சமயம்—நிலை; தோய்வு—கலப்பு; பாவனை—எண்ணம்]

என விரிவாகவும் வெளியிட்டுள்ளார். உயர்திணை அஃறிணை யாகிய எல்லாப் பொருளுள்ளும் இறைவன் கலந்து நின்று அவற்றின் அவத்தைகள் தன்னைத் தொடராதபடி இருக்கின்றான். உடலிலுள்ள உயிர் அவ்வுடலுக்குரிய வளர்ச்சி தேய்வு நரை திரை முதலிய விகாரங்களை அடைவதில்லை என்பதை நாம் உணர்வோமாயின், அவ்வுடல் உயிர் இரண்டின் விகாரங் களும் இறைவனை அடைவதில்லை என்பதையும் உணரலாம் என்பது இராமாநுசர் அருளிய விளக்கம் ஆகும்.[14]

12, திருவாய், 1.1:3.
13. ஷை, 3.4:10
14. ஈட்டின் தமிழாக்கம் - 3, 4: 10 இன்உரை காண்க.

ஈசுவரன்: சீமந் நாராயணனே சர்வேசுவரன். இவன் எப்போழுதும் மாறுபடாத் தன்மையுடையவன். சக்தி ஞானம் ஆனந்தம் அனந்தம் இவற்றின் சொரூயமாக இருப்பவன். இடத்தாலும் காலத்தாலும் அளவிடப்பெறாதவன். மூன்றுவித சேதந அசேதந பரிணாம ரூபமான வேறு பாட்டின் குறைகள் (விகாரதோஷங்கள்) தட்டாதவன்.

பிறப்பொடு மூப்புஒன்று இல்லவன் தன்னை
  பேதியா இன்பவெள் ளத்தை
இரப்புஎதிர் காலம் கழிவும் ஆனானை[15]

[பேதியா-விகாரம் அடையாத]

என்று குறிப்பிடுவர் பரகாலர்.

அறம் பொருள் இன்பம் வீடு என்ற நான்கு வகைப்பட்ட பலன்களையும் உயிர்கட்குத் தந்து அவற்றின் புகலிடமாக இருப்பவன். தன் சொருபத்தாலும் திருமேனியாலும் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவன்.

தனிமாப் புகழே, எஞ்ஞான்றும்
  நிற்கும் படியாய்த் தான்தோன்றி
முனிமாப் பிரம முதல்வித்தாய்
  உலகம் மூன்றும் முளைப்பித்த
தனிமாத் தெய்வம்.[16]

என்று கூறுவர் நம்மாழ்வார். ஞானம் சக்கி பலம் ஐசுவரியம் வீரியம் தேஜஸ் முதலிய மங்களகுணக் கூட்டங்களால் அலங்கரிக்கப் பெற்றவன். அவனிடம் இக்குணங்கள் ஆதல் அழிதல் இன்றி எப்பொழுதும் நிறைந்திருக்கும். இவற்றைத் தவிர வாத்சல்யம், சௌசீல்யம், சௌலப்பியம் முதலிய எண்ணற்ற குணங்களையும் கொண்டவன்.[17]

15. பெரி. திரு. 4. 3: 2
16. திருவாய் 8. 10: 7
17. மூத்திநெறி – கடிதம் 6 பக் 49-55 விவரம் காண்க.

இவ்வுலகத்தினைப் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றின் காரணபூதன்.

பூவளர் உந்திதன்னுள் புவனம் படைத்து
உண்டு, உமிழ்ந்த தேவர்கள் நாயகன்[18]

உடம்பு உருவில் மூன்று ஒன்றாய் மூர்த்திவேறாய்
உலகுய்ய நின்றவன்[19]

என்று பேசுவர் திருமங்கையாழ்வார். இதனை நம்மாழ்வாரும்,

இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
எவையும் எவரும் தன்னுள்ளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவையுள் தனிமுதல் எம்மான்[20]

என்று போற்றியுரைப்பர். "அழிப்பொடு அழில்பவன் தானே"[21] என்றும், "காக்கும் இயல்பினன் கண்ணபெருமான்"[22] என்றும் மேலும் பேசுவர். சிறார் வீடு கட்டி அழிக்குமாப்போலே இம்முத் தொழில்களும் இவனுக்கு தன் இச்சையாலே உண்டாகும் விளையாட்டேயாகும். இதனை நம்மாழ்வார்,

துன்பமும் இன்பமும் ஆகிய
செய்வினையாய் உலகங்களுமாய்
இன்பமில் வெந்நர காகி
இனியவான் சுவர்க்கங்களுமாய்
மன்பல் உயிர்களும் ஆகி
பலபலமாய மயக்குகளால்
இன்புறும் விளையாட் டுடையான்.[23]

என்று குறிப்பிடுவர். இதனையே கம்பநாடன்,

18. பெரி. திரு 9. 9: 1
19. ஷை 2. 5: 3
20. திருவாய் 1. 9: 1
21. ஷை 1. 9: 8
22. ஷை 2. 2: 9
23. ஷை 3. 10 :7

உலகம் யாவையும் தாம்உள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீங்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்[24]

என்று விளக்குவன். ஆழ்வார்களின் பாசுரங்களில் அவன் தோய்ந்து நின்ற நிலையே இக்கூற்றுக்குக் காரணமாகலாம்.

**உண்டு உமிழ்தல்:** மேற்குறிப்பிட்ட ஒரு பாசுரத்தில் 'உண்டு உமிழ்தல்' என்ற ஒரு தொடர் வருகின்றது. இங்குக் கூறும் சில பாசுரங்களிலும் இதே தொடர் காணப்பெறுகின்றது.

ஞாலம் முற்றும் உண்டு உமிழ்ந்த
நாதன் என்றும், நானிலம்சூழ்
வேலை அன்ன கோல மேனி
வண்ணன் என்றும்[25]

என்ற திருநாங்கூர் பார்த்தன் பள்ளிப் பாசுரத்திலும் (தாய்ப் பாசுரமாக வருவது),

பாரினை உண்டு பாரினை உமிழ்ந்து
பாரதம் கையெறிந்து ஒருகால்
தேரினை ஊர்ந்து தேரினைத் துரந்த
செங்கண்மால்[26]

என்ற திருவெள்ளியங்குடித் திருப்பாசுரத்திலும்,

அம்பரமும் பெருநிலனும் திசைகள் எட்டும்
அலைகடலும் குலவரையும் உண்டகண்டன்[27]

என்ற திருநறையூர்பற்றிய பாசுரத்திலும் இத்தொடர் வருவதைக் காணலாம்.

---

24. கம்பரா. காப்பு
25. பெரி. திரு. 4. 8: 6
26. ஷை 4. 10: ১
27. ஷை 6. 6: 1

இங்கு 'உண்ணால்' என்பது அழித்தலையும், 'உமிழ்தல்' என்பது படைத்தலையும் குறிக்கின்றது. முன்னது உலக மிருக்கும் நிலையில் இருக்கும் இருப்பையும் பின்னது பருப் பொருளாக இருக்கும் இருப்பையும் குறிக்கின்றன. இவற்றை விளக்குவதற்கு முன்னர் வேறொரு கருத்தையும் உளங் கொள்ளல் வேண்டும். உயிரல்லாத உலகப் பொருள் அனைத்திற்கும் மூலப்பகுதியே (பிரகிருதியே) காரணமாகும். ஒரு பொருள் உண்டாவதற்கு மூன்று காரணங்கள் கூறுவதுண்டு. அவை முதற் காரணம், துணைக் காரணம், நிமித்த காரணம் ஆகும். மண் பானையாக வனையப்பெறுமிடத்து மண் முதற் காரணம்; அதாவது காரியமாக மாறுவது முதற்காரணம். வடமொழியில் இஃது 'உபாதானகாரணம்' என்ற பெயரைப் பெறும். இங்கு மண் பானையாக மாறிற்று. முதற் காரணமாக வுள்ள ஒரு பொருளைக் காரியமாக மாற்றவல்ல கர்த்தாவை நிமித்த காரணம் என்று கூறுவர். இங்குப் பானையை வனைய வல்ல குயவன் நிமித்த காரணம் ஆகின்றான். அவன் குடத்தை வனைவதற்குக் கருவியாகவுள்ள சக்கரம் முதலியவை துணைக் காரணம், இது வடமொழியில் 'சஹகாரி காரணம்' என்று வழங்கப்பெறும். இங்குப் பானையாகிற காரியமாவதற்கு மூன்று காரணங்களும் வெவ்வேறு பட்டிருப்பதைக் காண்கின்றோம் இப்படியின்றி உலகத் தோற்றத்தில்—உலகம் உண்டாகிய. காலத்தில்—ஈசுவரனே மூவகைக் காரணங்களாக உள்ளான். இதுவே வைணவ தத்துவமாகும்.

சித்தும் அசித்தும் சூக்குமமாக (நுண்மையாக) இருக்கும் நிலையில், அதாவது உலகஉற்பத்திக்கு முன்னர்-அவற்றுக்குள் இறைவன் அந்தரியாமியாக சங்கல் பத்தோடு இருக்கும் நிலை யில் — இறைவன் உலகிற்கு முதற்காரணமாகின்றான். இங்ஙனம் நுண்ணிய நிலையில் இருக்கும் சித்து அசித்துகளை வெளிப் படுத்தி 'உலகப்படைப்பு செய்வோம்' என்று இறைவன் எண்ணு கின்ற நிலையில் இறைவன் உலகிற்கு நிமித்த காரணமாக அமை கின்றான். இறைவனுடைய ஞானம் சக்தி முதலியவையே

துணைக்காரண மாகின்றன. ஆக, இறைவன் இம்முறையில் உலகப் படைப்பிற்கு மூன்று காரங்கணளுமாக உள்ளான் என்று மெய்விளக்க அறிஞர்கள் முடிவு செய்துள்ளனர். இக்கருத்தினை ஆழ்வார் பல இடங்களில் குறிப்பிட்டிருப்பதைக் காணலாம்.

நினைந்த எல்லாப் பொருள்கட்கும்
வித்தும்ஆய், முதலில் சிதையாமே
மனம்செய் ஞானத்து உன்பெருமை
மாசுணாதோ? மாயோனே! [28]

தானோர் உருவே தனி வித்தாய்த்
தன்னின் மூவர் முதலாய
வானோர் பலரும் முனிவரும்
மற்றும் மற்றும் முற்றுமாய் [29]

எப்பொருட்கும்
வேர்முதலாய் வித்துமாய்ப் பரந்து தனி நின்ற
கார்முகில் வண்ணன் என்கண்ணன் [30]

என்ற பாரசுப் பகுதிகளிலும் வேறுபல பாசுரங்களிலும் இவற்றைக் கண்டு தெளியலாம்.

மேற்கூறிய மூன்று காரணங்களுள் இறைவன் உலகிற்கு முதற்காரணம் என்பது மிகவும் முக்கியமானது. இதனையும் தெளிவாக்குவேன். காரணப் பொருள் பின் காரியப் பொருளாக மாறுவது முதற் காரணம் என்பது பொதுவிதியாகும். இங்கு இறைவனே இவ்வுலகப் பொருள்களாக மாறினான் என்றால் அங்ஙனமன்று. இவ்வுலகப் பொருள்கட்கு அவற்றின் நுண்ணிய நிலை முதற் காரணம். பருப் பொருளாக மாறிய நிலைமை காரியம். இறைவன் நுண்ணிய நிலையிலுள்ள சித்து அசித்துகளில் உள்ளேயும் அந்தர்யாமியாக உள்ளான். நுண்மையான சித்து அசித்துகளில் இறைவன் அந்தர்யாமியாக

28. திருவாய் 1. 5: 2.   29. ஷ 1. 5: 4
30. ஷ 2. 8: 10

இருக்கும் நிலை முதற்காரண நிலையாகும். பருப்பொருளாக உள்ள சித்து அசித்துகளில் இறைவன் அந்தர்யாமியாக உள்ள நிலையே காரிய நிலையாகும். அதனால் இறைவன் முதற்காரணமாகவுள்ள நிலையிலும், காரியமாகவுள்ள நிலையிலும் சிறிதும் வேறுபடுவதில்லை. இதனால் ஈசுவரன் விகாரமற்றவன்—நிர்விகாரன்—என்று சொல்லுவதில் தவறில்லை.[31] இக்கருத்தை ஆழ்வார் பாசுரத்தில் 'வித்தாய் முதலிற் சிதையாமே' (திருவாய் 1. 5: 2) என்ற தொடர் அழகுடன் விளக்குவதைக் கண்டு தெளியலாம். உலகத்துப் பொருள்கள் போலன்றி இறைவன் தன் நிலையில் சிறிதும் சிதைவின்றி இருந்து கொண்டே எல்லாப் பொருள்கட்கும் வித்தாக உள்ளனன் (முதற்காரணமாகின்றான்) என்பது கருத்தாகும். இங்ஙனம் இருத்தல் அவனுடைய ஆச்சரிய சக்தியாகும். இதனையே திவ்விய கவி பிள்ளைப் பெருமாள் அய்யங்கார்,

சின்னூல் பலபலவாயால் இழைத்துக்
சிலம்பி பின்னும்
அந்நூல் அருந்தி விடுவதுபோல்
அரங்கர் அண்டம்
பன்னூறு கோடி படைத்துஅவை
யாவும் பழம்படியே
மன்னூழி தன்னில் விழுங்குவர்போத
மனம் மகிழ்ந்தே[32]

என்று மிக அழகான உவமம் கலந்த பாடலால் விளக்குவர். சிறிய சிலந்திப்பூச்சி தன்னிடத்திலிருந்து நூலை உண்டாக்கிப் பின் அதனை விழுங்குகின்றது. நூல் உண்டாவதாற்கு முதற்காரணமாகவுள்ள அப்பூச்சி தன்நிலையில் அழிவதில்லை. ஒருசிறிய சிலந்திக்கு இச்செயல் கூடுமேல், தன் நிலையில் சிதைவின்றித் தான் உலகிற்கு முதற்காரணமாதல் எல்லாம் வல்ல இறைவனுக்கு அரியதாகுமோ?

31. தத்துவதி – ஈசுவரப்–26
32. திருவரங்க மாலை—18

ஒரு சிலந்திக் குண்டான ஸ்வபாவம் சர்வசக்திக்குக் கூடா தொழியகிறே[33]

என்ற தத்துவத்திரயய வாக்கியமும் ஈண்டு நோக்கி உன்னற் பாலதாகும்.

ஈசுவரன் அனைத்திற்கும் ஆதாரமானவன; அனைத்தையும் அடக்கி ஆள்பவன்; அனைத்தினுடைய பலனையும் அநுபவிப்பவன். மேலும் அசித்து (இவ்வுலகப் பொருள்) மாறுபாடடைவதற்கும், உயிர்கள் தத்தம் வினைகட் கேற்ப உடல்களை அடைவதற்கும் இவனே காரணன்.

கருமமும் கரும பலனும்
ஆகிய காரணன்[34]

என்பர் சடகோபர். தன்னை அடைந்தவருடைய எல்லா வினைகளையும் போக்குபவன். சகல வேதங்களாலும் போற்றப்பெறுவன். இந்த உலகிலுள்ள உயிர்களின் பக்திமூலமும் பிரபத்திமூலமும் வீடுபேற்றினை அடைவதற்கு இவனே துணையாவான்.

தாய் நினைந்த கன்றேயொக்க என்னையும்
தன்னையே நினைக்கச் செய்து தான்எனக்கு
ஆய் நினைந்து அருள்செயும் அப்பனை[35]

என்பர் கலியன். கன்றானது எப்போதும் தன் தாயையே நினைத்துக் கொண்டிருக்குமாப்போலே உலகுக் கெல்லாம் தாயாகிய தன்னையே தானும் (ஆழ்வாரும்) நினைத்திருக்கு மாறு செய்தவன் என்கின்றார்.

நித்தியவிபூதியாகிய பரமபதத்தில் இவனுக்கெனத் தனி யான திவ்வியமங்கள உருவம் உண்டு.

33. தத். ஈசுவரப்—29
34. திருவாய். 3.5:10
35. பெரி.திரு. 7.3:2

கண்கள் சிவந்து பெரியவாய்
வாயும் சிவந்து கனிந்துள்ளே
வெண்பல் இலகுசுடர், இலகு
விலகு மகர குண்டலத்தன்,
கொண்டல் வண்ணன், சுடர்முடியன்,
நான்கு தோளன், குனிசார்ங்கன்
ஒன்சங்கு கதைவாள் ஆழியான் ஒருவன்[36]

என்ற பாசுரப் பகுதியில் இத்திரு மேனி காட்டப்பெறுகின்றது. இந்த உருவம் ஈடும் எடுப்பும் அற்ற பேரொளியினை உடையது; பேரழகு வாய்ந்து கண்டாரை ஈர்ப்பது. "பயிலும் சுடர்ஒளி மூர்த்தி; பங்கயக் கண்ணன்"[37], "மாசறுசோதி என் செய்யவாய் மணிக் குன்றம்"[38] என்று இவ்வுருவத்தின் அழகில் நெஞ்சைப் பறிகொடுத்த ஆழ்வார்களின் கூற்றுகளைப் பாசுரங்களெங்கும் காணலாம். இந்த உருவத்துடன் பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார், நீளாதேவி ஆகியோருக்கு நாயகனாக இருப்பவன். இதனை,

இன்துணைப் பதுமத்து அலர்மகள் தனக்கு
இன்பன் நல்புவிதனக் கிறைவன்
தன்துணை ஆயர் பாவைநப் பின்னை
தனக்கிறை[39]

என்ற பரகாலரின் வாக்கால் அறியலாம்.

**இறைவனின் ஐந்து நிலைகள்:** இறைவனுடைய திவ்விய மங்கள உருவம் பரம், வியூகம், விபவம், அந்தர்யாமி, அர்ச்சை என ஐந்து நிலைகளில் இருக்கும். பரத்துவம் என்பது, காலம் நடையாடாததும் ஆனந்தம் அளவிறந்து ஒப்பற்றதாயும் உள்ள நித்திய விபூதியில் (வைகுந்தத்தில்) இருக்கும் பரவாசுதேவனின்

36. திருவாய் 8.8:1
37. ஷெ 3.7:1
38. ஷெ 5.3:1
39. திரு, 2.3:5

இருப்பு. வியூகம் என்பது, பரவாசுதேவன் லீலாவிபூதியில் (இந்த உலகில்) அதன் படைப்பு அளிப்பு அழிப்பு இவற்றை நடத்துவதற்காகவும், சம்சாரிகட்கு வேண்டியவற்றை ஈந்து வேண்டாவற்றைப் போக்கி அவர்களைக் காத்தற்பொருட்டும், வீடுபேற்றினை விரும்பித் தன்னை இடையறாது உபாசிப்பவர் கட்கும் (நினைப்பவர்கட்கும்), அவர்களது தளைகளைப் போக்கித் தன்னை வந்தடைவதற்குக் காரணமான பேரருளைச் சுரப் பதற்காகவும், வியூகவாசுதேவன், சங்கர்ஷணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்ற பெயர்களுடன் வடிவங் கொண்டு இருக்கும் நிலை. இவற்றுள் வாசுதேவ வடிவமான பரத்துவத்தில் ஞானம், சக்தி, பலம், ஐசுவரியம், வீரியம், தேஜஸ் என்ற ஆறுகுணங் களும் நிறைந்திருக்கும். ஏனைய மூன்றிலும் அவரவர் மேற் கொண்ட செயலுக்குத் தக்கவாறு ஒவ்வொன்றிலும் இரண்டி ரண்டு குணங்கள் விளக்கம் பெற்றிருக்கும்.

**கிளை வியூகங்கள்:** மேற்குறிப்பிட்ட நான்கு வியூகங்களும் ஒவ்வொன்றும் மும்மூன்றாகப் பன்னிரண்டு கிளை வியூகங் களாகப் பிரியும். வியூகவாசுதேவனிடத்துக் கேசவன் நாரா யணன், மாதவன் என்ற கிளைகளும்; சங்கர்ஷணனிடம் கோவிந்தன், விஷ்ணு, மதுசூதன் என்பவைகளும்; பிரத்யும்னனி டத்து திரிவிக்கிரமன், வாமனன், சிரீதரன் என்பவைகளும்; அநிருத்தனிடத்து இருடிகேசன், பத்மநாபன், தாமோதரன் என்பவைகளும் தோன்றி அவ்வப் பெயர்களைப் பெறும்[40]. இவை யாவும் பன்னிரு திங்களின் தலைவர்களாக இருக்கும். இவற்றின் அறிகுறியாக வைணவர்கள் தம் உடலில் துவாதசமாகத் திரு மண் காப்பிட்டுக் கொள்வர். இப்பன்னிரு திருமண்காப்பும் வைணவர் திருமேனியில் மேற்சொன்ன பன்னிருவரும் அதிட்டித் திருக்கும் இடங்களைக் குறிக்கும்.

**விபவம்:** விபவ அவதாரங்கள் எண்ணிறந்தவை; யாவும் பகவானது இச்சையாலே வந்தவை. இவை ஆதிஅம் சோதி

40. 2.7. (பன்னிரு திரு நாமப்பாட்டு).

உருவை அங்கு வைத்து இங்குப் பிறந்தவையாதலின், பிறப்பு இறப்பு அற்றவனான இறைவனது தன்மைகளைக் கொண்டவை. இந்த அவதாரங்கள் யாவும் ஆழ்வார்களின் பாசுரங்களில் குறிப் பிடப் பெறுகின்றன. ஒரு திருப்பதிகத்தில்[41] திருமங்கையாழ் வார் அவதாரங்களில் ஈடுபட்டுப் பேசுவதைக் காண முடிகின்றது. இதில் ஒன்று:

துணைநிலை மற்றெமக்கு ஓர்உள தென்றிராது
தொழுமின்கள், தொண்டர்! தொலைய
உணமுலை முன்கொடுத்த உரவோனது ஆவி
உகஉண்டு, வெண்ணெய் மருவி,
பணைமுலை ஆயர்மாதர் உரலோடு கட்ட,
அதனோடும் ஓடி, அடல்சேர்
இணைமருது இற்றுவீழ நடைகற்ற தெற்றல்
வினைப்பற் றறுக்கும் விதியே.[42]

இது கிருஷ்ணாவதாரத்தில் ஆழ்வார் ஆழங்காற் பட்ட தைக் காட்டுவது. மச்சம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமன - திரிவிக்கிரமன், பரசுராமன், இராமன், ஹம்ஸம் - அவ தாரங்களைக் கூறும் பாசுரங்கள் இப்பதிகத்தில் உள்ளன. திரு மங்கையாழ்வார் அவதாரங்களில் ஈடுபட்டதைப் பல்வேறு இடங்களிலும் காணலாம்.

பற்றலர் வீயக் கோல்கையில் கொண்டு
பார்த்தன்தன் தேர்முன் நின் றானை
சிற்றவை பணியால் முடிதுறந் தானை
திருவல்லிக் கேணிக்கண் டேனே[43]

இதில் அர்ச்சாவதாரத்தில் ஈடுபட்ட நிலையில் கிருஷ்ணாவதாரம், இராமாவதாரம் இவற்றில் ஈடுபடுகின்றதைக் காண்கின்றோம். பெரும்பாலும் இராமாவதாரத்திலும் கிருஷ்ணாவதாரத்திலும் அதிகமாகவும், வாமனம், நரசிம்மம், வராகம் முதலியவை அவற் றுக்கு அடுத்துக் குறைவாகவும் குறிப்பிடப்பெற்றுள்ளன. முன்

41 பெரி. திரு. 11. 4

42 ஷை. 11. 4: 9

43 ஷை. 2. 3: 1

னவை மக்களிடையே தோன்றி அதிகக் கால அளவு பழகினமை யே இதற்குக் காரணமாகக் கொள்ளலாம். இதன் காரணமாக இறைவனின் மங்கள குணங்களை மக்கள் அநுபவிப்பதற்கு வாய்ப்புகள் மிக்கு இருந்தன. ஆகவே, ஆழ்வார்களும் அவற்றில் அதிகமாக ஈடுபட்டுப் பேசுகின்றனர்.

அந்தர்யாமித்துவம்: சேதநர்களின் உள்ளேபுக்கிருந்து எல்லாச் செயல்கட்கும் தான் ஏவுபவனாக இருப்பதோடு, அவர்கட்குத் தியான ருசி பிறந்தபோது தியானத்திற்கு உரியனாவதற்காகவும், அவர்களைக் காப்பதற்காகவும், அழகே வடிவெடுத்தாற்போன்ற மங்களகரமான திருமேனியுடன் எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவனாய், பெரியபிராட்டியாரோடு கட்டைவிரல் அளவாக ஒவ்வொருவர் இதய கமலத்துக்குள்ளே எழுந்தருளியிருக்கும இருப்பே இந்த நிலையாகும்.

கல்லும் கனைகடலும்
வைகுந்த வான்நாடும்
புல்லென்று ஒழிந்தனகொல்
ஏபாவம் வெல்ல
நெடியான் நிறங்கரியான்
உள்புகுந்து நீங்கான்
அடியேனது உள்ளத்து
அகம் 44

என்று நம்மாழ்வார் பேசுவது இந்த நிலையையே யாகும்.

அர்ச்சாவதாரம்: அர்ச்சாவதாரம் என்பது,

'தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம்' 45

என்ற பொய்கையார் பாசுரப்படி அன்பர்கள் எதைத் தனக்குத் திருமேனியாகக் கொள்கின்றனரோ அதனைய இறைவன் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் இன்னாரிடத்தில் தோன்றி சந்நிதி பண்ணவேண்டும் என்கின்ற நியமமில்லாதபடி தான் விரும்பிய எந்த இடத்திலும் எந்தக்காலத்திலும் எவரிடத்திலும் தோன்றிச்

44. பெரிய திருவந். 68
45. முதல் திருவந். 44

சநநத பண்ணி நீராட்டம், தளிகை, இருப்பு முதலிய எல்லாச் செயல்களையும் உடையவனாகக் கொண்டு திவ்விய தேசங்களிலும் அன்பர்களின் திருமாளிகைகளிலும் எழுந்தருளியிருக்கும் நிலை இது. உலகியலில் மண்டியிருப்போருக்குத் தன்பக்கம்ருசி உண்டாக்குதலும், ருசிபிறந்தபிறகு தன்னைத் துதிப்பவர்களுடைய கண்ணுக்கும் நெஞ்சுக்கும் இனிதாம்படி போக்கியத்திற்கு இடமாயிருத்தலும், தன்னை உபாயமாகப்பற்றும் அளவில் எல்லா உலகினரும் உபாயமாகப் பற்றுதற்குத் தகுதியாயிருத்தலும், பரமபதத்தில்போய் அநுபவிக்க வேண்டாமல்,

அண்டர் கோன்அணி
அரங்கன்என் அமுதினைக்
கண்ட கண்கள்,மற்
றொன்றினைக் காணாவே.[46]

என்று திருப்பாணாழ்வார் அநுபவித்தவாறு அநுபவிக்கத்தக்கதாக இருத்தலும் இந்த அர்ச்சாவதாரத்தில் முற்றுப் பெற்றிருக்கும். எல்லா ஆழ்வார்களும் இந்த அர்ச்சாவதாரத்தில்தான் அதிகமாக ஈடுபட்டுப் பேசுவர். சுருங்கக் கூறினால் நாலாயிரத்தின் பாசுரங்கள் யாவும் இந்த அவதாரத்தைப்பற்றியனவே யாகும்.

பிள்ளை உலக ஆசிரியரின் விளக்கம்: மேற்குறிப்பிட்ட இறைவனின் ஐந்து நிலைகளையும் உவமைகள் மூலம் அழகாக விளக்குவர் பிள்ளை உலக ஆசிரியர்.

> "பூகதஜலம்போலே அந்தர்யாமித்துவம்; ஆவரண ஜலம் போலே பரத்துவம்; பாற்கடல்போலே வியூகம்; பெருக்காறு போலே விபவம்; அதிலே தேங்கின மடுக்கள்போலே அர்ச்சாவதாரம்."[47]
>
> [பூகதம் – பூமிக்குள்ளே இருக்கின்றன; ஆவரணம் – மூடிக் கொண்டிருப்பது].

46. அமலனாதிபிரான் - 10
47. ஸ்ரீவசன. பூஷ. 42

இந்த வாக்கியத்தில் பரத்துவம் முதலான எம்பெருமான் நிலைகளின் அருமையையும் அர்ச்சாவதாரத்தின் எளிமையையும் எடுத்துக்காட்டுகளின்மூலம் விளக்குவர் இந்த ஆசாரியப் பெருமகனார். இதனை ஈண்டு விளக்குவது இன்றியமையாததாகின்றது.

தண்ணீர் வேட்கை கொண்டவனுக்கு வேறு இடங்கட்குச் செல்லவேண்டாதபடி தண்ணீர் தான் நிற்கும் இடத்தில் பூமிக்கடியில் இருந்தாலும் கொட்டும் குந்தாலியும் கொண்டு கல்லினால் அல்லது குடிக்கக் கிடைக்காதிருப்பதுபோல, 'எம்பெருமானைக்கண்டு பற்ற வேண்டும்' என்ற அவா இருந்தும் 'கட்கிலீ'[48] என்று நம்மாழ்வார் குறிப்பிட்டபடி கணகளால் காணமுடியாதபடி அட்டாங்க யோக முயற்சியால் மட்டிலும் கண்க்கிட்டுபவன் அந்தர்யாமித்துவ நிலையிலுள்ள இறைவன். "அப்பால் முதலாய் நின்ற அளப்பரிய ஆரமுது"[49] என்று பரகாலர் கூறியபடி இந்த லீலாவிபூதி (படைப்பு அழிப்பு முதலான விளையாட்டிற்குரிய உலகங்களுக்கு) அப்பாற்பட்டிருப்பவன பரத்துவநிலை எம்பெருமான். அப்படி மிக்க நெடுந்தூரம் அன்றியே இந்த உலகின் எல்லைக்குள்ளே இருப்பினும், "பாலாழி நீ கிடைக்கும் பண்பே யாக கேட்டேயும்"[50] என்று சடகோபர் கூறுகின்றபடி கேட்டிருக்கும் என்ப தன்றிச் சென்று காண அரிதாம்படி இருப்பவன் வியூக நிலை எம்பெருமான்.

மிக அண்மையிலிருந்தும் வெள்ளம் வருங்காலத்தில் இருந்தவர்கட்கு மட்டிலும் பருகும் படியாய் வேறுகாலங்களில் இருப்பவர்கட்குப் பருகுவதற்கு அரிதாய் இருக்கும் பெருக்காறு போறுலே" மண்மீது உழல்வாய்"[51] என்று நம்மாழ்வார் கூறுவது போல் பூமியிலே அவதரித்துச் சஞ்சரித்தும் அக்காலத்தில் வசித்தவர்கட்கு மட்டிலும் அடையத்தக்கவர்களாய்ப் பிற்காலத்தில் உள்ள இவனுக்குக் கிட்டாதபடி இருப்பவர்கள் விபவநிலை

48. திருவாய். 7. 2: 3
49. திருநெடுந். 14
50. பெரிய. திருவந். 34
51. திருவாய். 6. 9: 5

எம்பெருமான்கள். மேற்கூறிய எம்பெருமான்கள் போலன்றி, காண்பதற்குத் தேசத்தாலும் காலத்தாலும் கரணத்தாலும் கிட்டுவதற்குச் சேயதாயன்றி, கோயில்களிலும் வீடுகளிலும் என்றும் ஒக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி "பின்னானார் வணங்கும் சோதியாக"[52] இருப்பவன் அர்ச்சாவதார எம்பெருமான். பலஇடங்களிலும் எழுந்தருளியிருக்கும் நிலைகளை நினைந்து "மடுக்கள்" என்று பன்மையாக அருளிச் செய்தார். அவதாரங்களின் குணங்கள் எல்லாம் அர்ச்சையினிடத்திலே குறைவற்று நிறைந்திருப்பதாலும் அவதாரங்களின் திருவுருவங்களை அர்ச்சை வடிவமாகப் பல இடங்களில் மேற்கொண்டிருப்பதாலும் "அதிலே தேங்கின மடுக்கள்போலே" என்று குறிப்பிட்டார் இந்த ஆசாரியப் பெருமகனார். இந்த ஐந்து நிலை எம்பெருமான்களையும் மிகத் தெளிவாக விளக்கின ஆசாரியப் பெருமகனாரைப் போற்றுகின்றோம்; பாராட்டுகின்றோம்.

இறையநுபவம்: பக்தியினால் எப்பெருமானை அநுபவத்தல் பலவகைப்பட்டிருக்கும். அவனுடைய திருநாமங்களைச் சொல்லி அநுபவத்தல், அவனுடைய வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவன் உகந்தருளின திவ்விய தேசங்களின் வளங்களைப் பேசி அநுபவித்தல், அங்கே அபிமானமுள்ள அடியவர்கள்களின் பெருமையைப் பேசி அநுபவித்தல் என்று இப்படிப் பலவகையாக நடைபெறும் இறையநுபவம் திருமங்கையாழ்வாரின் பாசுரங்களை ஊன்றிப் படிப்போர் அவர் எம்பெருமானை இப்படியெல்லாம் அநுபவித்து மகிழ்ந்ததை அறியலாம்.

திருமங்கையாழ்வாரின் பாசுரங்களை ஊன்றிப் படிப்போர் அவர் எம்பெருமானை இரண்டு வழிகளில் அநுபவிப்பதை நன்கு அறியலாம். ஒன்று: தாமான தன்மையிலிருந்து கொண்டு எம்பெருமானை அநுபவித்தல்; இரண்டு: பிராட்டியின் தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பெண்பேச்

52. திருநெடுந். 19

சாகப்பேசி அநுபவித்தல். இவற்றைத் தனித்தனியே காண்போம்.

தரமான தன்மையில்: இதனைப் பல்வேறு விதங்களில் அநுபவித்பதைப் பாசுரங்களைப் பயிலுங்கால் அறியலாம். இதனை நிரலே விளக்க முயல்வேன்.

**திவ்வியதேச அநுபவம்:** திருமணங் கொல்லையில் எம்பெருமானால் திருமந்திர உபதேசம் பெற்ற திருமங்கையாழ்வார் திவ்வியதேசங்களைச் சேவிக்கும் நோக்கத்துடன் நாராயணன் நரனுக்கு உபதேசம் செய்த இடமாகிய வதரிக்கு முதலில் சென்றதை சென்ற சொற்பொழிவில் குறிப்பிட்டதை ஈண்டு நினைவுகூரவேண்டுகின்றேன். திவ்விய தேசங்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமான்கள் யாவரும் அர்ச்சாவதார மூர்த்திகள் ஆவார்; விபவாவதார மூர்த்திகளும் அர்ச்சை வடிவில்தான் எழுந்தருளியுள்ளனர். செளலப்பியத்திற்கு எல்லை நிலம் அர்ச்சாவதாரமாதலால்[53] எல்லா ஆழ்வார்களுமே அர்ச்சாவதாரத்தையே அநுபவிக்கிறனர்.

திருமங்கையாழ்வார் அர்ச்சாவதாரத்தை அநுபவத்தில் பல நிலைகளைக் காண்கின்றோம்.

**பிறருக்குஉபதேசம்:** தான்பெற்ற அர்ச்சாநுபவத்தை இவ்வையகமும் பெறவேண்டும் என்று எண்ணிய பரந்த நோக்குடைய இந்த ஆழ்வார் பிறரையும் அந்தத் திருத்தலங்கட்குப் போகுமாறு ஆற்றுப்படுத்துகின்றார்.

மூவாயிர நான்மறை யாளர் நாளும்
முறையால் வணங்க அணங்காய சோதி
தேவாதி தேவன் திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்ர கூடம் சென்றுசேர் மின்களே [54]

என்கின்றார் ஆழ்வார். குலசேகரப் பெருமாளும்,

தில்லைநகர் திருச்சித்ர கூடந் தன்னுள்
அந்தணர்கள் ஒருமூவா யிரவர். ஏத்த

53. முமுட்சு–139
54. பெரி. திரு. 3. 2: 8.

பின்னிணைப்பு-3

பின்னிணைப்பு—3

| | | | |
|---|---|---|---|
| 111 | 9 | Itofactory | Olfactory |
| | 28 | படிப்போரைக் | படிப்போரைப் |
| 114 | 23 | மங்கைமன்னன் | (நீக்குக) |
| 128 | 20 | சுருக்கம்; | சுருக்கம், |
| 133 | 1 | உண்ணால் | உண்ணல் |
| | 18 | சஹகரரி | சஹகாரி |
| 134 | 25 | காரியம் | காரியம். |
| 138 | 4 | வேண்டாவற்றைப் | வேண்டாதவற்றை |
| 139 | 15 | ஆழங்காழ்ப் | ஆழங்கால் |
| 143 | 21 | இறையநுபவம் | இறையநுபவம். |
| 149 | 5 | திருமாங்கை யாழ்வார் | திருமங்கையாழ்வார் |
| 152 | 13 | தசித்து | ஓசித்து |
| 157 | 12 | வெளிப்படுத்தும், | வெளிப்படுத்தும். |
| 171 | 27 | நியமாக்கப்படும் | நியமிக்கப்படும்- |